விசாகதத்தர்

# முத்ரா ராக்ஷஸம்

மொழியாக்கம்

## வித்வான் இ. கே. நடேச சர்மா




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

விசாகதத்தர்

# முத்ரா ராக்ஷஸம்

(வீரச்சுவை ததும்பும் அரசியற்கலை நாடகம்)

(ஆசிரிய நடைத்து)

மொழிப்படுத்தவர்

வித்யாபாஸ்கர

**வித்வான் இ. கே. நடேச சர்மா**, B.O.L.,

Lecturer in Tamil, Loyola College, Madras.

பன்மொழிப்புலவர்

**தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்**, M.A., B.L., M.O.L.

முன்னுரையுடன் கூடியது




**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**

**INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES**

**சென்னை - 600 113**

# BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title | : | Mudra Rakshasam |
| Subject | : | Tamil<br>Translation of the Sanskrit Drama |
| Editor | : | Sri. E.K. Natesa Sarma |
| Publisher & Copyright | : | International Institute of Tamil Studies,<br>C.P.T. Campus, Adyar, Chennai - 600 113. |
| Publication No. | : | 385 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | 2000 |
| Edition | : | Reprint |
| Paper Used | : | 18.6kg T.N.P.L. Super Printing |
| Size of the Book | : | 21x14cms |
| No. of Copies | : | 1200 |
| No. of Pages | : | xxxii + 144 = 176 pages |
| Price | : | Rs. 40-00 |
| Printed at | : | United Bind Graphics<br>101-D, Royapettah High Road<br>Chennai - 4. ✆ : 4984693, 4661807 |

Published with the Financial Assistance given by the Directorate of Tamil Development
Govt of Tamil Nadu under the scheme of "Grants for Good Translation works"

**முனைவர் ச. சு. இராமர் இளங்கோ**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

## அணிந்துரை

விசாகதத்தர் வடமொழியில் எழுதிய வரலாற்று நாடகம் முத்ரா ராக்ஷஸம். முத்ரா ராக்ஷஸ என்ற வடமொழிச் சொல்லுக்குத் தமிழில் முத்திரைக்கணையாழி என்பது பொருள். இந்நாடக நூலுக்கு மகாதேவ கவி என்பவர் உரை எழுதியுள்ளார். விசாகதத்தர் மகாராசா பாசுகரதத்தர் என்பவரின் மகன் ஆவார். இந்நாடகத்தில் மிலேச்சர் என்ற சொல் இடம்பெற்றுள்ளது. இம்மிலேச்சர் என்ற சொல் காஸ்னி, கோரி ஆகிய முசுலீம் மன்னர்களைக் குறித்திருக்கலாம் எனப் பேராசிரியர் வில்சன் எழுதியுள்ளார். எனவே அவர் விசாகதத்தரின் காலம் கி.பி. *11* ஆம் அல்லது *12* ஆம் நூற்றாண்டு என்று கூறியுள்ளார்.

கி.பி. *10* ஆம் நூற்றாண்டில் தோன்றிய நாடக இலக்கண நூலான தசரூபகத்தில் விசாகதத்தரின் முத்ரா ராக்ஷஸம் குறிக்கப்பட்டுள்ளது. எனவே விசாகதத்தரின் காலம் கி.பி. *8* ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டது என்பர் அறிஞர்.

ஆகவே பேராசிரியர் வில்சன் தெரிவித்துள்ள விசாகதத்தரின் காலம் பற்றிய கருத்துத் தவறானது.

முத்ரா ராக்ஷஸம் எனும் இந்நாடகம் வரலாற்று நாடகமாகும். வரலாற்று மாந்தன் சாணக்கியனைத் தலைவனாகக் கொண்டு எழுதப்பட்டதாகும். ராட்சசன், சந்திரகுப்தன் முதலிய வரலாற்று மாந்தர்கள்இந்நாடகத்தில் இடம்பெற்றுள்ளனர்.

நந்தவம்சத்தைச் சார்ந்த சருவார்த்தசித்தி எனும் மன்னன் பாடலிபுத்திரத்தைத்(**Patna**) தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தான். அவருடைய அமைச்சன் பெயர் ராட்சசன். அவன் அரசியல் சூழ்ச்சி செய்வதில் வல்லவன். அவனுடைய சூழ்ச்சியைச் சாணக்கியன் முறியடித்து மௌரிய வம்சத்தைச்சார்ந்த சந்திரகுப்தனை அரசனாக்குகிறான். உணவு விடுதி ஒன்றில் சாணக்கியனுக்கு ஏற்பட்ட அவமானத்தால் நந்த வம்சத்தைப் பூண்டோடு ஒழித்து மௌரிய வம்சத்தைச்சார்ந்த சந்திரகுப்தனை ஆட்சிக் கட்டிலில் அமர்த்துகிறான்.

சாணக்கியனுக்கு நம்பிக்கைக்குரிய நண்பர்கள், ஒற்றர்கள் இருந்தனர். மேலும் விதியை மதியால் வெல்லலாம் என்ற நம்பிக்கை உடையவன் சாணக்கியன். சாணக்கியனுக்கு எதிரான ராட்சசன் சிறந்த அறிஞன். அவனுடைய அரசியல் சூழ்ச்சியைக் கண்டு சாணக்கியன் வியக்கிறான். ஆயினும் அவன் விதியின்மேல் ஆழ்ந்த நம்பிக்கையுடையவன். வெற்றி தோல்விகள் அனைத்தும் விதி வழியே நடக்கின்றன என்ற கருத்து உடையவன். எனவே சாணக்கியன் சூழ்ச்சியை வெற்றிகொள்ள இயலாதவனாக ஆகிறான். இவ்வாறு இரு அறிவு வாணர்களுக்கும் இடையே நடந்த பேராட்டத்தை மையமாகக் கொண்டு இந்நாடகம் எழுதப்பட்டுள்ளது.

இரு மன்னர்களும் பெரும் படையெடுப்பு நடத்திப் போரிடவில்லை. மாறாக அமைதியான முறையில் துளிகூட இரத்தம் சிந்தாமல் ஒரு மாபெரும் போரைச் சாணக்கியன் தன் அறிவாண்மையால் செய்து வெற்றிபெறுகிறான்.

வடமொழி நாடகங்களில் காதல்சுவை இடம்பெற்றிருக்கும். ஆயின் இந்நாடகத்தில் காதல்சுவை இடம்பெறவில்லை. இந்நாடகத்தில் நாடகத் தலைவி எவரும் இல்லை. அந்த வகையில் இந்நாடகம் புதுமையானதாகும். நாடக மாந்தர்களுக்கு ஏற்றவாறு உரையாடல்கள் இடம் பெற்றுள்ளன. மேலும் இந்நாடகத்தில் உவமைகள், உருவகங்கள், கலைத் தன்மை கொண்டு விளங்குகின்றன. மிருச்சகடிக நாடகத்தின் சாயல் இந்நாடகத்தில் உள்ளது என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

வடமொழி நாடகங்களில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை சாகுந்தலம், மிருச்சகடிகம், முத்ரா ராக்ஷஸம், உத்தரராம சரிதம் முதலியவையாகும். அவற்றுள் சாகுந்தலம் எனும் நாடகத்தை மறைமலையடிகளும் ரா. ராகவய்யங்காரும் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்கள். . மிருச்சகடிகம் எனும் நூலைப் பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் மண்ணியல்சிறுதேர் என்ற தலைப்பில் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். முத்ரா ராக்ஷஸம் என்னும் இந்நாடக நூலை இலயோலா கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றிய வித்துவான் இ. கே. நடேச சர்மா அவர்கள் *1950*ஆம் ஆண்டு முதன் முதலில் தமிழில் செய்யுள் வடிவில் மொழிபெயர்த்துள்ளார்.

நடேச சர்மா இந்நாடகத்தை ஏறத்தாழ *7000* அகவலடியில் எழுதியுள்ளார். இந்நாடகத்தில் நேரிசையும், நிலைமண்டிலமும் மிகுதியாகவும், இணைக்குறளும் வஞ்சிப்பாவும் குறைவாகவும் இடம்பெற்றுள்ளன.

இம்மொழி பெயர்ப்பு நூல் மூலநூலோடு வைத்து எண்ணத்தக்க வகையில் சிறப்பாக அமைந்துள்ளது. நாடக மாந்தர்களுக்கு ஏற்ற உரையாடல்கள் அமையப்பெற்றுள்ளன. நெஞ்சில் என்றும் நிலைக்கத்தக்க தொடர்களும் இடம் பெற்றுள்ளன. பல்கலைச் செல்வர் தெ.பொ. மீ. அவர்கள் இந்நூலுக்கு ஆங்கிலத்தில் அணிந்துரை எழுதியுள்ளார்.

தமிழ் வளர்ச்சித்துறை சிறந்த மொழிபெயர்ப்பு நூல்கள் வெளியிட நிதியளித்து வருகிறது. அந்த வகையில் இந்த நூலையும் மறுபதிப்புச் செய்ய தமிழ் வளர்ச்சித் துறை நிதி வழங்கியுள்ளது. இந்நூலை வெளியிட நிதி நல்கிய தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் முனைவர் ம. இராசேந்திரன் அவர்களுக்கு நன்றி.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் காட்டிவருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி - பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத் துறை அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் திரு. சு. இராமகிருட்டிணன் இ.ஆ.ப அவர்களுக்கும் எங்கள் நன்றி. மெய்ப்புத் திருத்திய முனைவர் இராசேசுவரிக்கு எங்கள் நன்றி.

இந்நூலினை நல்லமுறையில் அச்சிட்டுத்தந்த யுனைடெட் பைண்டு கிராபிக்ஸ்க்கும் எங்கள் நன்றி.

**இயக்குநர்**

# AN APPRECIATION

My friend Sri E. K.. Natesa Sarma of Loyola College has brought out a metrical translation in Tamil of the classical drama MUDRA RAKSHASA. The original is one of the few great dramas in Sanscrit. The complication of the original story of the drama frightens an ordinary reader. But the classics are not for lazy newspapermongers. The generation, which is slowly ebbing away, got by heart the names of the insignificant skirmishes, the high-sounding battles of the so called wars of the Roses, whilst condemning as ununderstandable the moves and counter-moves of Chanakya and Rakshasa, the two great masterminds of political art. This state of affairs is already changing. As depicting the most glorious period of Indian History; the drama is bound to grow in popularity.

Without an intimate knowledge of our classical contribution, our education can never be perfect. This has been realised both in the East and the West. But at the speed with which the modern man has to run, it is only a limited few who can be blessed with the time and inclination for studying any classical language. As modern educationists have pointed out, a living contact with the classics can be brought about through translations. Hence, there cannot be any two opinions about the great educational contribution that Sri Sarma is making. The Tamilians can be proud of having this translation of Mudra Rakshasa along with their excellent translations of Sakuntala by Maraimalai Adigal and Mahavidwan Raghava Ayyangar and of Mricchakatika by Mahamahopadhyaya Panditamani M. Kathiresa Chettiar.

The original is a hard nut to crack. Fortunately for the Tamil world, the present translation saves us from all the training and toil necessary for understanding the original. The translator has been consulting at every step, experts in Sanscrit language and lore like my good friend Dr. Raghavan and therefore one can rest assured that the sense in the original has been most carefully brought out and preserved in this translation. Often in going through translations, I used to be forcibly reminded of the never-to-be forgotten shakespearean passage "...Bottom! Thou art translated", but I confess, this passage did not occur to me even once when I was reading the present work of Sri Sarma. I am glad, the translator has given us a translation in verse, in keeping with the dignity and majesty of the original which is itself partly in verse.

The author has translated the original prose portions also in Tamil verse. Personally, I would have preferred in these places a translation in prose, if not for any other reasons, at least for being true to the orignical. Sri Sarma could not withstand his overpowering temptation for versification. The Prakrit portions have been in appropriate places translated in the colloquial Tamil dialects, though keeping the verse form of the classical Tamil. This is as it ought to be.

Friends of Sri Natesa Sarma have all been recipients of his epistles in Tamil verse full of interesting translations of Sanscrit names and words and peculiar turns of expressions. That has been his pastime for well nigh a quarter of a century. All that training in this art is clearly visible in the perfection reached in this translation in verse. As I read this work, I feel I hear his selfsame humorous voice with its sly intonations.

I wish the translator every success.

Chintadripet,
Madras.

**T. P. MEENAKSHISUNDARAN**

# பாயிரம்

முப்பத்தைந்தியாண்டுகட்கு முன் திருவையாற்றின் கண்ணுள்ள இரு மொழிக் கல்லூரியில் பேராசிரியராயிருந்த மேதா ஸ்ரீ பண்டித கவிசேகர ராதா மங்கலம் நாராயண சாஸ்திரியாரிடம் முத்ராராக்ஷஸம் என்னும் வடமொழி நாடக நூலை யான் பயின்றேன். அவ்வாசிரியர் பெருந்தகையின் பேரருளே என்னை இத்தமிழ் முயற்சிக்கண் தூண்டியது.

முத்ரா ராக்ஷஸம் என்னும் காட்சி நூலின் நடை, பொருட்செறிவு முதலியவை எவ்வளவு பெரியனவோ அவ்வளவு சிறிது அதனைத் தமிழ்ப் படுத்திய என் தகுதி. நல்லவா நாணமறியா தன்றோ? 1946-ஆம் ஆண்டு சனவரித் திங்களில் தொடங்கிய இக் காட்சிநூல் அவ்யாண்டு மார்ச்சு மாதத்தேயே முற்றுப் பெற்றது. தமிழ்மொழிப் படுப்பதன்முன்னர் வடமொழி மூலங்கள், உரைகள், குறிப்புரைகள், மதிப்புரைகள், மகாதேவ கவி எழுதிய உரைநடை முதலியவற்றை நான் நன்கு பயின்றிருந்தமையும் இந்நூல் இனிது முடிந்தமைக்கு ஒரு நல்ல காரணமாயிற்று. ஆனால் மொழிப்படுத்தி வந்தபோது ஊக்கக் குறைவும், அச்சமும், தடுமாற்றமும், இழிவு நிறமும் அடுத்தடுத்துத் தோன்றித் தடை செய்தனவேனும், நூல் திருவருளாலும் குருவருளாலும் இனிது முற்றுப்பெற்றது.

வடமொழிக்கண் நாடகவியல் வரம்பினுக்குட்பட்ட காட்சி நூல்கள் பல. அவற்றுள் சாகுந்தலம், மிருச்சகடிகம், முத்ரா ராக்ஷஸம், உத்தரராம சரிதம் என்பன தலைமை சான்று பலராற் பயிலவும் பெறுகின்றன. அபிஞ்ஞான சாகுந்தலம் பல்லவரத்து மறைமலையடிகளாலும், மகாவித்வான் பாஷா கவிசேகர ரா. ராகவய்யங்கார் ஸ்வாமியவர்களாலும் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கின்றது. மிருச்சகடிகம் என்னும் காட்சிநூலை மகா. மகோ. பாத்தியாய பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியாரவர்கள் மண்ணியற் சிறுதேராக மொழிப்படுத்தார்கள். முத்ராராக்ஷஸம் என்னும் காட்சிநூல் இன்னும் எவராலும் மொழிபெயர்க்கப் பெறவில்லை என்னும் கருத்தால் யான் இந்நூலை எழுதிவரும் போது, இரண்டு சிரோமணி நண்பர்களால் மொழி பெயர்க்கப் பெற்ற தமிழ் முத்ராராக்ஷஸம் பொள்ளெனச் 'சத்தியில்' அச்சேறி வெளிவந்து விட்டது. இதன் போக்கும் என் போக்கும் முற்றிலும் மாறுபட்டிருந்தமையின் என் முயற்சி வறிதும் தடைப்படவில்லை.

வடமொழி மூலங்களைப்போலவே தமிழிலும் விருத்தமும் உரை நடையுமாக அமைத்தல் நல்ல முறைதான். அம்முறை எனக்குப் பெரிதும் எளிதே யாயினும் யாப்பொற்றுமை கருதி இக் காட்சி நூலை ஏறத்தாழ ஏழாயிரம் அகவலடிகளால் முடித்து விட்டேன். நடிக்குநர் தகுதிக்கேற்றபடி அரசர் அமைச்சர் முதலானோர் பேச்சைச் செந்தமிழிலும், ஒரு சில அதிகாரிகள் பேச்சை ஓரிடைப்பட்ட நடையிலும், ஏவலர் கொலையாளர் முதலானோர் பேச்சுக்களை வடமொழிப் பிராகிருத நடைக்கேற்பத் தமிழ்க்

கொச்சையகவல் நடையானும் யாத்துள்ளேன். அம்முறையினைச் சிலர் வெறுக்கவும், பலர் விரும்பவுங் கூடுமென்பதை நான் நன்கு அறிவேனாதலின் முழுக்கொச்சையாகவுஞ் செய்யாமல், முழுச் செந்தமிழ் நடையாகவுஞ் செய்யாமல் ஏற்றபெற்றி விட்டிருக்கின்றேன்.

இந் நூல் ஆசிரிய நடையானியன்றது. நேரிசையும் நிலைமண்டிலமும் பெருவரவின. இணைக்குறள் சிறுவரவிற்று வஞ்சிப்பாவும் உண்டு. பிறமொழியிலிருந்து தமிழ்மொழியில் மொழிபெயர்க்கப்பெற்ற ஒரு நூல் நன்றென்று தமிழறிஞராற் கொள்ளப்பெறுமாயின் அஃதொரு பெரும் பேறாகவே கருதல் வேண்டும். கவியென்னுங் கருத்தும் களிப்பும் எனக் கில்லை இவ் யாப்பினை மேற்கொண்டெழுதுதல் எனக்கு எளிதில் இயல்வ தென்னும் ஒன்றனையே அடக்கத்தோடு அறிஞர்க்குத் தெரிவித்துக் கொள்கின்றேன். ஆதலின், அறிஞர் என்னை அன்பொடு திருத்துவராக.

முதனூலொடு ஒப்புநோக்கி அரிய திருத்தங்களைச் செய்து தந்த சென்னைப் பல்கலைக் கழக வடமொழிப் பேராசிரியர் டாக்டர். வே. இராகவனார்க்கும், முதனூற் கருத்துக்கள் தமிழில் இடம் பெற்றனவா என உடனிருந்து ஒப்புநோக்கிய லயோலா கல்லூரித் தமிழாசிரியர் சாரங்கபாணி ஐயங்காரவர்கட்கும், இந் நூலுக்கு அன்புடன் ஒரு முன்னுரை யளித்தூக்கிய புலமைச் சான்றோர் தெ.பொ. மீனாட்சிசுந்தரனார்க்கும், தமிழ் வளர்ச்சி ஒன்றனையே கருதி இதனை உயரிய முறையில் பதிப்பித்த பழனியப்பா பிரதர்ஸுக்கும் என் மனமார்ந்த நன்றியும் பல்லாண்டும்.

ஜயமங்களம்
லக்ஷ்மீபுரம்,
9.10.50.

**இ. கே. நடேச சர்மா**

# நடிக்குநர் : ஆடவர்

1. **சந்திரகுப்தன் மோரியன் விருடலன்** — பாடலிபுத்திரத்துப் புதுமன்னன். சாணக்கியனால் அரியாதனம் பெற்றவன். அவனை ஆசிரியனாகக் கொண்டு அரசியற்கலை பயின்றவன்.
2. **சாணக்கியன் விஷ்ணுகுப்தன் குடிலன் கௌடில்யன்** — ஓர் அந்தண அரசியற் புலமையோன். நந்தர்தம் அரியணையைச் சந்திரகுப்தன் பெறத் துணை புரிந்தோன். அவற்கு முதலமைச்சன்.
3. **இராக்கதன்** : நந்தரின் அந்தண அமைச்சன், அரசியற்கலைகளில் வியாழற்கு இணையானவன்.
4. **மலயகேது** : பர்வதகன் மகன். மலையர்க்கு மன்னன்.

   இராக்கதனோடு இணைந்து பாடலிபுரத்தை முற்றுகை செய்தவன்.
5. **பாகுராயணன்** : மலயகேதுவின் உழையனும் நண்பனும். சாணக்கியனின் ஒற்றன.
6. **நிபுணகன் சீவசித்தி சித்தார்த்தகன் சமித்தார்த்தகன்** — சாணக்கியனின் ஒற்றர்.
7. **சார்ங்காவன்** : சாணக்கியனின் மாணவன்.
8. **சந்தனதாசன் சகடதாசன்** — இராக்கதனின் நண்பர்.
9. **விராதகுப்தன் பிரியம்வதகன்** — இராக்க தனின் ஒற்றரும் ஏவலரும்.
10. **வைகீநரன்** : சந்திரகுப்தனின் மெய்ப்பையாளன்.
11. **ஜாஜலி** : மலயகேதுவின் மெய்ப்பையாளன்.

## மகளிர்

1. சந்தன தாசனின் மனைவி.
2. **சோணோத்தரை** : சந்திரகுப்தனின் ஏவற் பெண்டு.
3. **விசயை** : மலயகேதுவின் ஏவன் மகள்.

## நடிக்குநராற் குறிக்கப்பெற்றோர்

1. **நந்தர்** : பாடலிபுத்திர மன்னர் சாணக்கியனாற் கொல்லப் பெற்றவர்.

2. **பர்வதகன், பருவதேசுவரன்** : ஒரு மலைமன்னன்.சாணக்கியனாற் சந்திரகுப்தற்கு நண்பன் ஆனவன்.

3. **சருவார்த்தசித்தி** : நந்தர் தந்தை. இராக்கதனால் அரியாதனம் ஏறப்பெற்றவன். தவமியற்ற வனஞ் சென்றவன்.

4. **வைரோசகன்** : பருவதகன் இளவல். சந்திரகுப்தனிடமிருந்து பாதியரசினைப்பெற்று இராக்கதன் ஏவலரால் சந்திரகுப்தன் என்றெண்ணிக் கொல்லப் பெற்றவன்.

பல அரசர், தலைவர், வைதாளிகர் முதலியோர்.

# கதைச் சுருக்கம்

நந்தரே கலியூழியின் தொடக்கத்தில் மகத நாட்டை ஆண்ட இறுதி அரச குலத்தினர். அவருள் **சருவார்த்தசித்தி** யென்னும் மன்னன் இராக்கத அமைச்சனைத் தலைவனாகக் கொண்ட **வக்கிர மூக்கன்** முதலான ஆற்றல் வாய்ந்த அமைச்சர் துணையால் பல ஆண்டுகள் ஆண்டு வந்தனன். அவ்வமைச்சருள் **இராக்கதன்** என்னும் கூர்மதியந்தணன் ஒருவனே சீர்த்தியும், தலைவர்ப் பத்தியும் உடையனாய் இருந்தான். அவன் அரசியல் தந்திரங்களில் இணையற்ற புலமை வாய்ந்தவன்.

சருவார்த்த சித்திக்கு மனைவியர் இருவர். ஒருத்தி கத்திரிய குலத்துச் **சுநந்தை**. இன்னொருத்தி முரை. அவள் இழிகுலத்துத் தோன்றினாளேனும் கற்பும் பொற்பும் ஒருங்கே உடையள். ஆதலின், மன்னன் அவட்குப் பெரிதும் விருப்புடையன் ஆனான். அந்நாள் ஒருபகல் முனிவன் ஒருவன் அரசனைக் காணவந்தான். வந்த முனிவனை மன்னன் கைநீர் கானீர் ஈந்து வழிபட்டனன்; மகிழ்ந்த முனிவன் மன்னன் பன்னியர் தலைமிசை நீரினைத் தெளித்து வாழ்த்திய காலைச் சுநந்தையின் தலைமிசை ஒன்பான் துளிகளும், முரையின் தலைக்கண் ஒரே துளியுமாக வீழ்ந்தன. முரை அவ்வொரு நீர்த் துளியையும் முனிவன் மீதுள பத்தியொடு தலைவணங்கி ஏற்றாள். முனிவன் பெரிதும் மகிழ்ந்தான். நாட்சில கழிந்தன. அவட்கு நற்குணம் வாய்ந்த நன்மகன் ஒருவன் பிறந்தான். அவனே **மௌரியன்** அல்லது **மோரியன்** என்போன். சுநந்தை முற்றுப்பெறாத. ஒன்பான் இறைச்சிப் பிண்டங்களை ஈன்றாள். அவற்றினை இராக்கதன் எண்ணெய் பெய்த மிடாவினுள் இட்டு விழிப்புடன் வளர்த்துவந்தான். பின்னர் அவற்றினின்றும் ஒன்பான் குழவிகள் உயிர்த்தன. அவர்தமை நந்தரெனத் தந்தை வழங்கினன். குழவிகள் வளர்ந்து காளைப்பருவம் அடையவே தந்தை ஒன்பான் நந்தரிடம் அரசினைக் கொடுத்து மௌரியனைப் படைத் தலைவனாக்கி, முனிவாழ்க்கையை மேற்கொண்டான். மௌரியனுக்கு ஒரு நூறு புதல்வர் பிறந்தனர். அவருள் சந்திரகுப்தனே வலியன். அவன் உடலின் கண்ணே மன்னர்க்கான குறிகள் பல இருந்தன. பலராலும் விரும்பப்பெற்றவனாகவும் வண்மையும் திண்மையும் வாய்ந்தவனாகவும் விளங்கினான்.

நந்தர்க்கு மகப்பேறில்லை. மௌரியன் பிள்ளைப் பேறுபெற்றமை யாலும், நாளுக்கு நாள் மதிப்புப் பெருகிவந்தமையாலும் அவனையும் அவன் புதல்வரையும் இட்டிதான சுருங்கை ஒன்றற்கு அழைத்துப்போகி, அங்கு மந்திராலோசனை செய்வதாக ஒரு போக்குக்காட்டி, அவரனைவரும் உள்ளே இருக்கும்போதே வஞ்சத்தாற் சடக்கெனக் கதவடைத்து, வெளிவந்து, புழுக்கறைப்பட்டோர் உயிர்வாழத் தலைக்கொரு சோற்றுப் பிண்டத்தையும் சில நீர்த்துளிகளையும் நாளும் அருளுடன் இட்டும் ஊற்றியும் வந்தனர். அச்சோற்றானும் நீரானும் சிறையகவர் நன்னர்ச் சூழ்ந்து சந்திரகுப்தன் ஒருவனையே உயிர்வாழ விட்டு, இக்கதியினுக்காளாக்கிய நந்தரைப் பழிக்குப் பழிவாங்குமாறு சொல்லிப் புழுக்கறையில் இருந்தவாறே உண்ணா, பருகா, ஐயகோ பெரும் பிறிதுற்றனர்.

இங்ஙனம் நாட்பல கழிந்தன. ஒருநாள் இலங்கை மன்னன் கடுநோக்குற்றதும், பார்வைக்கு உயிருள்ளது போன்றும் காணப்பெற்ற அரக்குச்சீய மொன்றனைக் கூட்டில் அடைத்து, அக்கூட்டினை ''இக் கூட்டின் கதவினைத் திறவாது உங்களுள் எவன் இச்சீயத்தினை ஓட்டுகின்றானோ அவனே எம்மால் நல்லறிவுடையோன் என மதிக்கப் பெறுவான்'' என்றொரு செய்தியொடு போக்கினான். முன்னரே மௌரியர்மீது பொறாமையும் நறுமொறுப்புங் கொண்ட நந்தர், சுருங்கையுள் உயிரோடிருப்பவர் எவர் என ஆராய்வுழிச் சந்திரகுப்தன் ஒருவனே உயிரோடிருந்தான். அம்மகனை இலங்கை மன்னன் வேண்டுகோளின் வண்ணம் செய்யப் பணித்தனர். சந்திரகுப்தன் நன்றெனச் சொல்லிப் பொள்ளெனக் கூட்டினைக் குறுகி உற்றுப் பார்க்குமளவில் அஃதோர் அரக்குச்சீயமாய் இருத்தல்வேண்டுமெனத் துணிந்தான். உடனே சந்திரகுப்தன் பழுக்கக் காய்ந்த இருப்புத் தடியொன்றனை அதன்பாங்கர் நீட்ட, அம்மாயச்சீயம் இமைப்பிற் கரைந்தோடியது. சந்திரகுப்தன் நல்லியல்புகளையும் புல வலியையும் இச்செயற்கண் வெற்றியையும் கண்ணிற் கண்ட நந்தர் அவனை முன்னிலும் பன்மடங்கு பகைத்து வந்தனர். சந்திரகுப்தனையும் அவன் தந்தையையும் நகரினர் பலரும் விரும்பி வந்தமையால் நந்தர் அவனைக் கொல்லாது விட்டனர்.

ஒருநாட் சந்திரகுப்தன் சனக் முனிவன் புதல்வனும் பொருள் நூலாசிரியனுமான விஷ்ணுகுப்தன் என்னும் அந்தணன் தன்னை நோக்கி வருவதைக் கண்டான். அப் பனவன் அங்கு வரும்போதே ஒரு தருப்பைப்புல் காலிற்பட்டு நடையைத் தடுத்தது. அது கண்ட விஷ்ணுகுப்தன் அத் தருப்பையை வேருடன் பிடுங்கி நெருப்பினிற் பொசுக்கிச் சாம்பராக்கினன். அதனை வியப்புடன் கண்ணிற் கண்ட சந்திரகுப்தன் அத்தகைய அந்தணனே நம் பகைவர் நந்தரையும் வேரறுக்கத் துணையாவான் என்றெண்ணி, அவனைத் தன் ஆசிரியனாகக் கொண்டு நந்தரால்தான் படும் பொறுத்தற்கரிய துன்பங்களையும் எடுத்துச் சொன்னான். அச்சாணக்கியன் வெள்ளி நீதியைக் கரைகண்டவன் என்றும், இணையில்லாத ராசதந்திரி எனவும் பரலாலும் அறியப்பட்டிருந்தான். சாணக்கியன் சந்திரகுப்தனை மாணவனாகக் கொண்டதுமன்றி நந்தரின் அரியணையைப் பெறத் துணைபுரிவதாகவும் வாக்களித்தான்.

ஒருநாள் நந்தரான் அளிக்கப்பெற்ற விருந்தொன்றனுக்குச் சென்று அங்குள்ள தலைமை சான்ற இருக்கை பலவுள் ஒன்றனுள் இருந்தான். நந்தர், இருந்த சாணக்கியனைப் பிடித்திழுத்துப் பிறைவாய்க்கையிட்டு நெட்டினர். அவர்தம் அமைச்சர் 'அங்ஙனம் செய்தல் அடாதெனப்' பன்முறை மறுத்தும் நந்தர் அம்மொழிகளைப் பொருட்படுத்தவில்லை. உடனே, சாணக்கியன் ''நந்தரை அழித்தொழித்துச் சந்திரகுப்தனை அரசனாக்குவேன்'' என்றொரு நெடுமொழி கூறினன்.

நந்தர் முன்னர் மொழிந்த வஞ்சினத்தை நிறைவேற்றச் சாணக்கியன் கச்சை வரிந்தான். முதன்முதலில் இந்துசன்மன் என்னும் தன் நண்பனை

அமண ஆண்டியாக்கி, இராக்கதனும் அவன் வழிச்சார்ந்தாரும் செய்துவரும் வினைகளை ஒற்றாடி அறிந்து வரப் போக்கினான். மிலேச்ச வேந்தன் பருவதகனை நந்தர்மீது போருக்கெழத் தூண்டினான். அங்ஙனம் செய்தால் சந்திரகுப்தன் அரசிற் பாதியைத் தருவதாகவும் வாக்களித்தான்.

சில நாட்களில் பருவதகன் படையும் நந்தர் படையும் கைகலந்தன. அப்போரில் நந்தரும் அவரைச் சார்ந்தாரனைவரும் மாண்டொழிந்தனர். தலைநகரான பாடலிபுத்திரம் பருவதகனுக்கும் சந்திரகுப்தனுக்கும் உரித்தாயிற்று. தலைநகர் பகைவர் கைப்பட்டவுடனே இராக்கத அமைச்சன் நந்தர் தந்தையான சருவார்த்த சித்தியை ஒரு சுருங்கையின் வழியே வெளியேற்றி விட்டான். வெறியேறின அச்சருவார்த்த சித்தியும் சாணக்கியன் ஏவலாற் கொலையுண்டான். அதன் பின்னர் இராக்கதன் சிலநாள் பாடலிபுரம் தங்கிச் சந்திரகுப்தன் உயிருக்கு உலைவைக்கச் சூழ்ந்தான். இதனை அறிந்த சாணக்கியனின் மறு சூழ்ச்சியால் பகைவன் கருதியது கடைபோகவில்லை. அதன் பின்னர் இராக்கத அமைச்சன் சந்திரகுப்தனைக் கொல்ல ஒரு நச்சுக் கன்னியை அனுப்பினான். சாணக்கியன் அக்கன்னியைப் பருவதகன் பாசறைக்குப் போக்க அப்பருவதகன் நச்சுக்கன்னிக் கிரையானான். இன்னும் எத்தனையோ பலர் இராக்கதன் ஏவலால் இப்பணியில் பல மாற்றுவருங்களோடு முயன்றனர். அவற்றை யெல்லாம் சாணக்கியன் நிறைவேறா வண்ணம் அழித்துவிட்டான். இவற்றால் மனம் புழுங்கிய இராக்கதன் பருவதகன் மகன் மலயகேதுவினிடம் ஓடிவிட்டான். அதன் முன்னரே சாணக்கியன் மலயகேதுவைப் பார்த்து 'யானே உன் தந்தை பருவதகனைக் கொன்றேன்' என அச்சுறுத்தி வைத்திருந்ததன் பயனாக, இப்போது இராக்கதனும் வர, இராக்கதன் ஏவலால், அவன் துணையால் இவ்விருவரும் மகதநாட்டைப் படையெடுத்து வென்று சாணக்கிய சந்திரகுப்தர்களைப் பழிக்குப் பழிவாங்க வினைசெய்யலாயினர்.

இங்கேதான் நாடகம் தொடங்குகிறது. 'பொது மக்கள் அனைவரும் இராக்கதனைத் தலைவனாகக் கொண்ட மலயகேது மகதநாட்டின்மீது படையெடுக்கின்றான் என அறிந்தனர்.

---

**குறிப்பு**

1. ஆரியன் என்னும் சொல் அறிவால் குணத்தால் உயர்ந்தோனைக் குறிப்பது. இதன் மறுதலை 'அநாரியன்' என்பது.. இச்சொல் சாதிப்பெயரன்று.

2. நயம், நீதி என்னுமிச்சொற்கள் 'சூழ்ச்சி' என்னும் பொருள் அப்பொருளை இடம்நோக்கிக் கொள்க.

# இந்நாடகத்து வந்துள பெயர்களின் குறிப்பு

## (அகர முதல)

### அபயதத்தன்

பாடலிபுரத்தரண்மனை வைத்தியன். அமைச்சன் இராக்கதனின் ஒற்றன். சந்திரகுப்தற்கு, நஞ்சு கலந்த மருந்தீந்தவன். பொற்கலத்திட்ட மருந்துச் சுண்ணத்தின் வண்ணம் வேறாயது கண்ட சாணக்கியன் அவனையே உண்ணுமாறாணையிட அவனும் அதனை உண்டு அதன் பயனாய்ப் பெரும்பிறிதுற்றவன்.

### இந்துசன்மன்

சீவசித்தி, அமணன், அமண ஆண்டிபதந்தன் எனவரும் இப்பெய ரெல்லாம் இவனையே குறிக்கும். சாணக்கியனின் ஒருசாலை மாணவன். அரசியல், சோதிடம், மந்திரவித்தை கைவந்தவன். அமண ஆண்டியாய் உருக்கொண்டபோது சீவசித்தியாக அறியப்பெற்றவன். இவன் இராக்கதற் கின்னுயிர் நண்பன்போலாயினன். கீழறுத்தற்கு, நாள்கோள் இவற்றின் நிலை களை நன்னர் அறிந்து இராக்கதனையும் படை வீரரையும் தெருட்டியவன். இராக்கதன் ஏவலால் சந்திரகுப்தனைக் கொல்ல நச்சுக்கன்னியைப் படைத்தோன். இராக்கதன் பாடலிப்பதிப் பெயர்ந்ததும் நச்சுக் கன்னியை ஆக்கிய குற்றத்தினுக்காகச் சாணக்கியனால் வெருட்டி யோட்டப் பெற்றவன். இராக்கதன் மலயகேது இவர் தம் படைகள் ஒல்லென உரறிப் பாடலிபுரத்தை முற்றுகையிட்டபோது இராக்கதனைக் கைவிட்டு மலயகேதுவினை அடைந்து, ''நுந்தை பருவதேசுரனைக் கொல்லவென்றே இராக்கதன் நச்சுக் கன்னியை ஆக்கப் பணித்தான். அரசியல் வல்ல அமைச்சன் அதுபோன்றதொரு செயலை இன்றுஞ் செய்யத் தொடங்கியமையின் யான் அவனை வெறுத்துப் பிரிந்து விட்டேன்'' என்று கூறி மலயகேதுவின் மனத்தை மாற்றியவன்.''

### இராக்கதன்

வேந்தன் சருவார்த்தசித்திக்கும் நவநந்தர்க்கும் அமைச்சன். மௌரியனிடத்தும் அவன் புதல்வரிடத்தும் பற்றில்லாதவன். நந்தர் இறக்க, சருவார்த்தசித்தியும் பருவதேசுரனும் கொலையுண்ண, பருவதகன் மகனான மலயகேதுவினைச் சார்ந்து அமைச்சனாகிச் சாணக்கிய சந்திரகுப்தர்களை ஒழிக்கும் வினையில் முனைந்தவன். இராக்கதன் ஆற்றலை உண்மை யாகவே விழைந்த சாணக்கியனால் பல சூழ்ச்சிகளின் வாயிலாய்ப் பிடிக்கப் பெற்றுச் சந்திரகுப்தற்கு அமைச்சனாக்கப் பெற்றோன். சாணக்கியன் சூழ்ச்சி கட்கு மாறாய்த் தான் செய்த சூழ்ச்சிகளனைத்தும் பாழானமை கண்டு மனம் வருந்தியவன். நண்பன்பொருட்டு நல்லுயிரீந்த பெருந்தகை.

**இராகசேனன்**

சந்திரகுப்தனோடு புழுதியாடிய தோழன் பத்திரபடன் போன்ற வினையாளன். (அவன் குறிப்பினைக் காண்க.)

**உரோகிதாக்கன்**

மாளவ மன்னன் மகன். பத்திரபடன் போன்ற வினைப்பாலன் (ஆண்டுக் காண்க).

**கரபகன்**

இராக்கதனின் ஒற்றன். கௌமுதி விழவினைக் குறித்துச் சாணக்கியற்கும் சந்திரகுப்தற்குமிடையே நிகழ்ந்த மாறுபாடு காரணமாக 'சந்திரகுப்தனே ச்ாணக்கியன் துணையின்றித் தன்னந்தனியே அரசு புரிகின்றான்' என்னும் செய்தியை ஒற்றாடி இராக்கதற்குக் கூறியவன்.

**சகடதாசன்**

பாடலிபுரத்தில் காயத்தர் குலத்துப் பிறந்த எழுத்தாளன். இராக்கதற்கு நெருங்கிய நண்பன். சந்திரகுப்த சாணக்கியர்மீது வெறுப்புள்ளவன். சந்திரகுப்தற்கு மாறாகச் செய்திகளைப் பரப்ப இராக்கதனிடமிருந்து பெரும் பொருள் பெற்றவன். சாணக்கியன் அவனொடு நட்புப்பூண்டு ஒற்றனாக்கிய பின், முகமில்லாததும், கையெழுத்தில்லாததுமான எழுத்தொன்றனை எழுதச் செய்து, அவ்வெழுத்தினை இராக்கதன் சந்திரகுப்தனோடு நெருங்கிய தொடர்புடையவன் என்பதற்குச் சான்றாய்ப் பயன்படுத்திக் கொள்கின்றான். சாணக்கியன் ஆணையாற் சிறை புகப்பெற்றுப் பின்னர்க் கொலைத்தண்டம் பெற்றவனாக அறியப் பெற்றவன். சித்தார்த்தகனால் செந்தூக்காய்த் தூக்கிச் செல்லப்பெற்று இராக்கதனிடையே இறக்கிவிடப் பெற்றவன். இராக்கதனால் முத்திரைக் காப்பாளனாக நியமனம் பெற்றவன்.

**சந்தனதாசன்**

பாடலிபுத்திர நகரப் பெருவாணிகர் தலைவன். இராக்கதற்கு ஆருயிரீயத் துணிந்த நண்பன். இராக்கதன் நகரினை நீங்கியபோது அவன் கடும்பினை அடைக்கலமாகப் பெற்றவன். சாணக்கியனின் ஒற்றன். நிபுணகனால் இச்செய்தி அறிவிக்கப் பெற்றபின் சாணக்கியனால் இராக்கதன் குடும்பத்தைத் தன்னிடம் கொடுக்குமாறு வற்புறுத்த, முடியாதென மறுத்தவன். சாணக்கியனால் கொலைத்தண்டம் விதிக்கப்பெற்றுக் கொலைக் களஞ் சென்றபோது இராக்கதன் இதனைக் கேட்டு விரைந்து வந்து சந்திர குப்தனிடத்து முதலமைச்சுப் பதவியை ஏற்று அவனால் விடுவிக்கப் பெற்றவன். இராக்கதனைத் திருத்தி செய்தற்காகச் சாணக்கியனால் வணிகர் தலைவனாக்கப் பெற்றவன்.

## சந்திரகுப்தன்

பாடலி நகர வேந்தன் சருவார்த்தசித்தியின் மகனான மௌரியனின் இறுதி மகன். ஒன்பான் நந்தர்க்கு அவர்தம் சிற்றன்னை முறையின் வயிற்றுப் பிறந்த இளவல். சுருங்கையினின்றும் வெளிப்போந்து அரக்குச்சீயத்தைக் கரைத்தவன். நந்தரின் உணவு மண்டபத்தின் மேற்பார்வையாளனா யிருந்தவன். இந்நிலையில் சாணக்கியனைக் கண்டு அவன் துணையால் ஒன்பான் நந்தரை முருக்கி அவனாலேயே அரியணையேற்றப்பெற்றுச் சக்கரவர்த்தியானவன். இராக்கதன் இவனைப் பலமுறை கொல்ல முயன்றும் முடியாமல் இறுதியில் தானே விரைந்து பாடலிப்பதி வந்து அமைச்ச வாளினைக் கைக்கொண்டு அவற்கே அமைச்சனாகின்றான்.

## சந்திரலேகை

சந்திரகுப்தனின் பிடி. சந்திரகுப்தன் எனப் பலரும் எண்ணுமாறு வைரோசகனைச் சாணக்கியன் ஆணையால் ஏற்றிக்கொண்டு நடுநிசியிற் கோயிற்புகுந்த பிடி. இராக்கதன் ஏவல்பெற்ற வருவரகனே அப்பிடியின் பாகன். அவன் சந்திரகுப்தனைக் கொல்லுதற்காகப் பொற்கழியில் மறைத்து வைத்த குறுவாளை உருவியபோது, தன்னைப் பாகன் புடைக்க முயல் கின்றான் என்றெண்ணி விரைந்து நடக்கின்றது. அப்போது தாருவன்மனால் அரசனைக் கொல்லுதற்கென்றே ஆக்கிய அப்பொன்வளைவு பிடிமீதிருந்த வருவரகன் மீது விழுகின்றது.

## சமித்தார்த்தகன்

சாணக்கியனின் ஒற்றன். சித்தார்த்தகனோடு சாணக்கியன் ஆணை யாற் சந்தனதாசனைக் கொல்லக் கொலையாளனின் வேடந்தாங்கிச் சந்தன தாசனைக் கொலைக்களம் அழைத்துச் சென்றவன்.

## சருவார்த்தசித்தி

நந்த வமிசத்தினன். பாடலிபுர மன்னன். சுநந்தை, முரை என்பாரை மனைவியராகக் கொண்டவன். ஒன்பான் நந்தர்க்கும் மௌரியர்க்கும் தந்தை. சந்திரகுப்தனின் பாட்டன் பாடலிநகர் வீழ்ச்சியுற, மைந்தரான ஒன்பான் நந்தரும் கொல்லப்பெற, தவமியற்றக் காடு சென்றவன். நந்தர் குலத்துள் எவரும் எஞ்சலாகாதென எண்ணிய சாணக்கியன் ஆணையாற் கொல்லப் பெற்றவன்.

## சாணக்கியன்

தென்னாட்டுப் பனவன். நுண்மாண் நுழைபுலமும், முற்றிய கல்வியும், கடுஞ்சினமும் உடையவன். சந்திரகுப்தன் உணவு மண்டப மேற் பார்வையாளனா யிருந்தபோது நந்தர் அவற்கும் அவன் குடும்பத்திற்கும் செய்துவரும் கொடுமைகளை அவன் வாயிலாய்க் கேட்டறிந்தவன். உணவு கொள்ள முதலிருக்கையில் தான் இருந்தபோது நந்தரால் இழுத்துத்

தள்ளப்பெற்றவன். அப்பேரவமானத்தினைப் பொறாது ''பழிக்குப் பழி வாங்குவேன்'' என வஞ்சினங் கூறியவன். சந்திரகுப்தன், பருவதேசுரன் என்னும் வேந்தர் துணையால் நந்தர் குலத்தை வேரறுத்தவன். சந்திர குப்தனை அரியணை யேற்றியதும், இராக்கதன் சூழ்ச்சிகளிலிருந்து தப்ப வைத்ததும், மலயகேதுவைத் துணையாக்கொண்டு இராக்கதன் எடுத்த முயற்சிகளை யெல்லாம் பாழாக்கியதும், இறுதியில் இராக்கதனே தன்னிடம் வந்து முதலமைச்சன் பதவியை யேற்கச் செய்ததும் பிறவும் இச் சாணக்கியனே. இறுதியில் தன் கருத்தெல்லாம் இனிதே முற்றுப்பெற்றமையின், அமைதியொடு தவமியற்றக் காடு சென்றவன்.

### சிங்கநாதன்

மலய மன்னன். சித்திரவன்மனைப் போலப் பணியாற்றியவன்.

### சித்தார்த்தகன்

சாணக்கியனின் பணியாளன். இராக்கதன் நண்பனும் எழுத்தாளனுமான சகடதாசனோடு நெருங்கிய நட்பினைத் தேடிக் கொண்டவன். சகடதாசனால் எழுதப்பெற்ற முகமில் எழுத்தினைப் பெற்று வந்தவன். இராக்கத முத்திரை யிட்ட எழுத்தையும் ஆழியையும் தாங்கிச் சென்றவன். கொலையாளரோடு மந்தண முரைத்துச் சகடதாசனைக் கழுவினின்றும் விடுவித்து, அவனைச் செந்தூக்காகத் தூக்கி இராக்கதனிடம் விட, அந்நன்றிக்காக அவனால் அணிகலன்களைப் பரிசாகப் பெற்றவன். முத்திரையிட்ட பிறகு ஆழியைச் சந்தனதாசன் வீட்டு வாய்தலிற் கண்டெடுத்ததாக இராக்கதன் கையிற் கொடுத்தவன். இராக்கதன் இசைவுபெற்று அவனிடத்தேயே ஆட்செய்தவன். மலயகேது இராக்கதன் இவர்தம் படை பாடலிபுரத்தை முற்றுகையிடுதற்காக அணிவகுத்துச் செல்லுமேல் வையில் முத்திரைச் சீட்டில்லாமல் சேனைக் குழாத்தினின்றும் வெளியேற முயன்றவன். காவலராற் பிடியுண்டு பாகுராயணனாற் பரிசோதிக்கப் பெற்றவன். மலயகேதுவின் ஆணையால் நையப் புடைக்கப்பெற்று இராக்கதன் சந்திரகுப்தற்காகக் கொடுத்த எழுத்தினையும் அணிகலன்களையும் கொண்டு செல்வதாகக் கூறியவன். இவ்வுரையால் இராக்கதற்கு இறப்பத் துன்பத்தினை வருவித்தவன். பாடலிபுரம் போகிச் சமித்தார்த்தகனோடு கொலையாளன் வேடந்தாங்கிச் சந்தனதாசனைக் கொலைசெய்யச் சென்றவன். 'சந்தனதாசற்காக என்னைக் கொல்லுங்கள்' என இராக்கதன் அங்குச் சென்று கூறியபோது, இராக்கதனால் வேண்டப்பெற்றுச் சாணக்கியனை அண்மி 'இராக்கதன் பிடிக்கப் பெற்றனன்' என அவற்கு அறிவித்தவன்.

### சித்திரவன்மன்

குலூத வேந்தன். பருவதேசுரனின் நண்பன். முதற்கண் பருவதகன் சார்பிலும் பின்னர் மலயகேதுவின் திறத்தும் பொருதவன். சாணக்கியன் எழுதிய முகமில் எழுத்தினுட் குறிக்கப் பெற்றவன். இராக்கதனும் சித்திரவன்மனாதிய ஐவரும் சந்திரகுப்தனைச் சார்ந்தவர் என மலயகேது

நம்புவதற்காகவே அவ்வெழுத்து எழுதப்பெற்றதாதலின் அதனையறிந்த மலயகேது, சித்திரவன்மனையும் அவனைச் சார்ந்த அரசர் ஒரு நால்வரையும் கொல்லுமாறு ஆணையிடுகின்றான்.

### சிந்துசேனன்

சிந்து நாட்டரசன். சித்திரவன்மனைச் சார்ந்து அவனைப்போலப் பணியாற்றியவன்.

### சீவசித்தி

அமண வேடத்தாலிப் பெயர் பெற்றவன் (இந்து சன்மனைக் காண்க)

### சுநந்தை

பாடலி நகர வேந்தனான சருவார்த்தசித்தியின் கத்திரிய மனைவி. ஒரு துறவியின் கானீர் தலையிற் புரோக்கணஞ் செய்யப் பெற்றபோது, முரையைப்போல வணங்கி யேலாது அவமதிப் புடனேற்றவள். அதன் பயனாக ஒன்பான் நந்தரையும் முன்னர் ஊன்றடியாகப் பயந்தவள்.

### சேகரசேனன்

மலயகேதுவின் தானைத் தலைவன். பத்திரபடன் முதலானோரால் சந்திரகுப்தன் சாணக்கியன் என்னும் அமைச்சனோடு விள்ளா நட்புப் பூண்டதால் அவனைப் பிரிந்து வந்துவிட்டோம் எனவும், இராக்கத அமைச்சன் மூலமாக மலயகேதுவை அடையத் தாம் விரும்பவில்லை யெனவும், ஆனால் சேனைத் தலைவராகிய உங்கள் வாயிலாகவே மன்னிளங்குமரனை அடைய விரும்புகின்றோம் எனவும் சொல்லப் பெற்றவன். மலயகேது இதன் பொருளறியாது பாகுராயணனைக் கேட்க அவன், ''சாணக்கியனது அநீதிகளைப் பொறாமல் சந்திரகுப்தன் அவனைப் பதவியினின்றும் நீக்கிவிட்டான். சந்திரகுப்தன் நந்த வமிசத்தினன்; ஆதலால் அவனிடம் அமைச்சுப் பதவியை இராக்கதன் ஏற்பினும் ஏற்கலாமெனவும், இராக்கதற்குச் சாணக்கியனே பகைவனன்றிச் சந்திரகுப்தன் அல்லன் எனவும், அதனால்தான் பத்திர படனாதியோர் இராக்கதனைவிட்டுத் தானைத் தலைவன் வாயிலாக உங்களைக் காணவந்தனர்'' எனவும் விடை கூறினன். சித்திரவன்மனாதியோர் மலயகேதுவின் பகைவர் என அறிந்த போது அவர்தமைக் கொலை செய்ய மலயகேதுவால் இச்சேகரசேனன் ஏவவும் பெற்றவன்.

### தனகலசன்

பாடலிபுரத்து மன்னன் கோயிலகத்துள்ள வைதாளிகன். சாணக்கிய சந்திரகுப்தர்க்கிடையே விளைந்த போலிக் கலகத்துள் இராக்கதனால் பெரும்பொருள் பெற்றுச் சந்திரகுப்தன் சினத்தை மூண்டெழச் செய்யும் பாக்களைப் பாடியவன்.

### தனசேனன்

சந்தனதாசன் குடும்பத்தினருள் ஒருவன். சாணக்கியனாற் சந்தனதாசன் அழைக்கப் பெற்றபோது இராக்கதன் குடும்பத்தினரைப் பிறர் அறியா வண்ணம் வெளிப்போக்கியவன்.

### தாருவன்மன்

பாடலி நகரத்துச் சிற்பி. சந்திரகுப்தனை எங்ஙனமேனும் கொல்ல வேண்டுமென இராக்கதனால் ஆணையிடப் பெற்றவன். அவனைக் கொல்லப் பொன்வளைவொன்றும் ஆக்கிவைத்தோன். இம்மாயம் சாணக்கி யனால் அறியப் பெற்றமையின் அவன் வைரோசகனைப் பிடிமேல் ஏற்றி அனுப்ப, அப்பொன்வளைவு வருவரப்பாகன்மீது வீழ்ந்து அவனுயிர் போக்க வினை பாழ்த்தமை கண்ட தாருவன்மன் கரும்பொறகழியினைக் கையில் வாங்கி வைரோசகனைப் புடைத்துக் கொன்றனன். அதனைக் கண்ட வைரோசகனைச் சார்ந்தோரால் கல்லேறுண்டு உயிர்விட்டவன்.

### திங்கராதன்

சந்திரபானுவின் சோதரி மகன். பத்திரபடர்களைப் போலப் பணி யாற்றியவன்.

### நச்சுக்கன்னி

தொட்டாரைக் கொல்லும் இயல்பினள். சந்திரகுப்தனைக் கொல்லுதற் காக இராக்கதன் ஏவலால் இந்துசன்மன் என்னும் சீவசித்தியால் படைக்கப் பெற்ற மாயக்கன்னி. இராக்கதன் சந்திரகுப்தற்கு இக்கன்னியை ஓர் அரும் பெறல் மணியாக அனுப்ப, எப்போதும் விழிப்புள்ள சாணக்கியன் 'அது வன்று செய்தி, முதற்கண் பருவதேசுரன் என்னும் நண்பனே அக்கன்னியை அருளுந் தகுதியுடையான்' என அவனிடைப் போக்க, பள்ளியறையிற் பருவதேசுரன் அவளை ஞெமுங்கப் புல்லிய மறுகணமே அவன் பிணமாய்க் கீழே விழுந்தான். நச்சுக்கன்னியும் மாயமாய் மறைந்தாள். இதனையறிந்த இராக்கதன் இச்செயற்காக எங்கே தன்னைத் தேடிப் பிடித்துவிடுவார்களோ என்னும் அச்சத்தால் அன்றிரவே நகரினை விட்டு ஓடிச்சென்றான். பாகுராயணன் மலயகேதுவைத் தனியே அழைத்து, 'சாணக்கியனே பருவதேசுரன்மீது நச்சுக்கன்னியை ஏவினான், என அவனை அச்சுறுத்தி, அவனை அவன் நாட்டுக்கு வெருட்டி யோட்டிவிட்டான். பின்னர், இந்து சன்மன் மலயகேதுவனிடம் தக்க சமயத்தில் 'இராக்கதனே நுந்தையார்மீது நச்சுக்கன்னியை ஏவியவன்' என ஓங்கிச் சொல்லி இராக்கதனை வெறுக்குமாறு செய்தான்.

### நவநந்தர் அல்லது ஒன்பான் நந்தர்

பாடலி மன்னன் சருவார்த்தசித்தியின் கத்திரிய மனைவி சுநந்தையின் வயிற்றுப் பிறந்த ஒன்பான் புதல்வர். ஊன்றடியாய்ப் பிறந்த இவர்,

இராக்கதனான் நெய்ம்மண்டையிலிடப்பெற்று ஆணுருவாய் உயிர்ப்பிக்கப் பெற்றவர். இராக்கத அமைச்சனிடத்து விள்ளாப் பற்றுடையவர். மௌரியனிடத்தும் அவனது நூறு புதல்வரிடத்தும் உலவா அழுக்காறும் ஐயமுங் கொண்டவர். மௌரியனையும் அவன் பிள்ளைகளையும் சுருங்கையிற் புகுத்திக் கடைகாப்பிட்டவர். சந்திரகுப்தனால் நஞ்சென வெறுக்கப்பெற்றவர். சந்திரகுப்தனை உணவறை மேற்பார்வையாளனாக நியமித்தவர். சாணக்கியனை வெளியில் இழுத்துத் தள்ளியவர். இறுதியில், சாணக்கியன், சந்திரகுப்தன், பருவதேசுரன் என்னுமிம் மூவராலும் பெரும் பிறிதுற்றவர்.

## நிபுணகன்

சாணக்கியனின் ஒற்றன். மதிவலான். எமபடங்காட்டி, ஏழிசைபாடி, ஐயம்புக்கவன். மக்கட் பன்மைக்கு அறனை வலியுறுத்தியவன். சந்தனதாசன் வீட்டுவாய்தலிற் சென்று, இராக்கதன் மனைவி கையினின்றும் நழுவிய முத்திரை ஆழியைப் புறமறியாதே எடுத்துவந்து சாணக்கியற்குக் கொடுத்தவன். இராக்கதனைப் பிடித்தற்கென்றே எழுதிய முகமில்லெழுத்து இவ்வாழியால் இலச்சினை யிடப்பெற்றுச் சித்தார்த்தகன் அதனை எடுத்துப் போகின்றான்.

## பத்திரபடன்

சந்திரகுப்தனுக்குப் பேருதவி புரிந்து உயர்பதவிக்கு வந்தவன். பாகுராயணனும் இத்தன்மையனே. இவ்விருவரும் மன்னரைச் சார்ந்தாருள் முதலிகள். யானைப்படைக்குத் தலைவன். சாணக்கியன் சூழ்ச்சியால் அசதி யிற் சந்திரகுப்தனை விட்டு இன்னுஞ் சிலரையும் உடனழைத்துக்கொண்டு மலயகேதுவை அவன் தானைத் தலைவன் வாயிலாய்ச் சார்ந்தவன். இங்ஙனம் மலயகேதுவினிடமிருந்து இராக்கதனை நீக்கி, மலயகேதுவைத் துணையின்றித் தன்னந்தனியே நிறுத்திவிட்டுப் பாகுராயணன் முதலி யோரைத் துணையாகக் கொண்டு மலயகேதுவை இறுகப் பிணித்துச் சாணக்கியனிடம் கொண்டு வருகின்றான். பின்னர்ச் சாணக்கியன் ஆணையால் மலயகேதுவுக்கு முடிசூட்ட அவனைப் பின்தொடர்ந்து அவன் நாட்டுக்குச் செல்கின்றான்.

## பருவதேசுரன்

மிலேச்ச வேந்தன். சாணக்கியனால் உதவி வேண்டப்பெற்று அவன் தானைத் துணையால் பாடலி நகரைச் சந்திரகுப்தற்காகச் சாணக்கியன் வெல் கின்றான். சாணக்கியன் மிலேச்ச வேந்தர்க்குப் பாதி அரசினைக் கொடுப் பதாக வாக்களித்தபோது இராக்கதன், சூழ்ச்சியால் ஒரு நச்சுக் கன்னியைச் சந்திரகுப்தனைக் கொலைசெய்ய ஏவ, அக்கன்னியைப் பருவதேசுரன்மீது திருப்பியதால் அவன் இறந்துபடுகின்றான். அம்மன்னனின் அணிகலன்கள் இராக்கதனுக்குச் சாணக்கியனால் விற்கப் பெற்றுப் பின்னர் அவ்வணிகலன்

களின் துணையாக இராக்கதன் சந்திரகுப்தனோடு மறைவாய் ஒப்பந்தஞ் செய்துகொண்டவனென மலயகேது அறியுமாறு செய்து விடுகின்றான்.

### பலகுப்தன்

அரச குடும்பத்தினைச் சார்ந்தோன். பத்திரபடனைப் போலப் பணி யாற்றியவன்.

### பாகுராயணன்

தானைத் தலைவன் சிங்கபலன் அல்லது சிங்கபாலனின் தம்பி. சாணக்கியற்கும் சந்திரகுப்தற்கும் நண்பன். சந்திரகுப்தன் அரசனானபோது தானும் பதவி பெற்றவன். முதலிகளுள் ஒருவன். மலயகேதுவுக்கு இன்னோர் இதயம் போன்றவன். பருவதேசுரனைச் சாணக்கியனே கொன்றானென மலயகேதுவை மறைவாய் அழைத்துச் சொல்லி அச்சுறுத்திப் பாதியரசினைக் கொடுபடாமல் தடுத்தவன். பின்னர் மலயகேதுவைச் சார்ந்து அவற்கு அமைச்சனானவன். சாணக்கியன் ஆணையால் மெல்ல இராக்கதற்கும் மலயகேதுவிற்கும் மாறுபாட்டினை உண்டாக்கியவன். இராக்கதன் சந்திர குப்தனோடு மறைவாய் உடன்படிக்கை செய்துள்ளான் என மலயகேதுவை நம்பச்செய்து இராக்கதனை நீக்கும்படி வழிகோலியவன். மலயகேது துணையின்றித் தன்னந்தனியே இருந்தபோது அவனைப் பிடித்துச் சாணக்கியனிடம் கொண்டு வந்தவன். இறுதியாகப் பத்திரபடன் முதலானவர் களோடு மலயகேதுவுக்கு முடிசூட்ட அவனைப் பின் தொடர்ந்து சென்றவன்.

### பிரமோதகன்

சந்திரகுப்த மன்னனின் பள்ளியறைப் பாதுகாவலன். இராக்கதனால் சந்திரகுப்தனைக் கொல்லுமாறு ஏவப்பெற்றவன். இராக்கதனால் நிறையப் பொருள்பெற்றுத் தன் ஆற்றலை மீறிப் பொருட்செலவு செய்துவருங்காலைச் சாணக்கியன் அவன்மீதையங்கொண்டு, எப்படி நீ இவ்வளவு பொருள் பெற்றாய்' எனக் கேட்க, அவன் விடைகூற அறியாது பசபசவென்று விழிக்க, இறுதியில் சாணக்கியனால் அவன் சித்திரவதை செய்யப்படுகின்றான்.

### புட்கராக்கன்

காசுமீரத்து வேந்தன். சித்திரவன்மனைப் போலப் பணியாற்றியவன்.

### புருடதத்தன்

காலாட்படைக்குத் தலைவன். பத்திரபடனைப் போலப் பணி யாற்றியவன்.

### மலயகேது

மிலேச்ச மன்னன். பருவதேசுரனின் மகன். சாணக்கிய சந்திரகுப்தற்கு நெருங்கிய நண்பன். நச்சுக்கன்னியால் தந்தை இறக்கச் சாணக்கியன்

ஏவல்பெற்ற பாகுராயணனால் அச்சுறுத்தப்பெற்று நாட்டிற் கனுப்பப் பெற்றவன். சந்திரகுப்தனைப் பிரிந்துவிட்டோமென்று பாசாங்கு செய்த பாகுராயண பத்திரபடர்களைத் தன்னோடு சேர்த்துக்கொண்டவன். பாகுராயணன் அமைச்சனாகி இராக்கதனைச் சந்திரகுப்தனைச் சார்ந்தவன் என மலயகேதுவை நம்புமாறு செய்யவே, அதனை நம்பி இராக்கதனை வெருட்டி யோட்டியவன். சித்திரவன்மனாதியரிடத்தும் அவநம்பிக்கை பெருகி அவர்தமைக் கொலைசெய்ய ஆணையிட்டவன். தனியே துணை யாருமின்றி நிற்கும் சமயம் பார்த்துப் பாகுராயண பத்திரபடர்கள் மலயகேதுவைப் பிணித்துக் கொணரவே, முதலமைச்சர் பதவியை அப்போதுதான் ஏற்ற இராக்கதனின் மனவமைதிக்காகச் சாணக்கியனால் உயிரையும், இழந்த அரசினையும் பெற்றுப் பாகுராயண பத்திரபடர்களால் அரியாதனமேறி முடிசூட்டவும் பெற்றவன்.

### முரை

தேர்ப்பாகன் மகள். பாடலி மன்னன் சருவார்த்தசித்தியின் பிறிதொரு மனைவி. மௌரியனின் தாய். சந்திரகுப்தனின் பாட்டி.

### மேகநாதன்

பாரசீக மன்னன். சித்திரவன்மனாதியரைப் போலப் பணியாற்றியவன்.

### மௌரியன்

சருவார்த்தசித்தி மன்னனுக்கு மகன். நவநந்தர்க்கும் இளவல் முறையினன். அரசுரிமைக்குத் தகுதியின்மையால் நவநந்தரோடு நறுமொறுப் புற்றவன். தானைத் தலைவன். சந்திரகுப்தனை இறுதியாகக் கொண்ட நூறு புதல்வர்க்குந் தந்தை. நந்தராலும் இராக்கத அமைச்சனாலும் புதல்வரோடு சுருங்கையிற் செறிக்கப் பெற்றவன். சந்திரகுப்தனை மாத்திரம் நந்தரைப் பழிக்குப்பழி வாங்க விட்டுத் தானும் தன் புதல்வருமாகச் சுருங்கையிற் சோறின்றிச் செத்தவன்.

### வருவரகன்

சந்திரகுப்த மன்னனின் பிடியான சந்திரலேகையின் பாகன். இராக்கதனின் ஏவல்பெற்றுச் சந்திரகுப்தனைக் கொல்லச் சமைந்தவன். ஏனைச் செய்திகளைச் சந்திரலேகை என்னுந் தலைப்பினுட் காண்க.

### விசுவாவசு

சாணக்கியனின் நண்பன். நிபுணகன் என்னும் ஒற்றன் வாயிலாய்ச் சாணக்கியன் இராக்கதன் முத்திரை மோதிரத்தைப் பெற்று அவ்வாழியைக் கொண்டே இராக்கதனைப் பிடிக்க எண்ணிக்கொண்டிருக்கையில் சந்திரகுப்த மன்னன், இறந்துபோன பருவதேசுரனுக்கு ஈமக்கடன் கழித்து அவனது அணிகலன்களை அந்தணர்க்குத் தானமாகக் கொடுத்தல் வேண்டுமெனச்

செய்தியனுப்ப, பருவதேசுரனுடைய அணிகலன்களும் இராக்கதனைப் பிடிக்கத் துணைசெய்யுமென எண்ணி அவனால் அவன் சோதரரோடு அணிகலன்களைத் தானமாக ஏற்க அழைக்கப்பெற்று, அவரும் மன்னனிடமிருந்து அணிகலன்களைத் தானமாக ஏற்றபின் தன்னைக் காணல் வேண்டுமென்ன, அவர் அவன் ஆணையின்படி அங்கு வந்தபோது, இவ்வணிகலன்களை இராக்கத அமைச்சற்கு விற்றுவிடுங்கள் எனச் சாணக்கியன் கூற, அவர் அங்ஙனமே விற்றுத் திரும்பினர். சாணக்கியன் எழுதிய முகமில்லெழுத்தில் சந்திரகுப்தன் இராக்கதனிடத்துக் கொண்டுள்ள அன்புக்கறிகுறியாக அவனால் அவை அனுப்பப்பெற்றனவாகக் குறிக்கப் பெற்றிருந்தமையாலும், சாணக்கியனால் உயிரிழக்கவிருந்த சகடதாசனைச் சித்தார்த்தகன் காப்பாற்றியமைக்காக இராக்கத அமைச்சன் மலயகேது தனக்குக் கொடுத்த அணிகலன்களைச் சித்தார்த்தகற்குப் பரிசிலாகக் கொடுத்தமையாலும், மலயகேது இராக்கத அமைச்சனை அழைத்தபோது இராக்கதன் தான் விசுவாவசு சோதரரிடம் விலைக்கு வாங்கிய பருவதேசுரன் அணிகலன்களை அணிந்து மலயகேதுவினிடம் போனமையாலும், அவன் இராக்கதன் அணிகலன்களையும், முகமில்லெழுத்திற் குறித்த அணிகலக் கொடையினையுஞ் சீர்தூக்கிப் பார்த்து, சந்திரகுப்தன் இராக்கதனுக்கு இவ்வணிகலன்களை விற்றிருக்கலாம் என்னும் செய்தியில் அவநம்பிக்கை கொண்டு, இராக்கதன் சந்திரகுப்த மன்னனின் நெருங்கிய நண்பன் என ஒருதலையாத் துணிந்து, இராக்கதனை வெருட்டி விடுகின்றான். இச்செயற் கெல்லாம் துணைபுரிந்தோர் தாம் இவ்விசுவாவசுவும் அவன் சோதரரும்.

## விராதகுப்தன்

இராக்கதனின் ஒற்றன். பாடலிபுர முற்றுகைச் செய்தியிலிருந்து சகடதாசன் கழுவேறியது வரை ஒற்றாடி இராக்கதர்க்கறிவித்தோன்.

## விசயவன்மன்

கத்திரிய கணத்தின் தலைவன். பத்திரபடன் போன்றே வினை செய்தோன்.

## விஷ்ணுதாசன்

பாடலிபுரத்துப் பெருவாணிகன். சந்தனதாசனின் நண்பன். சந்தனதாசன் விடுதலைக்காகப் பெரும்பொருள் கொடுப்பதாகச் சொல்லியும் தன் எண்ணம் பலியாமையால் நெருப்பிற் குளித்து உயிர்விடத் துணிந்தவன். இராக்கதன் நகர்ப்புறத்துள்ள சோலையொன்றில் வருந்தியிருக்கும்போது சாணக்கியன் ஒற்றருள் ஒருவன் சுருக்குக்கயிறுங் கையுமாய் அங்கு வந்து கழுத்திற் சுருக்கிட்டுத் தொங்க முயல, இராக்கதன் அவனை அண்மி 'நண்பனே என்செய லிது?' என வினவினான். அவன் இராக்கதனை நோக்கி ''சந்தனதாசனின் நண்பன் விஷ்ணுதாசன்; விஷ்ணுதாசன் எனக்கு நண்பன்; சந்தனதாசன் விடுதலை பெறாத காரணத்தால் விஷ்ணுதாசன் நெருப்பில் விழுந்திறக்கச் சென்றான்; அச்செய்தி காதில் விழுமுன் நான் இறப்பேன்''

என்றான். இராக்கதன் இச்செய்தி கேட்டுச் சந்தனதாசனைக் காக்கக் கொலைக் களத்திற்கு விரைந்து ‘அவனை விட்டு என்னைக் கொலைசெய்யுங்கள்’ என்றான்.

**வீவச்சகன்**

சந்திரகுப்தன் உறங்கும்போது அவனைக் கொல்வதற்காக இராக்கதனால் நியமிக்கப்பெற்றாருள் இவனுமொருவன். ஒரு சுருங்கையின் வழியாகச் சந்திரகுப்தன் பள்ளியறைக்குச் சென்று ஆங்கொரு சுவருள் மறைந்திருந்தவன். சந்திரகுப்தன் படுக்கைக்குச் செல்லுமுன் சாணக்கியன் அவ்வறையினைச் சோதித்துப் பார்க்கும்போது உணவுத் துணிகளைக் கௌவிய வாயினவாய் வரும் எறும்பொழுக்கினைக் காண்கின்றான். கண்டு இவ்வறையில் ஆட்கள் பலர் மறைந்துள்ளனரெனத் துணிந்து எரிகொளுவ ஆணையிடுகின்றான். எங்கும் மண்டிய புகையாற் சுருங்கை வழியினைக் காணமுடியாத வீவச்சகனை உள்ளிட்ட அக்கொலைவினையர் மூச்சுத் திணறிச் சுருங்கையில் மடிகின்றனர்.

**வைரோசகன்**

பருவதேசுவரன் இளவல். நச்சுக்கன்னியால் பருவதன் துஞ்ச, மலயகேதுவும் பாகுராயணனால் அச்சுறுத்தப் பெற்று ஓடிவிட, சாணக்கியனால், ‘வருந்தாதி, உன் அண்ணற்கு வாக்களித்த அரசிற் பாதியை உனக்கே அளிப்பேன்’ என ஆறுதல் கூறப்பெற்றவன். சந்திரகுப்தன் நடு நிசியில் அரண்மனை புகுவன் என்பதற்காகத் தாருவன்மனாதியோர் ஆக்கிய பொன்வளைவால் சந்திரகுப்தற்கு வரப்போகும் பெருந்துன்பத்தை முன்னரே அறிந்த சாணக்கியன், வைரோசகனை ஒரு வழியாக முடிவுசெய்ய எண்ணி, வைரோசகனை அரியணையில் அமர்த்திப் பாதியரசினைப் பகுத்துக் கொடுத்துச் சேனைக் குழாங்கள் பின்தொடரச் சந்திரகுப்தன் பிடியான சந்திரலேகையின் மீதேற்றிக் கோயிற் புகச்செய்ய, சந்திர குப்தனைக் கொல்லவிருந்த தாருவன்மனாதியோர் வைரோசகனைச் சந்திர குப்தன் என்றெண்ணிப் பொன்வளைவினை வீழ்த்த, அது அவனைக் கொல்லத் தவறவே, அணித்தாயுள்ள இருப்பு முளை யொன்றால் தாருவன்மனால் நையப் புடைக்கப்பெற்று உயிர் துறந்தவன்.

# முத்ராராக்ஷஸம் - ஒரு தனிக்கலை

இந்நாடகம் மிருச்சகடிகம் அல்லது மண்ணியல் சிறுதேரைப் போன்ற முடிவினைக் கொண்டது. கதைப்பகுதி நுண்புலத்தோடு ஒழுங்காகவும் படிப்படியாகவும் ஆக்கம் பெற்றுச் சுவையுடன் விளங்குகின்றது. நடிப் பொற்றுமை எவரும் வியக்கும் முறையில் அமைந்துள்ளது. நாடகத்துள் வரும் எல்லா நிகழ்ச்சிகளும் இராக்கதனை அகப்படுத்தி அமைச்சனாக்கும் முயற்சிக்கண் ஒரேமுகமாக இயங்குகின்றன. சிற்சில நிகழ்ச்சிகள் அசதியில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் போலவும், எதிர்பாராதவை போலவும் தோன்றினாலும், அவையனைத்தும் முன்னரே, குறித்த பயன் கருதி, நன்னர்ச் சூழ்ந்து செய்யப் பெற்றவை. சாணக்கியன் தன் ஒற்றர் பலரைத் தன் அரசியற் பகைஞனான அமைச்ச இராக்கதன்மீது போக்கி, இராக்கதனது ஒவ்வொரு நிகழ்ச்சியையும் அவ்வப்போது அறிந்து, அவன் முயற்சிகள் பலியாவண்ணஞ் செய்து, இறுதியில் அவனை மூச்சுத் திணறும் ஒரு நிலைக்குக் கொண்டுவந்து வெற்றி யடைகின்றான். இராக்கதனும் வேறு வழியின்மை கண்டு சாணக்கியனை உளத்துள் முனிந்து, விதியினை நொந்து, அச்சாணக்கியன் விழைந்தாங்கு அமைச்சர் பதவியை ஏற்கின்றான். தொடங்குங்கால் நன்கு சூழ்ந்தும், மறைவாய், ஊக்கத்தோடு வினையாற்றியும், ஒருகால் வெளிப்படையாயும், இன்னொருகால் கொன்னேயிருந்தும், கருதிய கடைபோதற்காச் செவ்விய நெறிக்கண் மேற்போகியும், சார்பு நிகழ்ச்சிகளால் அவ்வப்போது பயனைப் பெற்றும், விரைவில் முழுவெற்றியாய் முடிந்தும் காணப்படும் நிகழ்ச்சிகள் அனைத்தும் இந்நாடகத்தைத் தனிக் கலைப்பகுதியாக்கும் உறுப்புக்களாம். பலவுள் ஒன்றாய்த் தனிச்செயல் அனைத்தும் ஒரே கருத்தையும் வரம்பையும் கொண்டனவாய், கருதிய ஒரே பயனுக்குப் பொருந்திய ஒத்துழைப்புடை யதாய் வருவனவெல்லாம் இந் நாடகத்தின் தனிச் சிறப்பியல்புகளாம். *நாடக இலக்கணத்திற்கு இலக்கியமாய் அமைந்த இக்காட்சி நூலுக்கு இணையான வேறு வடமொழி* **நாடகம் இல்லையென்பது** அறிஞர் துணிபு. காட்சிகளின் மாற்றத்தாலும் நடிக்குநர் மாற்றத்தாலும், கருத்து வேற்றுமையாலும், ஒன்றையொன்றொவ்வா நிகழ்ச்சிகளாலும், காப்பியச்சுவை மிக்கதும் இதயத்தைப் பிணிப்பனவுமான பல இயற்கை வருணனை நிரம்பிக் கிடப் பதாலும், படிப்போர்க்கு மேன்மேல் ஊக்கத்தை எழுப்பிக்கொண்டே செல்வதில் இந்நாடகம் இணையற்றது.

## கதைப்பகுதி சுவைகெழும் மேன்மேல் வளர்ந்த முறை

கதை விளைபுலத்தை இவ்வாசிரியர் சுவைபெருகப் பயிர் செய்த முறைகள் வியத்தற்குரியவை.

### முதல் அங்கம்

1. சாணக்கியனார் இராக்கதனது முத்திரை ஆழியை
   ஒற்றன் வாயிலாய்ப் பெற்றமை.

2. முகமில்லா எழுத்தும் வாய்மொழியும்

3. சந்தனதாசனைச் சிறையிட்டமை.

### இரண்டாம் அங்கம்

1. சகடதாஸன் சித்தார்த்தகனோடு இராக்கதன் இருப்பிடத்திற்குச் சென்ற மாமாயமும் அவனிடத்திற் பணி செய்ய அமைந்ததும்.

2. இராக்கதன் மலயகேதுவினிடமிருந்து புதிதாய்ப் பெற்ற மணிக் கலனைச் சித்தார்த்தகனுக்குக் கொடுத்தலும் மெல்ல முத்திரை மோதிரத்தைச் சித்தார்த்தகன் இராக்கதனிடத்துச் சேர்ப்பித்தமையும்.

3. இராக்கதன் பர்வதகனிடமிருந்து பெற்ற ஆபரணத்தைச் சித்தார்த்தகனுக் களித்தமையை மலயகேது அறிதல்.

### மூன்றாம் அங்கம்

1. சாணக்கியனுக்கும் சந்திரகுப்தற்கும் போலிக் கலகம்.

### நான்காவது ஐந்தாவது அங்கங்கள்

1. மலயகேதுவின் மனத்தில் இராக்கதன் மீது ஐயத்தை எழுப்புதலும், இறுதியில் மலயகேது இராக்கதன் இவர்க்கிடையே நட்பு முறிவும்.

2. ஐந்து அரசகுமாரர்கள் மலயகேதுவினால் அநியாயமாகக் கொலையுண்டமை.

3. மலயகேதுவின் போரும் தோல்வியும்.

### ஆறாம் அங்கம்

1. இராக்கதன் தன் நண்பன் சந்தனதாசனுக்காகச் சந்திரகுப்தனிடம் தன்னை வெளிப்படுத்தமை.

2. முதுமரச்சோலையில் முன்னிய மனிதன் சந்தனதாசன் கடிதே கொலை செய்யப்படுவான் என இராக்கதற்குத் தெரிவித்தமை.

### ஏழாம் அங்கம்

1. இராக்கதன் உளமில்வழியும் சந்திரகுப்தற்கு முதல் அமைச்சனா யிருக்க ஒப்பினமை.

இந்நாடகம் பல்வகைக் குற்றங்களை யுடையதென அயல் நாட்டறிஞர் சொல்வதுண்டு. சிலர் அவற்றை மிகைபடவுங் கூறினர். ''ஒரு நல்ல நாடகம் மக்கள் கொள்ள வேண்டிய நல்லொழுக்கத்தையே போதிக்கவேண்டும். நல்லதன் நலனும் தீயதன் தீமையும் முறையே போற்றப்படவும் தூற்றப் படவும் வேண்டும். இந்நாடகத்திலோ தீய செயல்களெல்லாம் பெரிய

ஊதியங்களைத் தருவனவாக மதிக்கப்பெறுகின்றன. அதனால் நன்மை நாளுக்குநாள் தேய்ந்துபோதலும் கூடும்'' என்பனவே அவ்வறிவாளிகள் கண்ட ஆட்சேபங்கள். ஆனால் நல்ல முறையில் ஆழ்ந்து படிப்பார்க்கு இந்த ஆட்சேபங்கள் வலியவாகத் தோன்றமாட்டா. இக்காட்சி நூலுள் பிறரை வஞ்சித்தல் எங்கும் காணப்படுவது உண்மையே எனினும் அது மிகப் பெரிய தொரு நற்பயன் கருதியாம். சாணக்கியனால் சந்திரகுப்தனிடத்தில் அமைச்சுப் பதவியை ஏற்க இராக்கதனை வெற்றியோடு கொண்டு வருவதற் காகவே இப்பல்வகைய வஞ்சச் சூழ்ச்சிகள் ஆளப் பெற்றிருக்கின்றன. இராக்கதன் உறுதியும், திண்மையும், ஒழுக்கமும், தலைவரிடத்து விள்ளாப் பற்றும், அரசியற் பொறையினைப் பொறுக்கும் பேராற்றலும் வாய்ந்தவன் என்பதை நன்கு அறிந்தே சாணக்கியன் இத்தகைய சூழ்ச்சிகளைச் செய்திருக்க வேண்டும். இராக்கதன் முயற்சிகளெல்லாம் கருதிய பயனைத் தரமாட்டா என்னும் செய்தி சாணக்கியற்கு நன்கு தெரியும். தெரிந்தும் இராக்கதன் மனத்தின் வழியே செல்ல அவனை விட்டுவிட்டால், அதனாற் பொறுக்க முடியாத தொல்லைகளும் துன்பங்களும் தனக்கும் சந்திரகுப்தற்கும் ஏற்படுவதோடு ஒரு குற்றமுஞ் செய்யாத குடிமக்களும் பல தொல்லைகட்கு ஆளாவர். இவற்றையெல்லாம் நிகழாவண்ணம் காத்துக்கொள்ளவும், அக் காலத்திற்குப் பொருத்தமான முறைகளில் நீதியை அடிப்படையாகக் கொண்ட தன்னுடைய பல முயற்சிகளை அவன் முற்றுப்பெறச் செய்தான். இராக்கதனை மந்திரிப் பதவியில் வைக்காவிட்டால் இவ்வளவெல்லாஞ் செய்த சாணக்கியன் தானே அமைச்சனாய் இருந்து ஆட்சியினை நடத்த முடியாதா? இவற்றை நன்கு ஆராய்ந்து பார்க்கும் பொழுது தனக்கு வருகின்ற ஒரு பெரிய நன்மைக்காகச் சாணக்கியன் இந்த வஞ்சகச் சூழ்ச்சி களை மேற்கொண்டானல்லன் என்பது புலனாகும். சந்தன தாஸனுடைய விள்ளாநட்பும் சாணக்கியனால் நன்கு போற்றப்பட்டிருக்கின்றது. ஆனால் சாணக்கியன் செய்த சூழ்ச்சிகள் சிக்கலும் கோணலும் உடையவைதாம். அக்காலத்தில் சாணக்கியனை யன்றி வேறு எவர்தாம் அமைச்சராயிருப்பினும் இவற்றையே மேற்கொள்ள வேண்டியிருக்கும். அச் செயல்களின் குற்ற நற்றங்களை ஆராய்ந்து ஆராய்ந்து அறுதியிடும் பொறுப்பு அக்காலத் தமைச்சர்க்கே உரியதாம். நந்தர்கள் மக்களின் வெறுப்புக்கு ஆளாகி வந்தமையால் அவ்வெறுப்பு முற்றி மகத நாட்டிலேயே ஒரு பெரிய அரசியற் குழப்பந் தோன்றுவதற்கான கரிகளும் குறிகளும் அக்காலத்துக் காணப் பெற்றன. அப்பொழுதுதான் சந்திரகுப்தனும் சாணக்கியனைத் துணையாக வேண்டுமெனக் குறையிரந்தான். சாணக்கியன் நெஞ்சில் ''இவனே உதவிக் குரியவன்'' என்னுங் கருத்து வேரூன்றியது. இவ்வேளையில் ஒருதுளி இரத்தம் சிந்தாமல் குடி மக்களுக்குத் துன்பங்களுமில்லாமல் கருதிய வினையை நிறைவேற்றுவதா அல்லது சில அதிகாரிகளைப் பதவியினின்றும் நீக்குவதால் குழப்பத்தையும் கலகத்தையும் விளைத்து என்றுந் தீராத போர்ச் செயலில் நாட்டை உட்படுத்துவதா என்பனவே சாணக்கியன் மனத்தெழுந்த கேள்விகள். இக்கேள்விகளுள் முன்னதே சிறந்ததெனக் கருதி அதனை மேற்கொண்டனன். அவன் செய்கைகள் பாவச் செய்கைகள் என்பதை அவன் அறிவானேனும் அவற்றைச் செய்யாமல் இருக்க முடியவில்லை.

பருவதக மன்னன், சர்வார்த்தசித்தி, மலயகேதுவுக்குத் துணையாய் வந்த ஐவர் இவர்தமைக் கொன்றதும் அரசியற்பணியின் தூண்டுதலால் அரசாட்சியின் அமைதி குறித்துச் செய்த ஒரு நற்செயலேயாம். மலயகேதுவை வஞ்சித்து அவனைச் சிறைப்பிடித்து, இறுதியில் அவன் பதவிக்குச் சிறிதும் குறைவருதல் கூடாதென மீட்டும் சாணக்கியன் நல்லெண்ணத்தோடு அவனை அரசனாக்கினன். இவற்றினைத் தவிரச் சாணக்கியன் செய்த தீச்செயல்கள் எவற்றையும் நூலிற் காண முடியவில்லை. 'சகடதாஸன் சந்தனதாஸன் என்னுமிருவரையும் கொலை செய்யுங்கள்' எனச் சாணக்கியன் அச்சுறுத்தினானேயன்றி உண்மையில் அக்கொலைச் செயல் நிகழவில்லை. அது தானும் ஆழ்ந்து செய்த அரசியல் தந்திரங்களுள் ஒன்றாகும். சகட தாஸனைக் கொலை செய்யத் தவறிய குற்றத்திற்காக அக்கொலையாளர்களைக் கொலை செய்தான் என்பதும் ஓர் அரசியற்பொய். இத் தீச்செயல்கள் அனைத்தும் நாட்டுக்கு நிகழவிருந்த இரத்தப் பெருக்கினை நிறுத்துவதற்காகச் செய்த பெருஞ்செயலேயன்றித் தன்னயங் கருதிச் செய்த செயலென்று எவருங் கூறத் துணியார். அச்செயல்களைப்போல இக்காலத்தும் எத்தனையோ பல நிகழ்கின்றன என்பதை அறிந்து அமைதலே அறிவாளர்தங் கடனாம். இராக்கதற்கும் இக்காரணங்களே சொல்லப்படலாம் எனினும், அரசியற் கடலின் கரைகண்ட இவ்விரண்டு அறிவாளிகளும் அரசியல் நெறிபற்றிச் சென்றனர் எனக் கொள்ளவேண்டுவதன்றி அக்காலத்து உலக வாழ்க்கையைப் பொறுத்ததன்றாம். இவர் செய்த செயல்களினின்றும் அக்காலத்து வாழ்க்கை இழிந்த நிலையினது என்றெண்ணி விடுதல் பெரும்பிழை. நல்ல செயல்களையோ கெட்ட செயல்களையோ அக்காலத்துக் கேற்றபடி அரசியல் அறிவாளிகள் அறிந்துசெய்ய முழு உரிமையுடையவர். நாட்டை நடத்தும் நல்லறிவாளர் எத்தனை இன்னலுக்காளாகின்றனர் என்பதை நாடகவாசிரியர் நான்காம் அங்கத்தில் நன்கெடுத்துக் கூறியுள்ளமையும் இதனை வலியுறுத்தும்.

## நாடகக் குறிப்பும் நடிக்குநர் குறிப்பும்

முத்ராராக்ஷஸம் வடமொழி நாடகங்களுக்குள்ளே ஒரு தனி அமைப்பும் சிறப்பும் உடையது. பிற நாடகங்களுக்கெல்லாம் கதைப் பகுதியானது பொதுவாகப் *புராணேதிகாசங்களிலிருந்து* எடுக்கப்பட்டு நாடக ஆசிரியன் வேண்டும் விகற்பங்கூறி, ஒன்பது சுவைகளுள் ஒன்று அங்கமாய் ஏனைய அங்கியாய் முடிக்கப் பெறும். ஆனால், முத்ராராக்ஷஸக் கதைப்பகுதி நாடக ஆசிரியனால் நாடகத்துக்கென்று கொள்ளப்பட்ட ஒரு முழுக் கற்பனையன்று. ஏனைய ஆசிரியர்களைப்போலப் புராணேதிகாசக் கதைகளைப் பின்பற்றியதுமன்று. இதன்கண் இன்பச் சுவைக்காக ஒரு *தலைவியை நாம் காண முடியாது. இராச தந்திரமும் அரசியலுமே சிறப்பாக இக் காட்சிநூல் எடுத்துக் காட்டும்,* ஏழாம் அங்கத்தின் தொடக்கத்தில் சந்தனதாசன் மனைவியைப் புதல்வனோடு வரக்கண்டாலும் அவள் தன் கணவன்மீது கொண்ட அன்பினை அடிப்படையாகக் கொண்டதும், கடமையோடு பட்டதுமான பெரிய தியாகத்தைச் செய்து காட்டிய வகையில்

முடிகின்றது. இந்நாடக ஆசிரியர் நடை நாடகத்தின் பொருளுக்கேற்ப அமைந்ததொன்றாம். ஏனைக் காட்சி நூல்களைப்போல இன்பம் அமை யாதது நாடகம் நுதலிய பொருளைப் பொறுத்ததாம். கருமத்தே கண்ணுங் கருத்துமாகிச் செல்வதால் இக்காட்சி நூலெங்கும் *ஒரு கடுநடையைக்* காண்கின்றோம். ஆகலின், இந்நூலுக்கு இந்நடையே அழகினைத் தருமல்லது பிறிதொரு நடை சாலாது. நன்மையுந் தீமையும் அரசியற்கேற்ப வன்மையான முறையில் எடுத்துச் சொல்லப்பட்டனவேயன்றி மென்மை யான முறையிலன்று.

இக்காட்சி நூலுள் வரும் நடிக்குநர் பலருள் *சாணக்கியன், இராக்கதன், சந்திரகுப்தன்* இம்மூவரும் சரித்திரச் சிறப்பு வாய்ந்தோராவர். நாடக ஆசிரியரின் கற்பனையால் வந்தவரல்லர். கற்பனைப் பெயராக இருந்தால் இராக்ஷஸன் (இராக்கதன்) என்னும் பெயரை ஒரு நல்லறிஞர்க்கு வைப்பாரா? மலயகேதுவும் சரித்திரச் சிறப்பு வாய்ந்தவனே. நிபுணகன், விராதகுப்தன் முதலியோர் பெயர்களெல்லாம் கற்பனைப் பெயர்கள் தாம்.

சாணக்கியன் சணகரின் புதல்வன். அவனது பிள்ளைப் பெயர் விஷ்ணுகுப்தன் என்பது. கோணல் வழியில் - ஆனால் நன்மை கருதிச் செல்லும் இயல்பால் கௌடில்யன் என்னும் காரணப் பெயர் அமைந் திருத்தல் வேண்டும். அவனைக் 'காம ஸூத்ரம்' எழுதின வாச்சாயனர் என்றும் கூறுப. சாணக்கியன் மறைபல பயின்றவன். அதர்வ வேதத்திற் சொல்லப்பெற்ற ஆபிசாரிகச் செய்திகளையும் அவற்றைச் செய்யும் முறை களையும் நன்கறிந்தவன். அரசியலறிவில் இணையற்றவன். நீதிஸாரம் என்னும் நூலை இயற்றிய காமந்தகன் என்னும் ஆசிரியனுக்குச் சாணக்கியன் குருவாக இருந்தான் என்பது காமந்தக ஆசிரியர் சாணக்கியனுக்குப் பெருமதிப்போடு கூறும் குருவணக்கத்தால் நன்கு தெரியலாம். சந்திரகுப்த வேந்தர்க்காக அரசியல் நூலின் சுருக்கமொன்றைச் சாணக்கியன் செய்தான் எனவுங் கூறுப. எதைச் செய்தாலும், செய்யுங்கால் என்ன இடையூறு வந்தாலும், இடையூறுகளைப் பொறுத்து அவற்றைத் தன் புலவலியால் விரையாது விலக்கி, கடைபோகுமட்டும் கருதியவற்றை வழுவின்றிச் செய்து முடிக்கும் பேராற்றல் வாய்ந்தவன் சாணக்கியன்.

இராக்கதனைப் பற்றிய வரலாறுகள் சரித்திர வாயிலாய் விளங்க வில்லையேனும், முதன் முதலில் பாடலிபுரத்தில் சந்தனதாஸன் வீட்டுக்கு அருகினில் வசித்து வந்தான் என ஒரு கன்ன பரம்பரைச் செய்தி கூறும். ஆனால் இராக்கதற்கு அக்காலத்து விளக்கமான புகழ் எதுவும் ஏற்படவில்லை. அவன் இயற்பெயர் சுபுத்திசன்மன் என்ப. ஒருநாள் நந்தர் ஒரு விடுகதையை விடுத்தற்காக அவனை அழைத்தனராம். அரசர் கருதியாங்கு இராக்கதன் அதனை விடுக்க, அவர் அவனது நுண்ணறிவையும் ஆற்றலையும் வியந்து தனக்கு முதலமைச்சனாகக் கொண்டனராம். அது முதலாக இராக்கதன் என்னும் பெயராலேயே அவன் அறியப்பட்டு வருகிறான்.

இந்நூலுள் வரும் நடிக்குநருள் சாணக்கியன், இராக்கதன், சந்திரகுப்தன், மலயகேது முதலியோர் முதன்மையானவர். இவருள்ளும் சாணக்கியனே முழுமுதல். சாணக்கியனும் இராக்கதனும் மந்திரிப் பதவியினராக நாடகத்துள் வருகின்றனர். இவ்விருவரும் தன்னயத்தின் மணமேயின்றிக் காணப்படுதல் எவரும் வியத்தற்குரிய செய்தி. சாணக்கியன் தான் கூறிய வஞ்சினத்தை முடிக்க விரும்புகின்றான். இடையூறின்றி முடித்த பின்னர்த் தன் அதிகாரத்தை அல்லது பதவியைத் துறந்து விடுகின்றான். இராக்கதன், சந்திரகுப்தனும் சாணக்கியனும் தன் தலைவரைக் கொன்றனர் என்ற காரணத்தால் பகைத்துப் பழிக்குப் பழிவாங்க வேண்டுமென்று கருதினாலும், தனக்கொரு நன்மையையோ ஒரு பெரும் பதவியையோ எப்பொழுதும் கருதினதில்லை. இவ்விருவரும் தனித்தனியாகத் தத்தம் நோக்கம் நிறைவேறுதற்காகச் சூழ்ச்சியில் மூழ்கிக்கிடந்தனர் என்றாலும் அவரவர்கள் ஆற்றலுக்கேற்ற பயனையே பெறுகின்றனர். நாடக ஆசிரியர் இவ்விருவர்க்கும் உள்ள வேற்றுமைகளை இடந்தொறும் இடந்தொறும் சிறக்கக் காட்டியிருக்கின்றனர். சாணக்கியன் தூயநோக்கும் பிழையில்லாத் தீர்ப்பும் உடைய அறிவாளியாகக் காணப்படுகின்றான். தனக்கு வேண்டிய மனிதர்களைத் தேர்ந்து கொள்வதில் இணையற்றவனாக விளங்குகின்றான். எத்தனை இடுக்கண் வந்தாலும், உறுதியும், கலங்கா மதியும், குறையா ஆற்றலும் உடையவனாகச் சாணக்கியனை நாம் அறிகின்றோம். அவன் நன்கு சூழ்ந்து செய்த செயலெல்லாம் பகைவர் சூழ்ச்சியைக் குப்புறச் செய்தன. அவன் அறிவும், விழிப்பும் பகைவனைச் சார்ந்தோனையும் தன்வயமாக இழுத்து இணைப்பதில் பெரிதும் பயன் அடைந்தன.

இராக்கதன் ஒரு பெருவீரனாகக் காணப்படுகின்றானேயன்றி அரசியற் புலமை வாய்ந்தவனாக இந்நாடகத்துவரும் எந்த நிகழ்ச்சிகளாலும் அறியக் கூடவில்லை. 'இது இத்தகையது' என்று துணியுந்திறனும், தனக்குத் துணையான நண்பனைத் தேருந்திறனும் அவற்கு வறிதும் பற்றாது. ஆதலின் அவன் திட்டங்கள் அனைத்தும் பட்டுப்போயின. இராக்கதன் வெளுத்த தெல்லாம் பாலென்று யாரையும் நம்பிவிடுகின்றான். தலைவரிடத்தில் இராக்கத்திற்கிருந்த பற்றைப்போல வேறு எவர்க்கும் இருக்கவே முடியாது. நந்தர் மாய்ந்த துயரம் 'இராக்கதன் நெஞ்சிலே வேர்க்கொள்ள அதன் பயனாகச் சாணக்கியனையும் சந்திரகுப்தனையும் பழிக்குப்பழி வாங்கு தலாகிய ஒரே கருத்தும், அக்கருத்து முற்றுப்பெறுதற்கான பல செயல் களையும் செய்வதில் முனைந்து நின்றான். இதனால், முன்பின் அறியாத வர்களை இராக்கதன் நம்பித் தன்னிடம் வேலைக்கமர்த்திக் கொண்டதால் இராக்கதன் மறையெல்லாம் சாணக்கியன் ஒற்றாடி எளிதில் அறிந்து கொண்டான். 'பகைவனிடமிருந்து பிரிந்து வந்துவிட்டேன்' என்று சொன்னாற் போதும் இராக்கதனுக்கு. உடனே அவன் அப்படிச் சொன்னவனுக்குத் தன்னிடத்தில் ஒரு பொறுப்பான நல்ல பதவியைக் கொடுத்து விடுவான்.

உண்மையறியாத சிலர் சாணக்கியன் செயல்களை மாத்திரம் மேலோட்டாகப் பார்த்துவிட்டு அவனை இந்திய மாக்கியவெல்லியாகக் கருதுவதுமுண்டு. சாணக்கியன் வாழ்க்கையில் எங்காவது *தன்னயம்* என்ற

ஒன்று இருந்ததாக நாம் சிறிதும் அறிய முடியாது. நந்தரை அழித்துச் சந்திரகுப்தனை அரசனாக்கித் தலைவன் இறந்தபின்பும் அவரிடத்து அன்பு குறையாதவனும் வியாழனுக் கொப்பானவனுமான அமைச்சன் இராக்கதனைச் சந்திரகுப்தனிடத்தில் முதலமைச்சுப் பதவியை ஏற்கச் செய்தல் வேண்டும் என்பதே அவள் குறிக்கோள். சாதிப்பெருமையும் செருக்கும் அவனிடம் இருந்தனவாக சிலர் அறியாது கூறுவர். சந்திரகுப்தனைச் சாணக்கியன் 'விருடலன்' என்றழைத்தது உண்மைதான். அங்ஙனம் அழைத்தது குற்ற மாயின் சந்திகுப்தன் சாணக்கியனைச் சினவாது விடுவானா? நந்தர் இருக்கை யில் இருந்த அவனை இழுத்துத் தள்ளினார் என்பதற்காக இச்செயல் செய்தான் என்றும் சிலர் கூறுவதுண்டு. அது புலனாகின்ற இடந்தான் இந்நாடகத்துள் எங்குளதெனத் தெரியவில்லை. நாடகம் நந்தர் வீழ்ச்சிக்குப் பின் தொடங்குகின்றது. ஆயின், சாணக்கியனது பழிக்குப்பழி வாங்கும் இயல்பும் நந்தர் வீழ்ச்சியொடு மாய்ந்து போயிருக்கவேண்டுமன்றோ? நாடகத் தொடக்கத்தில் தன் மாணவனான சந்திரகுப்தன் ராச்சியத்தைப் பெருக்கி, அரசாட்சியை நிலைபேறுடையதாகச் செய்தலே சாணக்கியன் நோக்கமாகக் கூறப்பட்டிருக்கின்றது. சாணக்கியனது தன்னம்பிக்கையும், மாணவன் சந்திரகுப்தன் மீதுள்ள விள்ளா அன்பும் மிகப் பெரிய சாணக்கியன் செயல்கள் கொடுமையுடையனவாகத் தோற்றினும் அவனது பரந்த நோக்கும் வள்ளன்மையும் இந் நாடகத்தால் விளங்குகின்றன. பகைவர்களையும் அவர்தம் குணங்களுக்காகச் சாணக்கியன் வியந்து கூறுகின்றான். இராக்கதனை '*மந்திரி வியாழன்*' என்றும் '*மகர்த்மா*' என்றும் உள்ளம் உவந்து கூறுகின்றான். சாணக்கியன் எளிய வாழ்க்கையும், உயர் கருத்தும் உயர்செயலும் உடையவன். உலக இன்பங்களை ஒருநாளும் பெரிதென மதித்துப் போற்றியவன் அல்லன். முனிவன் என்பதற்கு அவன் வீடும், அவன் செயலும், அவன் கரைகடந்த கல்வியும் சிறந்த எடுத்துக் காட்டுகளாம். மதியூகிகளான அதிகாரிகளுங்கூட அவனது அறிவின் எல்லை யைக் காண முடியவில்லை. கண்டோர் அனைவரும் அஞ்சி நடுங்கும்படி நடந்துகொண்டமை நல்ல கருத்தோடன்றிப் பதவிக்கும் பட்டத்திற்கும் புகழுக்கும் பொருளீட்டற்கும் அல்ல. இல்லாதவற்றையும் செய்யாத வற்றையும் இருப்பனவாகவும் செய்தனவாகவும் சொல்லிப் புகழ்ந்து கொள்ளும் குணம் அவனுக்கில்லை. சாணக்கியற்கு *முயற்சியில் முழு நம்பிக்கை. விதியில் இல்லை.* வினைவல சாணக்கியன் எடுத்த திட்டங்கள் அனைத்தும் ஒன்றாலும் குறைவின்றி நிறைவேறியவை.

சாணக்கியன் பகைவனான இராக்கதற்குத் தன்னம்பிக்கையும் உறுதியும் இல்லை. எந்த மறைச்செய்திகளையும் தன் ஏவலர்க்குச் சொல்லிவிடும் தன்மை யுடையவன். மூட நம்பிக்கை பெரிதும் உடையவன். சகுனம், நிமித்தம் முதலியவற்றுள் பெரும்பித்துடையவன். சிலபோது அவன் சோதிடங்கூடக் கேட்டதுண்டு. இராக்கதனது தோற்றம் மலயகேதுவுக்காதல் அவன் பணி யாளர்க் காதல் கணிசமாகவேயில்லை. சாணக்கியன் பணியாளர்களோ அவன் முன் மதிப்புடனும், அச்சவிதிர்ப்புடனும் விளங்குகின்றனர். சித்தார்த்தன் இராக்கதன் வேலையாளனாக இருந்தும் அவன் முகத்தெதிரிலேயே மீறிப்

பேசுகின்றான். உண்மையாகவே இராக்கதன் வண்மையும் நேர்மையும் உடையவன்தான். நண்பர்க்கினியன். இராக்கதற்குச் சந்தனதாஸன் மீதுள்ள நட்பும் சந்தனதாஸனுக்கு இராக்கதன் மேலுள்ள நட்பும் கோப்பெருஞ் சோழற்கும் பிசிராந்தையார்க்கும் இருந்த நட்பினைப்போலத் தவப்பெரிய. இராக்கதனும் பகைவராற்றலை வியக்கின்றான். சாணக்கியனுடைய மதியாற்றல்கள் எத்தனை இடையூறு வந்த காலத்தும்கூட இராக்கதனைக் குனிதண்டம் போடச் செய்யவில்லையேனும் தன் செயல்கள் பழுதாயின போது உரனழிந்து, உளங்குன்றி, உருக்குலைந்து வருந்துகின்றான்.

## சந்திரகுப்தன்

அரச லட்சணங்களும், புலவலியும், பேராற்றலும், ஆசிரியப்பற்றும் வாய்ந்தவன். மலயகேதுவுக்கு இராக்கதனிடத்தில் இத்தனை அன்பும் மதிப்பும் இல்லை. சந்திரகுப்தன் தன் அமைச்சனிடத்து உள்ள ஆற்றலையும், அவன் அரசியல் அறிவையும், எடுத்தது முடிக்குந் திறனையுங் கண்கூடாகக் கண்டு, அவன் அறிவுரைகளை ஏற்று, அரசியற் பொறையை அவன்மீது வைத்ததனால் ஒரு சிறந்த அறிவாளியென்று சொல்லத் தட்டில்லை. மலயகேதுவுக்கு இராக்கதனிடத்தில் சிறிதும் நம்பிக்கையில்லை. அவனிடத்தில் நாளுக்கு நாள் ஐயந்தான் பெருகி வந்தது. மெல்ல மெல்ல மலயகேதுவுக்கு இராக்கதனிடத்துள்ள அன்பு அற்றுப்போகவே அவனை அமைச்சர் பதவியினின்றும் நீக்கிவிடுகின்றான். தனக்குத் துணையாக வந்த ஐந்து அரச குமரர்களை முன்பின் ஆராயாது கொலை செய்ததால் ‘ஆத்திரக் காரன்’ என்றும், ஆழ்கருத்தில்லாதவன் என்றும், பார்வையை இழந்தவன் என்றும் அறியலாம். பகைவரின் ஒற்றர்கள் சொல்லியவற்றை யெல்லாம் மலயகேது நம்பி வந்த காரணத்தால் அவனை ‘எடுப்பார் கைப்பிள்ளை’ எனக் கூறுவதே பொருத்தமாகும்.

இந்நூலுள் உடனுயிர் நீங்கும் நட்பினுக்குச் சிறந்த இலக்கியமாகச் சந்தனதாஸன் காணப்படுகிறான். தன்னுடைய எல்லாப் பொருள்களையும் இழந்துவிட்டாலும் நண்பனுக்குத் துரோகம் செய்தல் கூடாதென எண்ணுகின்றான். இந் நாடகத்துள் வருகின்ற வேலைக்காரர், ஒற்றர் ஆகிய அனைவர்க்கும் தத்தம் தலைவரிடத்துள்ள பற்று விஞ்சியிருப்பது படிப்பவர் நன்கு அறிந்து போற்றற்குரிய செய்தி. தாம் செய்யும் செயல்கள் நல்லன அல்லவென அறிந்தும்கூடத் தலைவரிட்ட ஆணையை நிறைவேற்றுவதில் கண்ணுங்கருத்து முடையவராகக் காணப்படுதல் மகிழ்ச்சிக்குரிய பிறிதொரு செய்தி. மானம்பட வந்தாலும் உடம்பெலாம் நோவப் புடைத்தாலும் தலைவருடைய மதிப்பைக் குறையாது போற்றுவதில் உள்ள ஓர் உயர்ந்த நோக்கம் அப்பணியாளர்களிடையே என்றும் குறைந்து காணப்படவில்லை.

# இந்நூல் எழுதத் துணையாயிருந்தவை

**முத்ரா ராக்ஷஸம்**

1. திரு. காளே அவர்கள் பதிப்பித்த பம்பாய்ப் பதிப்பு
2. சாரத ரஞ்சன ரே அவர்கள் வெளியிட்ட கல்கத்தாப் பதிப்பு
3. காசிநாத் திரியம்பக் திலாங் அவர்களின் பம்பாய்ப் பதிப்பு
4. A.B. துருவா அவர்களின் பதிப்பு
5. முத்ராராக்ஷஸ நாடகக் கதை
   - மகாதேவகவி.டாக்டர். வே. இராகவனார் பதிப்பு.

# முத்ரா ராக்ஷஸம்

## முதல் அங்கம்

### முத்திரைப் பேறு

''செல்வி யாவணின் சென்னியில் மன்னியோள்?''
'சசிகலை'. ''அதுவோ அவள்பெயர்? சாற்றுக''.
''அதுவே அவள்பெயர். அடுத்துப் பழகியும்
அப்பெயர் மறந்தனை அதன்கா ரணமென்?
நங்கையைக் கேட்டனென்; நளிர்மதி கேட்டிலேன்''
''வெண்மதி நம்பலை விசயை விளம்புவள்'' -
எனவே தலைமிசை ஏற்றிய நங்கையை
உமையறி யாவணம் ஒளிக்க விழைந்த
மாதொரு பாகன் மொழிவளம்
நல்குமே நல்குமே நனியும் நுமையே.

மேலும்,

'விழைந்தாங் கடியிடின் விரிநிலம் கீழுறும்'
எனவே எண்ணி இணையடி தம்மை
மெலவே வைத்து மேதினி, புரந்தும்,
உலகெலாம் ஓடிய உலம்பொரு தோளினைச்
சுருக்கியே பன்முறை சுகிர்பெற நடித்தும்,
பார்த்த பொருளினைப் பற்றி எரிக்கும்
பொறிகால் நெற்றிக் கண்ணினைப் புதைத்தும்,
இங்ஙனம் இடத்தினுக் கேற்ப நடிக்குறு
முப்புரம் வென்ற முழுமுதல்
நடலை நடந்தான் நல்குக நுமையே.

(கடவுள் வாழ்த்தின் இறுதியில்)

**சூத்திரதாரன் :** மிகைபடப் பேசலென்? மேவிய அவையினர்
''வடேசுர தத்த முதலியின் பெயரன்
பெருங்கோ என்னும் பெரும்பொறி யாளன்
பிருதுவின் மகனாம் பீடுசாற் கவிஞன்
விசாக தத்தன் விழைவுடன் ஆக்கிய
முத்திரா ராக்ஷஸ நாடகம் இந்நாள்

நடித்துக் காட்டுக நற்சுவை பெருக''
என்றே எனக்கோர் இன்பணி யிட்டனர்.
நவையும் குணனும் நன்னர் நாடிக்
கவிச்சுவை கருதும் கற்றோர் அவைக்கண்
நடித்துக் காட்டிட, நனியும் மகிழ்ந்தனென்.
நன்செய் எனினே நவையோன் விதைப்பினும்
நாறும் வீறும்; செந்நெல் தழைக்க
வித்தியோன் ஆற்றல் வேண்டா தப்பயிர்.

ஆகலின்,

இல்லினுக் கேகி, இல்லினை விளித்தே,
எமருடன் ஆடலும் பாடலும் இயற்றுவென்.

(அரங்கில் அங்குமிங்கும் நடந்தும் நோக்கியும்)

என்னில் இதுவே; இதனுட் புகுவல்.
எங்ஙன்? என்னிது? என்மனை யின்கண்
விழவினிற் போன்றே விழுப்பணி கொண்டுளர்!
ஒருத்திநீர் சுமப்பள்; ஒருத்தி மலர்த்தொடை
புனைவள்; ஒருத்தி புதுச்சாந் தரைப்பள்-ஒருத்தி
உலக்கையை ஓச்சி 'உம்'மெனப் போடுவள்!
இருக்க இவைதாம்-இல்லினை அழைத்தே
என்னெனக் கேட்பல் எதுவும் விளங்கவே.

(திரைமுகம் நோக்கி)

அன்பென அருளென அருங்குண முடையாய்,
இற்பணி யாற்றற் கிருக்கை போல்வாய்,
இல்வாழ்க் கைக்கே இன்னுயிர் அனையாய்,
என்னிலுக் கியைந்த நீதிக் கொள்கலம்,
இற்கலை வல்ல இன்பார் மனைவீ,
அடைக விரைந்தெனை; அடைக விரைந்தே.

(மனைவி அரங்கினில் வந்து)

**நடி** : இங்குளேன் ஐயனே, இடும்பணி யாதோ?

**சூத்திரதா** : ஐயை, பணித்தல் கிடக்க; அஃதென்?
நாம்வா ழில்லம் நற்பே றுபெற
அருளுறு *பனவரை* அழைத்தனை கொல்லோ?
வாரா விருந்தினர் வந்தன ரோதாம்?
அடிசின் முயற்சிகள் அளப்பில வாயின!

**நடி** : ஐய, என்னாற் பகவர் அந்தணர்
அழைக்கப் பெற்றனர் ......

**சூத்திரதா** : ……… அழைத்ததன் காரணம்?

**நடி** : பகவன் சந்திரன் பற்றப் படுதலென்?

**சூத்திரதா** : ஐயை, எவரே அதனைக் கூறியோர்?

**நடி** : நகரினர் ஐய நவின்றனர் நன்றே.

**சூத்திரதா** : ஐயை, அறுபான் நான்காம் அகலார்
வான நூலினை வலிதிற் பயின் றுளேன்
அந்தணர்க் காக்குக அறுசுவை அடிசிலை.
சந்திர கிரகண மெனவே சாற்றி,
எவரோ உன்னை ஏமாற் றினர்காண்-,

*காண்டிகா,*
கொடுங்கோட் கேது *கோடுகூ டாத*
*வான்மதி* அடர்க்க வலிதின் முயல்வன்!

(இங்ஙனம் ஒருபாதி சொல்வதற்குள் திரைக்குப் பின் ஒரு கனைகுரல்)

ஆஆ, உயிரோ டுள்ளேன்! ஆரவன்!

**சூத்திரதா** : புதனின் இயைபே புரக்க இவனை

**நடி** : ஐய, ஆரவன் அவனியி லிருந்தே
சந்திரக் கோளைக் காக்கச் சமைந்தோன்?

**சூத்திரதா** : ஐயை, கண்டிலன் அவனை யானே.
குரலால் அவனைக் கூர்ந்தறி வேன்யான்!

('கொடுங்கோட் கேது' எனத் தொடங்கும் அடிகள்
மீண்டும் படிக்கப் பெறுகின்றன)

(உற்றுக் கேட்டு)

ஐயை, அறிந்தேன் : அவன்கௌ டிலியன்!

(இங்ஙனம் பாதி கூறும்போதே, அதனை நடி கேட்டு, அஞ்சுகின்றனள்.)

**சூத்திரதாரன்** : நந்தர் குலத்தை நள்ளரு சினத்தீக்
கொளுவி யெரித்த *கோணல் மதியினன்*
*கௌடிலி யனவன்.* 'சந்திர கிரகணம்'
என்னக் கேட்டவன் எழிலார் சந்திரப்
பெயரினன் சந்திர மோரியன் பகைவரான்
அடர்க்கப் பெறுவா னெனவே அறிந்தனென்.
இத்தலை விட்டனம் இம்மெனப் போவோம்.

(அவிழ்ந்த குடுமியைக் கையாற் றடவிச் சாணக்கியன் வருகின்றான்.)

**சாணக்** : ஆஆ, உயிரோ டுள்ளேன்! ஆரவன்

சந்திர குப்தனை அடர்க்க விழைவோன்?
குஞ்சரக் குருதியைக் குடித்த கோளரி
வாய்தான் செக்கர் வானம் மான,
இலகுறு எயிறே இளம்பிறை சிவணக்,
கொட்டா விகொளக் கொடுவாய் திறக்கும்
ஏல்வையில் எயிற்றினை யாவன் ஆட்டிப்
பறித்தே எடுக்கத் துணிந்த வலியினன்?

அன்றியும்,

*என்சினத் தீயின் எழுந்த கரும்புகை*
*என்னக் காணுமென் குடுமி,* எறுழ்வலி
நந்தர் குலத்தை நசுக்க வெழுந்த
கருமா சுணமெனக் கருதத் தகுமால்;
மடியவே விரும்பும் மனிசன் எவன்தான்
முடிபடும் எனாது குடுமியை விழைந்திலன்?

அன்றியும்,

தன்னுடை ஆற்றலும் மாற்றான் ஆற்றலும்
அளந்தறி கில்லா அறிவிலி ஒருவன்
நந்தர் குலமெனும் நள்ளரு காட்டின்
தூமகே துவெனத் திகழுமென் சினத்தீக்
கடத்தல் கருதினே, விட்டில் மான
வீடுவன் இன்னுயிர் விண்ணோர் விருந்தாய்.
சாரங் கரவா, சாரங் கரவா!

(மாணாக்கன் அரங்கினில் வந்து)

**மாணாக்கன்** : ஆசாற் குரிசில், ஆணையிட் டருள்க.

**சாணக்** : இருக்க விழைந்தேன். இடங்காண் இன்னே.

**மாணக்** : முன்கட் டதனிடைத் துன்னிய பிரம்பின்
இருக்கை யொன்றனுள் இருத்திர் இனிதின்.

**சாணக்** : அரசியற் பணிகள் அளப்பில வாதலின்
உள்ளம் குழப்பம் உற்றதே யன்றிச்
சீடரை நோக்கிச் சிடுசிடு வென்னும்
ஆசாற் கமைந்த பிறவிக் குணமிலை.

(சாணக்கியன் இருக்கை யொன்றன் மிசை இருக்க மாணாக்கன் போகின்றான்; சாணக்கியன் சிறிதே ஆய்ந்து தனக்குள்)

நந்தர் மரபு நனியழிந் தமையின்
மண்டிய வெகுளியன் மந்திரி இராக்கதன்

தந்தை கொலையுணத் தணிப்பில் சினத்தன்
பர்வத கன்மகன் மலயகே துவுடன்
சந்தினைச் செய்தே ''சமரில் வென்றால்
நந்தர் அரசெலாம் நினக்கே தருவன்''
என்றே கூற, எழுந்த உவகையன்
மலயன் மாவலி மிலேச்சப் படையொடு,
விருடல வேந்தனை விரைவினில் அடர்ப்பன்
என்னுமிச் செய்தியை எங்ஙனம் நகரினர்
அறிந்தனர்? அதுதான் நனிமிக வியப்பால்!

(ஆய்ந்து)

அறிந்தா லென்னை? அந்நாள் அளப்பில்
மக்கள் முன்னர் 'மாய்ப்பன் நந்தரை'
என்றொரு வஞ்சினம் எடுப்புடன் கூறினென்!
கடந்தனன் வஞ்சினக் கடக்கரு யாற்றினை!
கடந்த எனக்குக் கூன்றவிச் செய்தியை
அடக்குதல் சிறிதும் அரிதிலை எளிதே.
எங்ஙன மென்னின், இயம்புவென் கேட்டிர்.
எனாது சினத்தீ எட்டுத் திக்கெனும்
பகையிள மகளிர் நகைமதி முகத்தினைச்
சோகப் புகையால் மாசுறச் செய்தே,
மோக நீற்றினைச் சூழ்ச்சிக் காற்றால்
மந்திரி மரமிசை மாணுற வீசிக்,
கலங்கிய நகரின ரென்னும் கணக்கில்
பறவைத் தொழுதியாற் கைவிடப் பெற்றே,
நந்தி வளர்ந்த நந்தர் குலத்தின்
மூங்கில் முளைகளை முருக்கி யொழித்தது;
தணிந்த ததுவெனின் தளர்வா லன்றே!
எரிக்கப் பொருளிலை யென்றே தணிந்தது.

அன்றியும்,

அந்நாள் என்னை இந்நகர் மக்கள்
துயருறு முகத்தினர் 'சீ'யெனும் வாயினர்,
இறைவனை அஞ்சி இறைஞ்சிய கழுத்தினர்,
இருக்கையில் இருந்தெனை இழுத்துத் தள்ளக்
கண்டனர். கண்டவம் மக்கள், இந்நாள்
மலைத்தலை யிருந்த மதகரி யொன்றனை
உறுவலிச் சீயம் உருட்டிவிட் டாலெனச்
சிங்கஞ் சுமந்த சீரணை மிசைவதி
நந்தரைக் குலத்தொடு நசுக்கிய என்னை
நோக்குகின் றனரால்; நுவலரு வஞ்சினம்

இந்நிலை யினிதே இறுதியுற் றாலும்,
விருடலற் கெனவே விளங்குறு வாளினைக்
கைவிட லிலனாய் மெய்ப்பணி புரிகுவென்.

என்னால்,

புடவியின் இதயம் புகுந்தரி பிணியாம்
ஒன்பான் நந்தர் ஒழிக்கப் பெற்றனர்.
பொய்கையுள் வேர்க்கொளும் பொங்கொளி மரையெனத்
திருவினைத் திறலுறு மோரியர்க் காக்கினென்.
கருதிச் செய்த இருவினை தாமே
இன்பதுன் பமென இருபயன் தரவே,
நண்பரே பகைவரே என்றிவர் தாமும்
பாதி பாதியாய்ப் பங்கினைப் பெற்றனர்.

அன்றி,

இராக்கத அமைச்சனைப் பிடியோம் எனினே,
பொன்றிய நந்தரான் ஒன்றிய பயனிலை.
சந்திரன் அரசும் சற்றும் நிலையிலை.

(சிறிதாய்ந்து)

இராக்கத அமைச்சன் இறந்த நந்தர்
குலத்துக் கொண்டுள பத்திப் பண்பு
உரைத்தற் கரிதாய் உரையிறந் துளதால்!
நந்தர் குலத்துள் நாறிய ஒருவன்
உயிருட னிருக்கும் அளவும், உறுவலி
இராக்கதன் விருடல அமைச்சினை ஏலான்;
பகைவன் முற்றுகை பலியா வண்ணம்
அவனை அடக்கிட என்னால் இயலும்;
அக்கருத் தானே-அருந்தவம் ஆற்ற
அடவி யிருந்த அளியன் ஏழை
நந்தர் குலமுதல் சர்வார்த்த சித்தியைக்
கொன்றிட் டனென்யான். கோணல் இராக்கதன்
மலயகே துவுடன் மாண்பினிற் கூடி
எம்மை ஒழிக்க எவற்றினும் பெரிய
முயற்சிகள் முனைப்புடன் செய்கின் றனனால்.

(விசும்பினை நோக்கி)

நன்றிது அமைச்ச, நன்றிது இராக்கத,
நன்றிது மறையோய், நன்றிது மன்ற.
அமைச்ச வியாழனே, அறவும் நன்றால்!

என்னெனின்,

அரசன் ஆண்ட அந்நாட் காலை
மக்கள் மன்னவன் மாபணி கேட்டனர்
வருவாய் குறித்தே, வறண்ட காலை
சிலரவன் வழிப்படல் சென்ற அரசினை
மீளப் பெற்றே ஆளினும் ஆளலாம்
எனுமொரு கருத்தால். ஆயின் இராக்கத,
அந்நாட் பெற்ற அளப்பரு நன்றியைக்
கருதிச் செய்குநர் காண்டற் கரியர்.
ஆகலி னன்றே அமைச்ச விராக்கதன்
''விருடல அமைச்சினை விழைவுட னேற்பின்
அரசுதான் நலமுறும்'' என்றே நாமும்
உன்னைப் பற்ற உலவா முயற்சியேம்.

என்னெனின்,

வேந்தன் மாட்டே *விள்ளாப் பத்தி*
இருந்தும் அறிவுதான் இல்லாக் கயவனால்
என்னுறும்? எஞ்சா அறிவும் ஆற்றலும்
விஞ்சிய வேனும் *வேந்துழைப் பற்றிலான்*
ஒருவனால் *என்பயன்?* ஓரின், உழையர்-
அறிவும், ஆண்மையும், அஃகா அன்பும்,
உடையோர் எனினே உறுவலி வேந்தரின்
இன்பக் காலையும் துன்பக் காலையும்
மங்கலம் விளைப்பர் மாண்புடன் மன்ற.
எஞ்சியோர் எண்ணில் மனைவியர் போல்வர்.
ஆதலின் இதன்கண் இம்மியும் துயிலேன்
ஆள்வினை ஆற்றி அமைச்சனைப் பற்றுவல்-
எங்ஙன மெனினே, இயம்புவல் அதனையும்.
''பர்வத கன்எனும் பாராள் மன்னவன்
எம்முடை நண்பன் என்றொரு நினைவால்,
விருடல பர்வத வேந்தர் இருவருள்
ஒருவர் ஒல்லையின் இறத்தல் நன்றென,
நச்சுக் கன்னியை நச்சுமா செய்தே,
கொன்றனன் அவனைக் கொடிய னிராக்கதன்''
என்றொரு செய்தியை எழுப்பியே விட்டேன்.
நகரினர் இதனை நன்னர் நம்பப்
பாகுரா யணனால் பர்வதகன் மகன்
மலயகே துவினை மந்தண முறையால்
தனியே அழைத்துத் தணிப்பரும் அச்சம்
ஊட்டி 'உற்ற திதுவால், உளங்கொள்:
நுந்தையைக் கொன்றான் நூற்சா ணக்கியன்
என்றொரு செய்தியை எழுப்பினன் பொருக்கென.
இராக்கத மதியால் இடையீ டின்றித்

தூண்டுதல் பெற்ற துணிவுடைக்' கேது
போரினுக் கெழுதரு பொங்கிய முயற்சியை
அடக்குவ தற்கே அலரிஃ தெழுப்பினென்.
பர்வத வேந்தனைப் படுகொலை செய்தனன்
அமைச்ச னிராக்கதன் என்னும் அலர்தான்
அனைவரும் அறிந்த செய்தி ஆகலின்,
அதனை அடக்கலிற் கருத்திலை எனக்கே.
மாறுவே டத்தினர், மாணுறு மொழியினர்,
பன்மொழி யறிகுநர், பல்லிட மறிந்தோர்,
நடையே உடையே நவிலும் முறையே
என்றிவை யனைத்தும் நன்றறி குநராய்ப்
பற்பல ஒற்றர் நமரெவர்? நந்தம்
பகையெவர்? என்று பகுத்தே யறிய
எங்கும் சென்றனர் எம்பணி புரிகுவர்.
பாடல நகர்வதி பைஞ்ஞிலத் தினரிடை
எமரெவர்? எவரெவர் எண்ணரு வெம்பகை
அமைச்சற் சார்பினர்? அவர்செயல் யாவை?
என்றிவை யனைத்தும் என்னால் விழிப்புடன்
அறியப் படுமால், அணுவுந் தாழ்ந்திலென்.
சந்திர குப்தனைச் சார்ந்தே நந்தரை
ஒழிக்க ஒல்லென உரறி எழுந்த
முதலிக ளான பத்திர படனும்
பிறரும் பிழையறப் பகைவன் பக்கம்
தலைக்கீ டுகளைத் தகுமுறை பலவாற்
சொல்லிச் சொல்லிச் சேர்ந்தனர் மன்ற.
நம்பணி யாற்ற நயந்தனர் அவரெலாம்.
நம்பக முடையோர், நல்லன் புடையோர்,
பத்தியைப் பன்முறை தெரிந்து தெளிந்தே
அமர்த்தப் பெற்றனர் அரசனைப் பகைவர்
நஞ்சிடா வண்ணம், நல்லோர் அவர்தாம்
கண்ணிமை யென்னக் காக்கின் றனரால்.
இந்துசன் மாவெனும் அந்தணர் குரிசில்
என்னுடன் இளமையில் எழிற்கலை கற்றோன்;
அல்லற் காலை ஆருயிர் ஈயும்
விழுமிய நண்பன்; விசும்பு நூலின்
அறுபதும் நான்கும் ஆய பகுதியை
வெள்ளி நீதியை உள்ளிப் பயின்றோன்!
நந்தரை அழிக்க நானொரு வஞ்சினம்
கூறிய அந்நாள், கூர்மதி யிவனை
அமண முனியென அணிகெழு பாடலி
புரத்துக் கொணர்ந்து, புறமறி யாதே
நந்தரின் எல்லா அமைச்ச ரிடத்தும்

நாளும் நண்பொடு பழகச் செய்தனென்.
இராக்கதற் கிவனிடம் இயம்பரு மதிப்பே.
இவனே எனக்கொரு இனிய நண்பனாய்
பெரும்பய னளிக்கும் அருஞ்செயல் புரிவான்.
'இதன்கண் இதுகுறை' எனவே இகழ்ச்சிக்
கெதுவும் இலையாய் எல்லாம் முடிந்தன.
வேந்தன் விருடலன் வேத்தியல் முதல்வன்
எனினும், எம்போ லியரை எல்லா
வினைக்கணும் விட்டனன் வாளா இருப்பன்.
அரசனே அரசியல் அரும்பணி ஆற்றின்
துன்பந் துஞ்சி யின்பம் மல்கும்.
இயற்கை வயமிகு ஏந்தலும் களிறும்
இன்ப நுகர்ச்சியில் எஞ்சா விழைவால்
இன்னல் உறுதல் இயல்பே யன்றோ?

(எமனுருவம் எழுதிய படத்தொடு ஒற்ற னொருவன் வருகின்றான்.)

**ஒற்றன்** : அந்தகன் அடியினை அண்மிப் பணிந்தேன்.
கடவுளர் பிறரென்? பத்தர் பதைப்ப
அவ்யமன் அவர்தம் ஆருயிர் கவர்வன்.

மேலும்,

நயனில் கூற்றின் நல்லடிக் கண்ணே
வீழ்ந்தா ரென்னின் வீயார் உயிர்ப்பர்.
ஆருயிர் பருகும் அந்தகன் அருளால்,
விரிநீ ருலகில் வாழ்கின் றேம்யாம்.
ஈதோ இங்குள இல்லிற் புகுந்தே
எமபடங் காட்டுவென் ஏழிசை பாடுவென்.

(இங்குமங்கும் உலவுகின்றான்.)

**மாணாக்** : (ஒற்றனை நோக்கி) நல்லோய் நண்ணலை.

**ஒற்றன்** : .......மறையோய் எவரிலம்?

**மாணாக்** : என்றன் ஆசான் இல்லம், எவரும்
புகழுஞ் சாணக் கியரெனும் புண்ணியர்!

**ஒற்றன்** : (முறுவல் பூத்து)
அமையும் அந்தண, அங்ஙன மாயின்
அணியார் இலம்என் அறச்சோ தரரது,
அவருமென் உற்றார், ஆண்டுப் புகவிடு.
புகுந்தே புகட்டுவென் அறப்பொருள்
எழிலுறு எமபடம் முழுதும் விரித்தே.

**மாணாக்** : (சினத்துடன்)
சீச்சீ, மடவோய், சீர்மிகு ஆசாற்
பெருந்தகை யினும்வலை பேரறம் பேச

**ஒற்றன்** : அந்தண வெகுளல்: அளப்பில் செய்திகள்!
எவரும் எதையும் அறிவர் என்றல்
ஒல்லா தன்றே; ஓர்தி மன்ற;
உன்னுடை ஆசான் ஒருசில அறிவன்.
எஞ்சிய எம்போ லியர்தா முணர்வர்.

**மாணாக்** : அறிவிலி, ஆசா னடிகளின் அஃகா
அறிவினைக் கவரும் அவாவினை போலும்!

**ஒற்றன்** : அடிகள் அனைத்தையும் அறிவ ரெனினே
சாற்றுக அவர்தாம் சந்திரன் பகையை.

**மாணாக்** : *அறிவறை, அறியினென்* அறியாக் காலென்?

**ஒற்றன்** : அதன்விளை வவரே அறிவார் நீயலை.
அறிவையோ நீதான் *மரைமலர் அழகார்*
மதியினை வறிதும் விழையா தென்பதை?
கஞ்ச மலர் தான் நெஞ்சங் கவரினும்
முழுமதி யின்கண் ஒழுக்கந் தவறுமால்.

**சாணக்** : (உற்றுக்கேட்டுத் தனக்குள்)
சந்திரன் பகைவர் சகத்திவர் என்ன
அறிவல் யானென அறைந்தனன் குறிப்பால்.

**மாணாக்** : புந்தியில் கயவ, பொருள்விளங் கல்லாப்
புன்மொழிப் பேசினை;

**ஒற்றன்** : ...........ஙனமொழி அந்தண,

**மாணாக்** : எங்ஙனம்?

**ஒற்றன்** : ..........என்மொழி ஏற்குநர்ப் பெறினே.

**சாணக்** : ஐய புகுதுக அச்சமில் லாமல்.
அடைகுவை ஏற்குநன் அறிகுநன் ஒருவனை.

**ஒற்றன்** : புகுந்தேன் இன்னே (புகும்போது) பொங்குக வெற்றி.

**சாணக்** : (ஒற்றனைக் கண்டு தனக்குள்)
இவன்யார் இவனே இனிய நிபுணகன்!
மக்கள் மனம்அறி மதிவலன், முன்னர்
என்னுழை இப்பணி ஏற்றுச் சென்றவன்.

(வெளிப்படையாய்)

நல்லோய் வருக, நன்னர் இருக்க.

**ஒற்றன்** : *ஆரியர் ஆணை*; அங்ஙன மேயான்.

(தரையில் இருக்கின்றனன்)

நல்லோய் நவில்தி நகரினர் செய்திகள்.
மக்கள் மன்னவற் கன்பினர் தாமே?

**ஒற்றன்** : அன்பினர் ஆரிய அன்பினர். அவர்தம்
வெறுப்பின் காரணம் வேரறு மாறே
செய்தனிர் ஆதலின், செயிர்தீர் மக்கள்
சந்திர குப்தனைச் சார்ந்தனர் அன்பால்;
ஐயமே இல்லை, ஆயினும், மூவர்
நகரினர் நந்தர் அமைச்சன் இராக்கத
னிடத்தே அன்பும், இயம்பரு மதிப்பும்,
உடையராய் உறுபுகழ்ச் செல்வர் சந்திர
வேந்தரின் வீயாத் திருவினைக்
காணவும் பொறாராய்க் கலித்துத் திரிவரே.

**சாணக்** : (சினத்துடன்)
அன்பனே, அவரெலாம் அவர்தம் ஆருயிர்
வெறுத்தன ரென்றே விளம்புதி; நல்லோய்,
அவர்தம் பெயர்தமை அறிவையேல் அறைதி.

**ஒற்றன்** : பெயரறி யாக்காற் பேசேன் நும்முன்.

**சாணக்** : அறிந்தனை யாயின் அறைதி, கேட்குவன்.

**ஒற்றன்** : ஆரியர் பெரும, அறைகுவன் அவர்தமை;
முதற்கண் அமணச் *சீவ சித்தி*
பகைவர்ச் சார்ந்தே பற்றினை வைத்தனன்.

**சாணக்** : (தனக்குள்)
அமண ஆண்டி அடங்கலர்க் கன்பன்!

**ஒற்றன்** : சீவ சித்தியே சீர்சால் அமைச்சன்
இராக்கதன் ஏவிய இருவிடக் கன்னியைப்
பர்வத வேந்தனைப் படுக்கெனப் போக்கினன்.

**சாணக்** : (தனக்குள்)
சீவ சித்தி சிறந்த நஞ்சாரன்!

(வெளிப்படையாய்)

இரண்டா மவனெவன்? இயம்புதி, நிபுணக.

**ஒற்றன்** : கலைநிறை குரிசில் காயத் தனவன்
*சகட தாஸன்*, சாலார் சார்பினன்,
இராக்கதற் கிறப்ப இனியனாம். வேறென்?

**சாணக்** : (நகையுடன் தனக்குள்)
காயத் தன்அவன்! காயத்த னேனும்
கருதலன்! கருத்தொடு களைதல் வேண்டும்.
சித்தார்த் தகனையும் அவன்பால் நண்பன்
போலப் பழகப் போக்கினன்; பார்க்குவம்.

(வெளிப்படையாய்)

மூன்றா மவன்தான் யாவன்? இயம்புதி.

**ஒற்றன்** : மூன்றா மவன்தான் முதல்வ, இராக்கதன்
இரண்டாம் இதயம்; இவனே மின்னுறு
மணிக்கலன் இயற்றுநர் மாபெருந் தலைவன்
புட்ப புரம்உறை சந்தன தாஸன்.
இராக்கதன் இந்நகர் நீங்கி இரிந்த
அந்நாள் மனைவியை அவன்மனை வைத்தான்!

**சாணக்** : (தனக்குள்)
மன்ற இராக்கதன் மாண்புடை நண்பனே
ஆதல்வேண்டும். அல்லனேல் அவனிடை
மனைவியை வைத்துச் செல்லான், செல்லான்!

(வெளிப்படையாய்)

நல்லோய், நண்பன் சந்தன தாஸன்
மனைக்கண் கற்புடை மனைவியை இராக்கதன்
இருத்தினன் என்பதை எங்ஙனம் அறிந்தனை?

**ஒற்றன்** : ஐயவிம் முத்திரை ஆழியே அனைத்தையும்
அறியுமா செய்யும் ஆரியர் பெரும.

(முத்திரை மோதிரத்தைச் சாணக்கியன் கையில்
வணக்கத்துடன் அளிக்கின்றான்)

**சாணக்** : (முத்திரை ஆழியை உற்று நோக்கி இராக்கதன் பெயரினைப் படித்து மகிழ்ச்சியுடன் தனக்குள்)
இப்போ திங்ஙனம் இயம்புவென்; இராக்கதன்
அமைந்தவென் விரலுக் கன்பினன் ஆயினன்.

(வெளிப்படையாய்)

நல்லோய் ஆழி நண்ணிய வாறென்?
நவிலுதி நானதைக் கேட்க நயந்தனென்.

**ஒற்றன்** : அமைச்ச கேட்டி, அந்நாள் அடியேன்
நும்பால் ஒருபணி ஏற்றுச் சென்றே
நகரினர் செயலை நன்னர் அறிய
எமபடம் காட்டி எங்கும் திரிந்தேன்.
அயன்மனை புகுந்தும் ஆரும் அயிர்த்திலர்.
மணிக்கலன் ஆக்கும் மாணுறு சந்தன
தாஸன் இல்லினுள் தடுப்பறப் புகுந்தே
எமபடம் விரித்தனன் ஏழிசை பாடினென்.

**சாணக்** : பின்னர் நிகழ்ச்சி பேசுக பெரிதும்.

**ஒற்றன்** : ஐந்தாண் டுடையோன், அழகார் உருவினன்,
மலர்ந்த கண்ணினன், மழவிளஞ் சிறுவன்,
ஒருவன்-ஓரறை நின்றும் ஒய்யென
வெளிவர முயல, ''வெளியே சென்றனன்
வெளியே சென்றனன், தனியன் அச்சோ''
எனவே அங்குள எழிலார் மாதரின்
அஞ்சி அலறும் அவலக் குரலெழச்,
சின்னஞ் சிறுவன் வெளிவரு காலை
காரிகை ஒருத்தி கதவிடை வந்தே
என்னிது வென்ன எட்டிப் பார்த்து
மழலைச் சிறுவனை மடக்குதல் கருதிமென்
கொடிக்கரம் நீட்டிப் பிடித்துத் தடுப்பப்,
பாலனைத் தடுத்த பரபரப் பாலே
ஆணுரு விற்கென ஆக்கிய ஆழி
அசைந்த அணிவிரல் நழுவி என்னடி
தெறித்து வீழ்ந்தது தெரிவை அறியாள்.
ஆன்றோர் அடிவீழ் காலை அடங்கிக்
குடந்தம் பட்ட குலமகள் மான
அசையா திருந்தனள் அம்மென் மாதும்.
முதுக்குறை வமைச்சன் முத்திரை மோதிரம்
ஆதலிற் பெரும, அடியிணை சேர்த்தனன்.
வந்தவா றிதுதான் வலிமிகு ஆரிய.

**சாணக்** : நல்லோய், அறிந்தனென் நன்றே இதனை.
சென்றீ விரைவில்; செயற்பயன் அடைகுவை.

**ஒற்றன்** : ஆரியர் பணியே அடியேன் பணியாம்.

(வெளிச் செல்கின்றான்)

**சாணக்** : சாரங் கரவ சாரங் கரவ!

**மாணாக்** : (உட்புகுந்து)
ஆசா னடிகள் ஆணையிட் டருள்திர்.

**சாணக்** : ஏட்டுடன் மைக்கலன் என்னுழைக் கொணர்தி.

**மாணாக்** : (கொணர்ந்து தருகின்றான்)

**சாணக்** : (ஏட்டினை எடுத்துத் தனக்குள்)
என்னென் றெழுதுகேன்; எழுத்தித னாலே
வினைவல அமைச்சனை வெல்லுதல் வேண்டும்.

**வாயிற்காப்போன்** : (புகுந்து) வெற்றி அடைக விழுக்கலை ஆரிய.

**சாணக்** : (மகிழ்ச்சியுடன் தனக்குள்)
வெற்றி மொழியை விழைந்தனென் பெரிதும்.

(வெளிப்படையாய்)

*சோணோத் தரையே* சொல்லுதி வரவென்?

**வாயிற்** : சாமீ, சந்திர வேந்தர் சென்னியில்
கஞ்ச முகையென அஞ்சலிக் கையினை
வைத்தே வணங்கி வேண்டினர் இதனை.
பாரினை நீத்த பர்வத வேந்தற்
கீமக் கடன்செய இன்மதி ஆரியர்
ஆணை வேண்டினர். அளித்தாற், செய்தே
அந்நாள் அம்மனன் அணிந்த கலன்களை
அந்தணர் பலர்க்கும் அளித்தல் கருத்தாம்.

**சாணக்** : (மகிழ்ச்சியுடன் தனக்குள்)
நன்றிது விருடல, நண்ணுமென் னிதயம்
இனையவே சூழ்ந்தனை இம்மொழி அனுப்பினை.

(வெளிப்படையாய்)

சோணோத் தரையே, சொல்லுக விருடல
வேந்துழை விளம்புமென் மொழியால். ''நன்றிது
பிள்ளாய், பெற்றனை உலகியல் அறிவினை.
விரும்பிய வண்ணம் விழுப்பணி முடிக்க.
ஆயின், பர்வதன் அணிந்த குணங்கெழு
அணிகளைக் குணமிகு அந்தணர்க் களித்தலே
அமையும். ஆதலின் அவர்தமை நன்னர்
ஆய்ந்தபின் அரசர்க் கனுப்புவென்'' எனவே.

**வாயிற்** : ஆரியர் பெருமான் ஆணையின் வழியே.

(போகின்றாள்)

**சாணக்** : சாரங் கரவ, சாற்றென் ஆணை
விசுவா வசுமுதல் மூவர் சோதரர்
ஏனையோர் தமக்கே; ஏற்க எழிற்கலன்
விருடல வேந்திடை; வந்தெனைக் காண்கென.

**மாணாக்** : அங்ஙனம் ஆற்றுவென் ஆசாற் பெருந்தகாய்.

(போகின்றான்)

**சாணக்** : இவ்வெழுத் திதுதான் இறுதியில் வருக.
முதற்கண் எதனை வரைதல் பொருந்தும்?

(ஆய்ந்து)

அம்ம அதனை அறிந்தேன் ஒற்றர்
வாயிலாய், மிலேச்சன் மலய கேதுவின்
வழிச்செலும் வயவலி மன்னிளங் குமரர்
ஐவர் கூர்மதி அமைச்சன் இராக்கதற்
கின்னுயிர் நண்பராய் ஏவின செய்தற்
கியைந்தே நின்றனர் எனவே மன்ற.

அவர்தாம்,

குலூத மன்னன் சித்திர வன்மன்,
மலயகோச் சிங்கன் சிங்க நாதன்,
காசுமீ ரத்துப் புட்க ராக்கன்,
பகைப்புக ழெல்லாம் வியப்புடன் நுங்கிய
சிந்துசே னன்எனும் சிந்து நாடன்,
பரிப்படைப் பார சிகனே மேகன்
என்ப. இன்னோர் பெயர்தமை எழுதுவல்:
சித்திர குப்தனே சிதைக்கவிவ் வெழுத்தினை.

(சூழ்ந்து)

எழுதேன் ஏட்டின் முன்னரை; எதுவும்
விளங்குதல் இலாதே விட்டிடல் நன்றாம்.
(ஏட்டில் எழுதி)
சாரங் கரவ.........

**மாணாக்** : (புகுந்து) ...........சார்ந்தனென் பணித்திர்.

**சாணக்** : கேள்வி மறையவர் கருத்துடன் எழுதினும்
எழுத்தே எனைத்தும் எவர்க்கும் விளங்கா
ஆதலிற் பிள்ளாய், அச்சித் தார்த்தனை--
''எவனோ ஒருவன் எவனோ ஒருவற்
கெழுதுகல் போன்றும், மொழிதல் போன்றும்,

எழுதுவி எழுத்தினைச் சகட தாசனால்.
இன்னாற் கெனவே இதன்புறத் தெதனையும்
எழுதுதல் வேண்டா; எழுதி முடித்தெனைக்
காணலும் வேண்டும் கடிதின்'' எனவே
என்னுடை ஆணையால் இன்னே மொழிக.
ஆரியர் இதனுக் கடிப்படை யென்ன
வறிதும் கூறேல் ..........

**மாணாக்** : ..........மனம்போல் ஆரிய.

(போகின்றான்)

**சாணக்** : (தனக்குள்) மலய கேதுவை வென்றேன்! மன்ற.

(கடிதமும் கையுமாய்ச் சித்தார்த்தன் நுழைந்து)

**சித்தார்த்** : ஐயா, சயங்க. ஐயா, அவரு
சகட தாசரு *எளிதின துங்க.*

(கடிதத்தைக் கையில் வாங்கி)

வனப்புடை வரிவடி வத்தா லியன்றது!

(தனக்குள் கடிதத்தைப் படித்துப் பார்த்து)

நல்லோய்,
மோதிரம் இதனால் முத்திரை யொன்றிடு-

(அங்ஙனமே செய்து)

**சித்தார்த்** : *வச்சே னுங்க வகையா முத்திரே;*
*என்னா செய்ய* ஏழைக் காணை.

**சாணக்** : நல்லோய் நம்பகம் உடையோர் நாடிச்
செய்யும் ஒருசெயல் நீசெய வேண்டி
விழைகின் றேன்யான்: இழைப்பா யன்றே?

**சித்தார்த்** : (மகிழ்ச்சியுடன்)
எம்மேல் சாமி *என்னா தயவு?*
அடிய னாலே *என்னா ஆவணும்?*
*அத்தே சொலுங்க அப்டியே* செய்றேன்:

**சாணக்** : முதற்கண் விரைக மன்னிய கொலைக்களம்:
கொலைவினை மாக்களைக் கடுஞ்சினங் கண்ணிய
வலக்கண் இமைத்தலின் வான்பொருள் தன்னை
அறியுமா செய்வி. அறிந்த அவரெலாம்
அக்குறி கண்டனர் அஞ்சினர் போல
அங்கென் இங்கென அலையக் குலைய

ஓடுங் காலை ஒண்மதிச் சகடனை
கொலைக்களம் நின்றும் வல்லே தூக்கி
இராக்கத னுழையே இறக்கி விட்டிடு.
ஆருயிர் நண்பனை அளித்தனை யெனஅவன்
பரிசில் தரினும் பணிவுடன் பெறுக.
சின்னா ளிருந்தனை சிறுபணி செய்க.
அடங்கலர் நம்மை அண்மிய காலை
விழிப்புடன் 'இதனை' விரைவினிற் செய்திடு.

(காதில் மந்தணமாய்ச் சில மொழிகின்றான்)

**சித்தார்த்** : *சர்தாஞ் சாமீ, சாச்சுப் போட்றேன்.*

**சாணக்** : சார்ங் கரவ, சாரங் கரவ!

(புகுந்து)

**மாணவன்** : குறித்தன பணித்திர்; குரிசில், செய்குவன்.

**சாணக்** : காலபா சிகனே, தண்டபா சிகனே
என்னும் இவர்தமை எனாது மொழியால்
விருடலன் ஆணை இதனை விளம்புதி.
சீவ சித்திச் சின்மதிச் சமணன்
இராக்கதன் ஏவிய இருவிடக் குமரியாற்
கொன்றனன் பர்வதக் கோவினை எனவே
நகரினர் எவரும் நன்னர் அறிய
எடுத்துத் தூற்றி எள்ளள வேனும்
இரக்க மின்றி இந்நகர்த் துறந்தே
இரியுமா செய்க.

**மாணாக்** : .......... இன்னே செய்வல்.

(உலவுகின்றான்)

**சாணக்** : சிறுவ, நில்நில்; செப்புவன் ஒருமொழி:
காயத் தகுலக் கயவச் சகடன்
இராக்கத அமைச்சன் ஏவல் வழியே
நாளும் எனது நல்லுடல் தபுக்க
முயல்கின் றானாம்: முயலும் அவன்றன்
குற்றந் தூற்றிக் கொடுங்கழு வேற்றுதி.
கடும்பினர் எவரையும் கடுஞ்சிறை செறித்தி.

**மாணாக்** : ஆணையின் வழியே அனைத்தையும் செய்வல்.

**சாணக்** : (கவன்ற மனத்துடன் தனக்குள்)
இழிகுண இராக்கதன் என்கைப் படுவனோ?

**சித்தார்த்** : *புடிச்சிகி டேனுங்க புடியா சாமீ!*

**சாணக்** : (மகிழ்ச்சியுடன் தனக்குள்)
ஆஆ அங்கைப் பட்டனன் இராக்கதன்!

(வெளிப்படையாய்)

எவன் கைப் பட்டா னென்றனை நல்லோய்?

**சித்தார்த்** : சாமி சொன்ன சங்கதி தானுங்க.
மிடுக்காப் போயி முடிச்சே போட்றேன்.

**சாணக்** : (கடிதத்தையும் முத்திரை மோதிரத்தையும் அவன் கைக் கொடுத்து)
சென்றீ செயற்கே; செறிக வெற்றியும்.

**சித்தார்த்** : ஆணை எப்படி அப்படி யேங்க.

**மாணாக்** : (புகுந்து)
ஆசாற் பெருந்தகாய், அரசர் ஆணை
ஈங்கே இனிதின் இயற்றப் பெறுமெனக்
காலபா சிகனும் தண்டபா சிகனும்
ஆசான் திருமுன் அறிவிக் கின்றனர்.

**சாணக்** : நன்றாம், பிள்ளாய், நானிப் பொழுதே
மணிக்கல னாக்குநர் மாணுறு தலைவன்
சந்தன தாஸனைக் காண விழைந்தனென்.

**மாணாக்** : (வெளிச்சென்று சந்தன தாஸனோடு புகுந்து)
இவ்வழி, இவ்வழி, இருநிதி வணிக.

**சந்தனதாஸன்** : (தனக்குள்)
அருளில் ஆரியன் அறியான் ஒருவனை
அசதியில் அழைப்பினும் அஞ்சி விதிர்ப்பன்.
இயம்பரு குற்றம் என்னிடம் உளதெனின்
கேட்குமா றெவனோ கெடுமதி யெனக்கே.
என்னினும், முன்னரே ''என்னில் வாழும்
அருந்தன சேனன், அவனைச் சார்ந்தோர்
தமையெலாங் குறுகித் தறுகண் ஆரியன்
நம்மில் வந்தே நேடுதல் கூடும்;
விழிப்புட னிருந்தே விழுமதி யிராக்கதன்
கடும்பினைக் காத்தலிற் கண்ணுங் கருத்துமாய்
இருத்திர்'' என்றே எச்சரித் துள்ளேன்.
வருக வருக வல்லே எனக்கே.

**மாணாக்** : இவ்வழி வணிக இவ்வழி வருக.

**சந்தன** : வருகின் றேனைய, வருகின் றேன்யான்:

(இருவரும் உலவுகின்றனர்)

**மாணாக்** : (ஆசிரியனை அடைந்து)
சார்ந்தனன் ஆரிய, சந்தன தாஸன்.

**சந்தன** : வெல்க குரிசில் விழைந்தன பெற்றே.

**சாணக்** : (சந்தன் தாஸனைப் பார்த்து)
இருக்கை யிதன்கண் இனிதின் இருக்க.

**சந்தன** : வந்த என்னை வரம்பினை மீறி
வரவேற் றனிரால்; வருந்தினன் பெரிதும்.
ஆரியர் அறியா ஒன்றிலை, தரையில்
இருப்பல், இதுவே எனக்கியை வதுவாம்.

**சாணக்** : அப்படி எண்ணலை அரும்பெறல் வணிக.
நும்போ லியரெலாம் எம்போ லியரால்
மதித்தற் குரியர் மன்ற, ஆதலின்.
இருக்கை இதன்கண் இனிதின் இருத்தி.

**சந்தன** : (தனக்குள்)
தீயன் இவன்தான் தீங்கெதோ கருதினன்!

(வெளிப்படையாய்)

ஆரியர் ஆணையின் ஆறே இருப்பல்.

(இருக்கின்றான்)

**சாணக்** : சார்தரு வணிக, சந்தன தாஸ,
நலஞ்சார் வணிகம் நந்துமே வரிசையாய்?

**சந்தன** : (தனக்குள்)
அளவிலா அன்பு அய்யமே தருமால்!

(வெளிப்படையாய்)

ஆரியர் அருளால் வாணிகம் வளரும்.

**சாணக்** : சந்திர குப்தனின் சாற்றரு பிழைகள்
முன்னை மன்னரை உன்னச் செய்தவோ?

**சந்தன** : (காதினைப்பொத்தி)
பாவம் ஒழிக; பாடலி மக்கள்
கூதிர் காலக் குளிர்மதி கண்டெனச்
சந்திர வேந்தனைச் சார்ந்தே மகிழ்வர்.

**சாணக்** : ஆயின் வணிக, அரசன்-அமைந்த
மனத்தினர் மக்கள் மாட்டே மாண்ட
கைம்மா றொன்றினைக் கருதுவன் பெரிதும்.

**சந்தன** : எதனை எவ்வள வென்னிடம் விழைந்தென
அடியேற் கையர் ஆணையிட் டருள்க.

**சாணக்** : வணிக, இதுதான் சந்திரன் ஆட்சி;
நந்தர தில்லை. நந்தரைப் பொருளின்
நசையே நனியும் மகிழ்ச்சியை விளைத்தது.
சந்திர குப்த தேவற் கோவெனின்
நுந்தமை நலியாச் செயலே மகிழ்தரும்.

**சந்தன** : (மகிழ்ச்சியுடன்)
ஆரியர் பெரும, அருளப் பெற்றேன்

**சாணக்** : அரும்பெறல் வணிக, அந்நலி வின்மை
எங்ஙனந் தோன்று மெனவே வினவுதி.

**சந்தன** : அதனையும் ஆரியர் அருளல் வேண்டும்.

**சாணக்** : சுருங்கச் சொல்லின் வேந்தரின் பகையென
ஒருவனும் ஒழுகா தொழிதல் வேண்டும்.

**சந்தன** : ஆரியர் பெரும, அரசன் பகையென
அடிகள் கருதிய ஆக்கம் இழந்தோன்
எவனே? .......... .......... ..........

**சாணக்** : .......... எண்ணில், நீயே முதல்வன்!

**சந்தன** : (காதினைப் பொத்திக் கொண்டு)
பாவம் ஒழிக, பாவம் ஒழிக.
*எங்ஙனம் முளிபுல் எரியினைப்* பகைக்கும்?

**சாணக்** : இதுவால் அப்பகை; இன்றும் நீதான்
அரசர்க் கின்னல் ஆற்றும் அமைச்சன்
இராக்கதன் இல்லினர் பலரை நின்னில்
இருத்தி இனிதிற் காத்தும் வருவை.

**சந்தன** : ஆரிய அது *பொய்*; அறியான் ஒருவன்
அடிகட் கிதனை அறைந்தனன் போலும்!

**சாணக்** : அஞ்சலை வணிக அஞ்சலை; அந்நாள்
அரசரை அஞ்சிய பரிசனர், நகரினர்
விழையார் எனினும் மற்றவர் இற்கணே
மனைவி மக்களை வதிதர விட்டு

அயல்நா டுன்னி அகன்று போயினர்.
அவர்தமை மறைத்தலே அறப்பெருங் குற்றம்.

**சந்தன** : அமையும் அதுவே. அந்நாள் ஆரிய
இராக்கதர் உயிரினும் இனிய சுற்றம்
என்னிலுள் *இருந்த* தியைந்த உண்மையே.

**சாணக்** : முன்னர் 'பொய்யே' பின்னர் 'இருந்தது'
ஒன்றையொன் றொவ்வா உன்னுடை மொழிகள்.

**சந்தன** : இதுவே என்றனக் கியைந்த வஞ்சம்.

**சாணக்** : வணிக, சந்திர குப்த வேந்தர்
மறந்தும் மக்களின் 'வஞ்சம்' பொறார்.
இன்னே ஈக இராக்கதன் கடும்பினை.

**சந்தன** : ஆரிய, அந்நாள் இராக்கதன் சுற்றம்
இருந்த தென்றே இயம்புவன் பணிந்தே.

**சாணக்** : இப்போ தவர்தாம் எங்குச் சென்றனர்?

**சந்தன** : அறியேன்...........

**சாணக்** : (சிரித்து) .......... ஆஆ அறியாய் வணிக!
சென்னிமேல் அச்சம்! மருந்தோ சேய்த்தே!

**சந்தன** : (தனக்குள்)
என்னென இதுதான் இங்குற் றதுவே?
மிசையே கொண்டல் முழக்கம்; காதலி
நனியுஞ் சேயள், நஞ்சினைத் தீர்க்க
இமகிரி யின்கண் இன்பார் பச்சிலை
தலைமிசை யரவே தங்கிற் றந்தோ!

**சாணக்** : விஷ்ணு குப்தன் வீணர் நந்தரை
வீழ்த்திய தைப்போல் (தற்புகழ்ச்சி நாணி) விழுக்கலை
இராக்கதன்
சந்திர குப்தனைச் சாய்ப்பனென் றெண்ணேல்.

காண்டிகா,

நந்தர் உயிர்ப்புடன் நந்திய அந்நாள்
வீரமும் நீதியும் விளங்கித் தோன்றிய
வக்கிர நாஸன் முதலாம் அமைச்சர்
தாமும் அரசெனும் திருவினை நிலைபெற
அமையார் அடிக்கடி ஆடிவந் ததுவால்.
நிலவெனுந் திருவுடன் ஒன்றிய நிறைமதித்

திருவினைப் பிரித்தல் சால்வதொன் றோதான்?
உலகெலாம் உவப்ப ஒன்றாய்க் கூட்டிய
சந்திர குப்தரின் ஆட்சித் திருவினைத்
தனியே பிரிக்கச் சமைவோன் எவனோ?

மேலும்,

குஞ்சரக் குருதியைக் குடித்த கோளரி
வாய்தான் செக்கர் வானம் மான
இலகுறு எயிறுதான் இளம்பிறை சிவணக்
கொட்டா விகொளக் கொடுவாய் திறக்கும்
ஏல்வையில் எயிற்றினை எவனே ஆட்டிப்
பறித்தனன் எடுக்கத் துணிந்த வலியினன்?

**சந்தன** : (தனக்குள்)
இவனது முழக்கம் இரும்பயன் இயைந்தது!

(திரைக்குள் பேராரவாரம்)

**சாணக்** : சாரங் கரவ, சாற்றிஃ தென்னென?

**மாணாக்** : அங்ஙன மேயான் ................
(வெளிச்சென்று மீண்டும் புகுந்து)
........... அடிகாள், தேவர்
சந்திர குப்தர் சாற்றிய ஆணையால்
அரசற் கழிவினை ஆய்ந்த அமண
ஆண்டி அறிவிலிச் சீவ சித்தியின்
மானம் போக்கி மாநகர்ப் புறத்தே
வெருட்டி ஓட்டுவர் வேந்தரின் ஏவலர்.

**சாணக்** : அமண ஆண்டி அந்தோ அநுபவி,
இராசத் துரோகம் இழைத்ததின் பயனை!
சான்ற செல்வ, சந்தன தாச,
பொங்கொளி வேந்தன் பொறுக்கரு தண்டம்
இராசத் துரோகியர்க் கிங்ஙனம் இயற்றுவன்.
நண்பன் நயவுரை நயந்து கேளினி;
இராக்கதன் கடும்பினை இன்னே தந்திடு;
இறைவன் இன்னரும் என்றுந் துய்ப்பாய்.

**சந்தன** : இல்லையே என்மனை இராக்கதன் சுற்றம்.
(திரைக்குள் மீண்டும் பேராரவாரம்)

**சாணக்** : சாரங் கரவ சார்ந்தே அறிக.

**மாணாக்** : அங்ஙன மேயான் ..............
(வெளிச்சென்று மீண்டும் திரும்பிவந்து)

………………… ஆரிய அவனும்
அரசற் கழிவினை ஆய்ந்த கயவன்
சகடதா சனெனும் சால்பில் லானைக்
கழுவினில் ஏற்றக் கடுகுவோர் கம்பலை.

**சாணக்** : தன்வினைப் பயனைத் தானே துய்க்க.
இருநிதிச் செல்வ, இறப்பத் தீங்கினை
இழைக்கும் அவரை இறைவன் இங்ஙனம்
ஒறுத்தே வருவான். இராக்கதன் மனைவியை
மனைக்குளே வைத்து மறைக்குமுன் குற்றம்
பொறுப்பனோ வேந்தன்? பிறன்மனை ஈந்து,
நின்மனை நின்னுயிர் நின்றிட ஓம்புக.

**சந்தன** : ஆரிய அஃதென் அச்சங் காட்டினீர்?
இராக்கதன் சுற்றம் இல்லில் இருப்பினும்
ஈயவே மாட்டேன்; இல்லையே என்செய?

**சாணக்** : இஃதுன் முடிபோ? இயம்பிடு வணிக.

**சந்தன** : ஆமென் னைய, அஃதென் துணிபே.

(தனக்குள்)

**சாணக்** : சந்தன தாச, நன்றிது நன்றே.
பிறரைக் காட்டிப் பெரும்பொருள் பெறுதல்
உலகில் ஒருவற் கெளிதா யிருப்பச்
*சிபியினை யன்றி வேறெவன்*
செயற்கருஞ் செயலிதைச் செய்வனிக் காலையே.

(வெளிப்படையாய்)

சந்தன தாஸ சாற்றினை முடிபே?

**சந்தன** : ஐயமி லாமல்; அதுவென் முடிபாம்!

**சாணக்** : (சினத்துடன்)
கெடுமதி வணிக, கெட்டாய் இருஇரு.

இறைவன் சினத்தீக் கிலக்கா யொழிவை.

**சந்தன** : வருக வருக வயவலி ஆரிய,
தக்காங் கியற்றுக தண்டம்; ஏற்பன்.

**சாணக்** : சாரங் கரவ, சாற்றென் ஆணை
காலபா சிகற்கும் தண்டபா சிகற்கும்
''வணிகத் தீயனை வல்லே ஒறுக்கென;
இன்றேல் சிறிதிரு; இயம்புக கோட்டை
காவலன் *விசயபா லற்கே;* கடிதினில்

இவனையும் இவன்றன் மனையே மகனே
அருவிலைப் பொருளே அனைத்தையும் பறிமுதல்
செய்கென'' அதற்குள் தேவற் கிதனை
அறிவிப் பேன்யான். அவனே ஆருயிர்
அகற்றும் ஆணை அளித்திடு தகுதியன்.

**மாணாக்** : ஆசான் ஆணை. அரும்பெறல் வணிக,
இவ்வழி வருக இன்னே வருக.

**சந்தன** : ஐய வந்தனன் (தனக்குள்) ஆருயிர் நண்பற்
கென்னுயிர் ஈவேன் அன்றி எனைத்தும்
மாந்தர் இழைக்கும் மாநவைக் கல்லேன்
(மாணாக்கனோடு வெளிச்செல்லுகின்றான்)

**சாணக்** : (மகிழ்ச்சியுடன்)
ஆஆ இராக்கதன் அங்கைப் பட்டனன்!
எங்கன மெனினே இயம்புவன் இதன்பொருள்;
இன்னுயி ரீயும் நண்பரிவ் விருவருள்......
இராக்கதன் இயம்பரு இன்னலுள் மூழ்கவே
வணிகன் நல்லுயிர் வழங்க விரைந்தனன்;
வணிக நண்பன் வருந்தினன் எனினே,
இராக்கதற் கின்னுயிர் இயம்பரு சுமையாம்.

(திரைக்குள் பெருமுழக்கம்)

**சாணக்** : சாரங் கரவ, சாரங் கரவ.

**மாணாக்** : ஆசாற் குரிசில் ஆணையிட் டருள்க.

**சாணாக்** : என்னிது எங்கும் முழக்கம்? ...........

**மாணாக்** : (வெளிச்சென்று அறிந்து மீண்டு) ஆசான்,
சித்தார்த் தகனே சகட தாசனைக்
கொண்டோ டினனாம் கொலைகளத் திருந்தே.

**சாணக்** : (தனக்குள்)
சித்தார்த் தகனே, சாலவும் நன்றால்.
வினையின் தொடக்கம்; விழைந்தே செய்தனை!

(வெளிப்படையாய்)

வலிந்தோ டினனா வீணன் அவன்தான்?
பிள்ளாய், பாகுரா யணனிடைப் பேசுக
வல்லே இதனை வகைசெய வென்றே.

**மாணாக்** : (வெளிச்சென்று புகுந்து வருத்தத்துடன்)
அந்தோ ஆரிய, அருங்கே டிதுவே;
பாகுரா யணனும் பறிந்தே போயினன்!

**சாணக்** : (தனக்குள்)
வினைக்கண் வெல்ல வெளிச்செல் கவனும்.

(வெளிப்படையாய்ச் சினந்தவன்போல)

பத்திர படனே, புருஷ தத்தன்,
திங்க ராதன், திகழ்பல குப்தன்,
இராஜ சேனன், உரோகி தாக்கன்,
விசய வருமன் இவரிடம்-விரைவினிற்
பாகுரா யணனைப் பற்றுக என்றே,
பிள்ளாய், பேசுக என்றன் மொழியால்.

**மாணாக்** : அங்ஙனம் ஆற்றுவன்; ஆரியர் ஆணை.
(வெளிச்சென்று மீண்டு வந்து வருத்தத்துடன்)
*அந்தோ அரந்தை! அனைத்துங் குழப்பம்!*
*தந்திர மனைத்தும் திமில குமிலம்!*
புத்திர படனே முதலியோ ரனைவரும்
புலர்வதன் முன்னரே ஓடிப் போயினர்!

**சாணக்** : (தனக்குள்)
சென்றா ரனைவரும் சேர்க வெற்றியை.

(வெளிப்படையாய்)

வருந்தலை பிள்ளாய் வலிப்பன் காண்டி.
புந்தியில் ஒன்றனைக் கருதிச் சென்றவர்
அனைவரும் முன்னரே சென்றவர் ஆவார்.
இருப்போ ரெல்லாம் இவர்வழிச் செல்ல
முயலு மனத்தராய்ச் சமைக பெரிதும்.
ஈரைம் பதுவா யியைந்த படையிலும்
விழைந்த வெல்லாம் விரைவினில் முற்றி,
நந்தர் குலத்தையும் நாசஞ் செய்தவக்
கருதரு செயலைக் கண்ணிற் கண்ட
பெரிய என்புலம் பெயரா திருக்க.

(எழுந்து விசும்பினை நோக்கி)

கொணர்வல் கொடிய பத்திர படர்களை!

(தனக்குள்)

இராக்கதக் கொடியோய், எங்குச் செல்வை?
பேரா வலியும், பெருகிய தானமும்
மனம்போற் றனியே திரிதலும் உடைய
வனத்திடை வாழும் மதமா ஒன்றனைச்
சூழ்ந்தே சென்று சிக்கெனப் பற்றி,

விழைந்த பணிசெய விடுதல் மானத்,
தலைவரி லாதே தனியே திரிந்து,
வரையா வளம்பல வாரி வீசிப்,
பகைவர் சூழ்ச்சி பயனுறா வண்ணம்
செய்தலிற் செருக்குச் செறிந்த நின்னை-
அண்மையில் எனாது நுண்புல வலிகொடு
பற்றிப் பணிசெய விடுவன்
விருடல வேந்திடை; வேறிலை செயலே. 761

**முதல் அங்கம்**
**முத்திரைப் பேறு முற்றும்**



# இரண்டாம் அங்கம்

## இராக்கதன் சூழ்ச்சி

(பாம்பாட்டி வருகின்றான்)

**பாம்பாட்டி** : தந்திர உத்தியைத் தெரிஞ்ச வுங்க,
விதிப்படி மண்டலம் வரையற வுங்க,
மந்திரம் போத்தும் மனிச ருங்க,
பாம்பர சோடே பளவ லாங்க.

(வானத்தை நோக்கி)

அய்யா அதென்ன ஆர்ன்னா கேட்டிங்க?
நானு நல்ல பாம்பாட் டிங்க.
நம்ப பேரு சீர்ண விஷன்ங்க.
என்னது? என்னு பாம்பொடெ நீங்க
உள்ளா டோணுமா? நல்லாச் செய்ங்க.
என்னா வேலே எங்கய் யாக்கு?
அய்யா வேலை அரமணெ ஷேவ்கமா?
பாம்பொடு நல்லாப் பயவ றீங்கோ!
எப்படி யென்னு என்னைக் கேள்ங்க.
மந்திரம் பச்செலெ மாயம் அறியாப்
பாம்பாட் டீங்க, மதநீர் ஆனையை
அடக்க அங்குச மில்லா ஆனெயேறி,
ராசா கிட்டே சேவுகம் பண்ணி
அமுலு பண்ற கெடுபுடி மனிசன்
மூணுபேரும் முடிவா நல்லாச்
சாவு றாங்க சத்யமா சொல்றேன்.
என்னா! இருந்தவர் எங்கே போய்ட்டார்!

(மீண்டும் வானத்தை நோக்கி)

மூட்டக் கூடெலே போட்டது என்னவா?
என்னானு கேட்டா-எல்லாம் பாம்பு!
கஞ்சித் தண்ணி ஊத்தற கண்ணு!
பாம்பெப் பாக்கணு மின்னாப் பார்ங்க.
இங்கே ஆட்ட இடமில் லேங்க.
அய்யா அடியனெ மன்னிக் கணுங்க.

அப்படி அய்யா ஆட்டம் வோனுனா,
இதோயிவ் வூட்லெ ஆட்டிக் காட்றென்.

(வானை நோக்கி)

எங்க மந்திரி எசமான் ராச்சரு
வூடு; வரமுடி யாதா? முடியா
தின்னா நீங்க இருங்க; நானு
தொளிலெ வச்சு சோக்கா நொயவேன்.
என்னா இவுறு எங்கே போய்ட்டார்?

(தனக்குள் செவ்விய நடையில்)

என்னே வியப்பு! ஏர்மதிக் குடிலன்
வழிச்செலும் சந்திர மன்னனை நோக்குழி,
இராக்கதன் முயற்சிகள் என்பயன் உடைய
என்றொரு கருத்தே என்னுள் எழுமால்.
இராக்கதன் வழியே ஏகுங்' கேதுவைப்
பார்க்குங் காலைப் பார்த்திவன் சந்திர
னாட்சி அசைந்ததென் றெழுமோ ரெண்ணம்.
கவுடில் லியனார் *கலங்கா மதியெனும்*
கயிற்றாற் கட்டிய கனபுல மோரியன்
*அரசெனுஞ் செல்வி* அசையா தூன்றினன்.
எனவே எண்ணுவன்; எண்ணினும் அத்திரு
இயம்பரு இராக்கதன் எண்ணில் தந்திரக்
கரங்களாற் பறிபடு மென்னவுங் காண்பனே.
ஆகலின், அருமதி ஆரிய ரிருவரும்,
முழுவலி கொண்டே முரணி முயல்வரேல்,
நந்தரின் குலத்திரு நண்ணுவ தெவர்தமை
எனவகுத் திடுதல் எவர்க்கும் அய்யமாம்.
முற்றி முறுகிய முரணினர் முழுமதி
அறிஞர் இருவருள் அணிவரைச் சாரல்
*மதகரி யிரண்டிடை மாணுறு பிடியென*
அடலாற் பெரியர் ஆரெனத் தெரிகிலள்,
பேதுறு நெஞ்சினள், பெரிது மிளைத்தனள்,
அரசெனுந் திருவினாள், அலைமனப் பான்மையால்
துணிதற் கிலளாய்த் துன்புடன் நிற்பள்;
அதனால், அமைச்சரை அடுத்துக் காண்பனே.

(இங்குமங்கும் உலவி நிற்கின்றனன்.)

(அமைச்சன் இராக்கதன் வாடிய முகத்தனாய் ஏவலன் ஒருவனோடு
இருக்கையில் இருக்கின்றனன்)

**இராக்கதன்** : (கண்ணீர் வார்ந்து)
அந்தோ! அச்சோ! ஆ ஆ! கொடுமை!
நிலவிய பண்பே நீதியே வீரமே
என்றிவை ஏவுதல் ஏதுவாப் பகைதபு
நந்தர் மரபு நயனில் விதியால்
விளங்கிய புகழ்மலி *விருஷ்ணி குலமென*
அழிவினை அடைய, அஃகாக் கவலுறு
மனத்துக் கிளர்ச்சியான் மறுகிக் குழம்பி,
அல்லும் பகலும் அருவிழிப் புடனே
இருக்குமென் நிலைதான் எழுதச் சுவரினை
*இல்லா ஓவியன் நிலை*யினை மானுமே!

அன்றியும்,

பிறர்பணி செய்தலைப் பெட்புடன் ஏற்றிலான்,
அஃகா முயற்சியான், அரச நீதியை
ஏவுதற் கண்ணே என்மனம் இயைதலான்,
தலைவற் பத்தியைத் தணந்தே னல்லேன்;
இம்மை இன்பம் எனைத்தும் விழைந்திலேன்;
உயிரிழப் பினுக்கே உட்கினே னல்லேன்;
துறக்கம் புக்க தோமில் தலைவனை-
அவன்றன் பகைவரை அடைவே கோறலால்
சேவை செய்யலா மென்றொரு கருத்தால்.

(விசும்பினை நோக்கிக் கண்ணீர் பெருக்கி)

பங்கயச் செல்வீ! பார்த்திலை தகுதி!
இன்ப வூற்றினன் இன்புகழ் நந்தரை
வெறுத்து விழைந்தனை மோரிய மகனை,
நிலையிலா நெஞ்சினை! நன்மண யானை
நாசமு றுங்கால் நனிமதப் பெருக்கும்
மாய்ந்தென மாய்ந்திலை மறுக்கமுற் றவ்விடை.
இறப்ப இழிந்தோய், இன்னும் கூறுவல்:
உயர்குலம் வந்த உறுபுகழ் வேந்தர்
அனைவரும் அவனியில் அங்கி புக்கனர்.
இழிகுலம் வந்த ஏதில் மோரியன்
உன்துணை யாயினன்! ஒவ்வாச் செயலிது.
*காச மலரின் கடிமுனை யென்ன*
நிலைபே றில்லா நங்கைய ருள்ளம்
மாந்தர் மாண்பினை மதித்தறி செயலைக்
கருதா வியல்பது காணுங் காலே.
கற்பில் காரிகை, பொற்பார் நின்இலம்
அழித்துப் போக்கி, அமைந்தநின் கருத்து
முற்றா வண்ணம் முடித்தே மகிழ்வல்.

(ஆராய்ந்து)

நகரினை விட்டு நீங்கிய காலை
திருந்திய நண்பன் சந்தன தாஸன்
இல்லுளே மனைவியை இனிதின் வைத்தது
நனிமிக நாடிச் செய்தநற் செயலே.
வேந்தன் பாலுள விள்ளா அன்பால்
நகரி லிருந்தே நற்பணி புரிகுநர்
எமரெலாம், இராக்கதன் எழில்மிகு பாடலி
புரத்தினை முற்று முயற்சியை விட்டனன்
எனவே எண்ணார் எழுச்சி மிகுவர்.
வேந்தன் உயிரை விடத்தாற் போக்கவும்,
நம்பணி புரிகுநர் நடலையே யின்றி
வேண்டுங் காலை விழுப்பொருள் பெற்றே
மகிழ்ந்த வுளத்தினர் மாண்செயல் முற்றவும்,
அளப்பில் அருநிதி அள்ளி யளிக்கச்
சகட தாஸன் சமைந்தனன்; அன்றியும்,
பகைவர் புரிசெயல் பதிவிருந் தறிந்தே
ஒவ்வொரு கணமும் ஒழியா தறியவும்,
கருதலர் குழாத்துட் கலகம் விளைக்கவும்,
சீவ சித்தி முதலாம் நண்பர்
நியமனம் பெற்றே நின்றனர் பணிக்கண்,
இதன்மேல் இன்னும் என்செய? என்சொல?
தலைவன் நந்தன் சிறுவன் மீதுள
புகலரும் அன்பால் புலிக்குட் டியினைப்
போற்றுவ தென்னப் போற்றிப் பேணிப்
பொன்றினன் புகழ்மிகு குலத்துடன்; அத்தகு
மைந்தன் மார்பினில் மாணக் கூரிய
*புலவா ளிகளைப்* போக்கிப் போக்கிப்
*பொள்ளெனப்* பிளப்பல், பொல்லா வூழ்தான்
போற்றுங் கவசமாய்ப் புகுதா விடத்தே.

(பின்னர்க் கஞ்சுகி வருகின்றான்)

**கஞ்சுகி** : (தனக்குள்)
சாணக் கியனின் சான்ற நயத்தால்
எங்ஙனம் இறந்தனர் நந்தர், அங்ஙனம்
முதுமையாற் காமம் மாய்ந்த தென்னிடை.
சந்திர குப்தனைத் தலைநகர்ப் பாடலம்
நிறுவிய தென்ன நல்லறம் நாளும்
நந்தி நின்றது நலமில் என்னுழை.
ஏவல் செய்ய இயைந்த எனக்கு
இராக்கதன் மான எழுந்த ஆசை
அறத்தினை வெல்ல முயலினும் அரிதே.

(சிறிது முன்சென்று)

இராக்கதன் இல்லிது; இதனுட் புகுவென்.

(புகுந்து அமைச்சனை நோக்கி)

வாழிய வாழிய வழிவழி சிறந்தே.

**இராக்கதன்** : வணங்கினன் ஐய, வருக வருக.
இருக்கை இடுக, பிரியம் வதக.

**பிரியம்வதகன் :** ஈதோ இருக்கை, இருத்திர் ஐயா.

**கஞ்சுகி** : (இருந்து)
மன்னிளங் குமரன் மலய கேது
நுந்தம் அடிகளில் வணங்கி மொழிவன்.
நாட்பல வாக நல்லணி பூணா
திருத்தலை நோக்கியென் இதயம் வருந்தும்.
நந்தர் குணங்கள் மறத்தற் கியலா
வெனினும் என்னுடை மொழிகளை ஏற்றல்
வேண்டும் விழுமிய வினைவலோய் பெரிதே.'
அரச குமரன் அணிந்தவிப் பணிகளை
அமைச்சர் அன்புடன் அணிதல் வேண்டும்.

**இராக்கதன்** : ஆரிய ஜாஜலி, அரச குமரற்கு
'உம்முடைப் பண்புகள் உலந்த வேந்தரின்
பண்பினை மறக்கச் செய்தன எனினும்,
என்னுடை மொழிகளை இயம்புக இனிதே.
பகைவர் இழைத்த பரிபவத் தாலே
என்னுடை உறுப்பெலாம் எனைத்தும் வலியில;
எண்மைய பெரிதும். எனக்கேன் ஒப்பனை?
ஆகலின் அவற்றினை அணியேன் வறிதும்.
அரசிளங் குமர, அடங்கலர் தம்மை
அறவே அழித்தே ஒழித்தனை யாயின்
'சுகாங்கம்' என்னும் சுந்தரக் கோயிலுள்
பொன்னி னியன்ற பொங்கரி யணையைப்
போகவி டாது போற்றுவை யாயின்
அணிகளை அணிதலும் அடுக்கு மொருகால்!'

**கஞ்சுகி** : அமைச்சர் இயக்க, அரச குமரற்கு
இவைதாம் எளிதின் இயலும் ஆகலின்
முன்னர்க் குமரன் வேண்டலை மதிக்க.

**இராக்கதன்** : அரச குமரன் ஆணை போன்றே
நுந்தம் ஆணையும் மறுத்தற் கரிதால்;

ஆகலின் குமரன் ஆணையை ஏற்பேன்.

(அமைச்சரை அணிகளால் அணிவித்து)

**கஞ்சுகி** : வாழிய அமைச்ச, வழிக்கொண் டேன்யான்.

**இராக்கதன்** : வணக்கம் ஆரிய, (கஞ்சுகி போகின்றான்)
- பிரியம் வதக,
என்னைக் காண யாவன் வாய்தலில்
நிற்போன்? வல்லே நோக்கி வருக.

**பிரியம்வதகன் :** அமைச்சர் ஆணை. (வெளிச் சென்று பாம்பாட்டியைக் கண்டு)
ஐயா நீர்யார்?

**பாம்பாட்டி** : நானொரு நாகப் பாம்பாட் டீங்க.
சிறியேன் பேரு சீர்ண விஷன்ங்க.
மந்திரி எசமான் முன்னே நானு
இந்தப் பாம்பெ *இஸ்த்து* ஆட்டி
உள்ளாட் ணுங்க; உத்தர வாவணும்.

**பிரியம்வதகன் :** இருஇரு அமைச்சர்க் கிதுதெரி விப்பேன்.

(அமைச்சனை அண்மி)

அமைச்ச, அவனொரு பாம்பாட் டியாவன்.
பாம்பினைக் காட்டப் பெரிதும் விரும்பும்.

**இராக்கதன்** : (இடக்கண் துடிக்கப்பெற்றுத் தனக்குள்)
முதன்முதல் பாம்பின் முகத்தில் விழித்தலென்?

(வெளிப்படையாய்)

இன்சொலாய், இன்றெனக் கிதனிடை ஊக்கம்
இலையெனச் சொல்லி, இன்பொரு ளீந்து
போகவி டவனை; போக்கி நோக்குதும்.

**பிரியம்வதகன் :** ஆணையின் நிற்பல், அமைச்சர் பெரும.

(வெளிப் போந்து)

ஐயா, அமைச்சர் பெருந்தகை அரவினைப்
பார்த்தா லென்னப் பரிசில் ஈந்தனர்;
பாம்பினைப் பாரார். பெற்றுப் போதி.

**பாம்பாட்டி** : பாம்பாட் டின்னா பாத்திகிட் டாக!
பாகத மொளீலே பழுத்த கவீங்க.
அண்ணே, அவுரு அடியனைப் பாகக

இஷ்டம் இல்லெனா இத்தெ மாத்திரம்
படிச்சாப் போதும்; பாருங்க சொல்லி.

**பிரியம்வதகன் :** ஆரிய அவன்தான் அமைச்சர் திருமுன்,
''வல்விடப் பாம்பொடு வாழ்க்கை யெனினும்
பாகதக் கவிநான் : பார்த்தலென்? இதனைப்
படித்தாற் போதும்'' எனவே வேண்டுவன்.

**இராக்கதன் :** (ஏட்டினை வாங்கிப் படிக்கின்றான்.)
வண்டு போயி மிச்சமி லாமே
பாதிரி ரஸத்தைப் பாங்காக் குடிச்சு,
மொள்ளமா வெளீலே விட்டிச் சின்னா,
அசல் மனுஷாள் வேலேனு அர்த்தம்.

(ஆய்ந்து தனக்குள்)

அம்ம! அவனே அணிகெழு ''பாடலிப்
பதிநிகழ் செய்திகள் பலவும் உணர்ந்தே
உரைக்க வந்த உறுமதி ஒற்றன்''
என்பதே ஏட்டினால் எழுந்த பொருளாம்.
பலரால் ஒற்றர்; பணியும் பலவால்.
மறந்தனென் பெரிதும்; மதிமலி ஒற்றனை
இப்பொழு தறிந்தனென்; இவனே உருவம்
மாறிய *விராத குப்தன்* வந்தனன்
பாம்பாட் டியென; பகர்ந்தனன் செய்திகள்.

(வெளிப்படையாய்)

இன்சொலாய், அவனை இங்கே வரச்சொல்.
கவிதான் அவனே : கனிமொழி கேட்போம்.

**பிரியம்வதகன் :** அங்ஙனம் செய்வல், அமைச்சர் பெரும.

(வெளிப்போந்து பாம்பாட்டியிடம்)

வருக ஐயா, வருக உள்ளே.

**பாம்பாட்டி :** (முன்வந்து அமைச்சனை நோக்கிச் செவ்விய நடையில் தனக்குள்)
ஈதோ அமைச்சர் இராக்கதர். இவர்தம்
ஆள்வினை அய்யுறு திருவினாள் தனாது
இடப்பாற் கொடிக்கரம் இந்து மோரியன்
கழுத்தினில் நெகிழ்வுடன் வைத்தும், மதிமுகம்
வறிதே கோட்டியும், வலப்பாற் கையினை
அவன்றன் எழுவுறழ் திணிதோள் அழுத்தியே
வைத்தும், வைத்ததை வழீஇ மடிமிசை

வீழ்தர விட்டும், மோரியன் மார்பகம்
ஞெமுங்கப் புல்லும் நெஞ்சின ளேனும்,
வலத்தெழு நகிலை வயநிறத்
தின்னமும் இன்புடன் இயைத்திலள் நன்றே.

(வெளிப்படையாய்)

வாழிய அமைச்ச, வெல்க வெல்க!

**இராக்கதன்** : (பார்த்து)
ஏஇவன் விராத-(பாதி சொல்லும் போதே)
எத்தனை தாடி!
பிரியம் வதக, பாம்பினைப் பார்க்க
விழைந்தனென் ஆகலின், மற்றவர் தம்மொடு
நீங்கிச் சென்றீ; நீயுன் பணிநில்.

**பிரியம்வதகன்** : அங்ஙனம் செல்வல், அமைச்சர் பெரும,

(உழையருடன் வெளிச் செல்கின்றான்)

**இராக்கதன்** : இன்பார் விராத, இருக்கையில் இருத்தி.

(விராதகுப்தன் இருக்க, அவனை உற்றுப் பார்த்து)

அந்தோ! அரசர் அடித்தொண் டாற் றுநர்
அடைந்த நிலைதான் என்னே! அய்யா.

(அழுகின்றான்)

**விராதகுப்தன்** : அமைச்சர் பெரும், அழலிர்; அழுதால்
ஆவதொன் றிலையே, அண்மையில் நீவிர்
பண்டை நிலையைப் பெற்றே அளிப்பீர்.

**இராக்கதன்** : நண்ப, பாடல நகரின் நிலையினை ...
நிகழ்ந்த நிகழ்ச்சியை நவிலுக நன்றே.

**விராதகுப்தன்** : அமைச்ச, அவைதாம் அளவில; பெரிய.
எதுமுதல் தொடங்கி இயம்புதல் வேண்டும்?

**இராக்கதன்** : அன்ப, சந்திர குப்தன் அணிநகர்
புகுந்த காலைப் புன்விட மீய
விடுத்த நம்மனோர் வினையை முதற்கண்
அறிய ஆவல். அதனைக் கூறுக.

**விராதகுப்தன்** : இவ்விட மிருந்தே இனிதாய்த் தொடங்குவல்:
பார சீகரும் பாகுலி கர்களும்
சகரும் யவனரும் சார்காம் போசரும்
கிராதரும் பிறரும் கிளர்ந்தெழு மதியினன்

சாணக் கியன்வழி நின்றன ராகிப்
பர்வத வேந்தன் பான்மதி மன்னன்
படையினர் என்னும் பகுப்பின ராகி
ஊழிக் கடலென ஒல்லென உரறி
பாடலிப் பதியின் மாடெலாம் வளைத்தனர்.

**இராக்கதன்** : (விரைவினில் உடைவாளை உருவி)
ஏஎ! யானிங் கென்னுயிர் தாங்கி
இருக்கு மேல்வையில் யாவன் பாடலி
புரத்தினை வளைக்கப் புகுந்த புன்மையன்!
பிரவீ ரகனே, பிரவீ ரகனே,
விரைவினில் இன்னே வீயா வன்மையர்
விளங்கரண் முற்றுக, துளங்கலி லாதே.
மதநீர்ப் பெருக்குடை மாகரிக் குலங்கள்
பகைவர் களிற்றுப் பந்தியைத் தாக்க,
வாய்தலில் நிறுத்துக வல்லே வீரரை.
என்மனம் ஒன்றிய எண்ணில் படைஞர்,
புகழினை விழைந்தோர், பொன்றலை அஞ்சார்,
வலியார் பகைவன் வலத்தினை விழுங்குநர்,
வருக வருக வல்லையில் என்னொடும்.

**விராதகுப்தன் :** அமைச்ச, அலமரல். நடந்த செய்தியை
நவின்றேன் ............

**இராக்கதன்** : ............ நடந்த செய்தியா! கொடிது!
இன்றென் றெண்ணினேன்; இலையது.

(வாளினை உறைசெறித்து) ........... ஆ ஆ

அய்யா நந்த, அந்நாள் என்றனக்
கருளிய நன்றியைக் கருதுவன் நாளும்.
போர்நிக ழுங்காற் பொருந்திய நீதான்
கருமுகில் அனைய கரிக்குலம் உலவினே
இராக்கதன் செல்க, இயம்பரு பாய்மா
கடலலை யென்னக் கடுப்புடன் வருங்கால்
இராக்கதன் செல்க, எண்ணில் காலாட்
படையினர்ப் படுக்கப் பல்கலை இராக்கதன்
செலகெனச் செப்புவை சேரலா வெல்ல,
ஆயிரம் இராக்கதர் அணிநகர் இருந்தனர்
என்றெணிப் போலும் என்னை மதித்தனை!...
அதன்மேல் அதன் பினர் நிகழ்ந்தன அறைதி.

**விராதகுப்தன் :** அதன்மேல் அப்பதி அடங்கலர் படையால்
முற்றப் பெற்றே உற்றது துன்பம்.

சார்வ பௌமர் சருவார்த்த சித்தி
அந்நிலை தனிலும் அருள்மிக் கவராய்,
நகரினர் பலநாள் நண்ணிய வரம்பில்
துன்பத் தினுக்காத் துணுக்கம் எய்திச்,
சுருங்கையின் வழியே தவவனஞ் சார்ந்தார்.
வேந்தனைப் பிரிந்த வீரர் தாமும்
மறுகிக் குழம்பி, முயற்சி விட்டனர்.
நகர்க்கண் இருந்த நுந்தம் மாந்தர்
சந்திர குப்தனைச் சார்ந்த வெற்றி
முழக்கத் தினுக்கே முழுத்தடை புரியத்
துணிசெயல் ஆற்றும் பணிக்கண் நின்றனர்.
இழந்த அரசினை இயம்பரு முயற்சியால்
மீளக் கொணர்வான் நீளச் சுருங்கையிற்
புக்குச் சென்றனிர் புறத்தே; சந்திர
வேந்தனைக் கோறல் வேண்டி நீவிர்
போக்கிய பொல்லா *நச்சுக் குமரி*
ஏழைப் பர்வத ஏந்தலைப் படுத்தனள்.

**இராக்கதன்** : விழைவுறு நண்ப, வியப்பிது காண்டி!
அந்நாட் கன்னன் அருச்சுனற் கொல்ல
அரிதினிற் போற்றிய ஆடற் சத்தி
கண்ணன் அருளாற் கடோற்கசக் காளையின்
ஆருயிர் பருகிய அச்செயல் மான,
சந்திர குப்தனைச் சாடுங் கருத்தால்
ஒருவரை யேகொலும் பெருமை சான்ற
நச்சுக் குமரியை நசையுடன் ஏவ,
விஷ்ணு குப்தன் விழுப்பே றடையப்
பர்வத வேந்தன் பட்டனன் பாவம்!

**விராதகுப்தன்** : விழுமதி அமைச்ச, *விதியே வலிதே!*
நாடிச் செயினும் நம்மால் என்னுறும்?

**இராக்கதன்** : அதன்மேல் விளைவினை அறைதி தொடுத்தே.

**விராதகுப்தன்** : எந்தை துஞ்சினன் என்னுயிர் போற்றுவென்
என்றே அஞ்சி எங்கோ ஒடினன்
மன்னிளங் குமரன் *மலய* கேதுவும்.
துறக்கம் புக்க தொல்வேந் தனது
இளவல் *வைரோ சக*னும் இன்மதிச்
சாணக் கியனைச் சார்ந்தனன் ஆக,
அவனும் தம்பிக் கன்பினன் ஆயினன்.
'நந்தர் கோயிலை நண்ணுவன் சந்திரன்'
எனவே நகரினர் இயம்பவும் பெற்றனர்.
சாணக் கியன் தான் தச்சரை யெல்லாம்

வம்மென அழைத்தே ''வருக நண்பீர்
நடுநிசிப் போழ்தினில் நம்பெரு வேந்தர்
நந்தர் கோயிலுட் புகுதல் நன்றென
இயம்பினர் கணிகள் எம்மிடை இன்றே;
ஆகலின் நீயிர் அனைவரும் கூடிக்
குணதிசை வாயில் தொட்டுக் கோயிலைக்
கண்ணுக் கினிதாய்ப் பண்ணுறுத் துமினெனச்''
செவியி லேற்ற செய்தொழிற் றச்சர்
முழுமதி ஆரிய, முன்னரே யாமெலாம்
வென்றி வேந்தர் பொன்றிய நந்தரின்
கோயிற் புகுவர் என்னக் கேட்டுளேம்
ஆகலின், அடியேம் அருவினைத் தலைவர்
தாரு வன்மர் தணிப்பரு தோரண
வாயிலில், வில்லிடு பொன்னின் வளைவும்
பிறவும் நன்கு பிறங்கிடச் செய்தனர்;
அகக்கோ யிலிலே அடியேம் ஆற்ற
அருவினை பலவுள; அவற்றினை முடிப்பேம்
என்றனர் அங்குள எழில்வினை யாளர்.
ஆணை யின்றியே அருவினை யாற்றிய
தாரு வன்மனின் தச்சுத் தொழிலை
நச்சியோன் போல மெச்சிப் பேசிய
சாணக் கியனும் ''சாருவை அண்மையில்
இவ்வினைப் பரிசிலை'' எனஇயம் பினனே.

**இராக்கதன்** : (குழப்பத்துடன்)
சாணக் கியற்கா சார்தரும் மகிழ்ச்சி?
வீண்செய லாதலோ, விழைதற் கில்லாப்
பயனைப் பயப்ப தாதலோ திண்ணம்.
*தச்சர் தலைவன் தாரு வன்மன்*
மயக்கத் தாலோ மன்னன் மீதுள
அன்பி னாலோ ஆற்றினன் இவ்வினை.
ஆணை யின்றியே அருவினை யாற்ற
ஆரிவ னென்ன ஆன்ற வடுவின்
மனத்தே மாறா அய்யம் ஒன்றனை
அரும்பச் செய்தனன்; அளியன் தச்சன்!
பின்னர் விளைவினைப் பேசுக பெரிதும்.

**விராதகுப்தன் :** நடுநிசி தனிலொரு நல்லோ ரையிலே
வஞ்சினை வடுவால் வல்வினைச் சிற்பியர்
நகரினர் இடையே நந்தர் கோயிலுள்
சந்திர குப்தன் இந்திர னென்னப்
புகுதரு வன்னெனப் பொருள்பொதி கட்டுரை
புகன்றவக் கணமே பொருவில் பர்வத

*மன்னவன் இளவல் வயிரோ சகனை*
சிங்கஞ் சுமந்த சீர்சால் அணைமிசை
சந்திர வேந்தொடு சார இருத்தி
அரசிற் பாதியை அவற்கே அளித்தனன்.

**இராக்கதன்** : பருவத மன்னவன் உருகெழு இளவல்
வைரோ சகற்கே வயவலி ஆரியன்
முன்னாள் மொழிந்த மொழியின் வண்ணம்
அரசிற் பாதியை அளித்தேன் எனவே
கூறினன் அலனோ? ...........

**விராதகுப்தன்** : .......... கூறினன் அமைச்ச.

**இராக்கதன்** : (தனக்குள்)
பருவதே சுரனைப் பிறரறி யாமல்
படுகொலை செய்த பொல்லாக் குடிலன்
அக்கொலை யாலெழு அழியாப் பழியினை
அழித்தற் கென்றே அளித்தனன்
அரசிற் பாதியை அவனிள வற்கே.

(வெளிப்படையாய்)

அதன்பினர் நிகழ்ந்தன அறைதி நண்ப.

**விராதகுப்தன்** : சந்திர வேந்தன் நந்தர் கோயிலுள்
நடுநிசி புகுஞ்செயல் நகரினர் அறியப்
பறையறைந் தனரால். பர்வதன் இளவல்
வயிரோ சகற்கும் வகுத்தனர் முடிவிழாச்
சடங்கினை. தாங்கரு மகிழ்வால் தம்பி
குறுக்கினும் நெடுக்கினும் குறித்துத் தொடுத்த
முத்துவ டங்களை முழுநிலா விரிக்கும்
சித்திரத் துணிமிசைச் சேர்த்தி, அதனை
கவயம் மானக் காயம் போர்த்துப்
பன்மணி குயிற்றிய பகற்செய் முடியினைச்
சென்னியிற் செறித்துச் சேயெனத் திகழ,
நறுந்தேன் பிலிற்று நாண்மலர்த் தொடையல்
அகலார் மார்பினி லசைந்தே ஆடிக்
கம்மெனக் கமழ்தரு கடிமணம் நாற,
அடுத்துப் பழகிய அருநட் பாளரும்
'ஆரிவன்' எனவே அறியார் ஆக,
சாணக் கியனார் சாற்றிய ஆணையால்
ஏந்தல் சந்திரன் எழின்மிகு வன்பிடிச்
சந்திர லேகையின் மீதே றிவர,
மன்னன் வழிப்படு மன்னிளங் குமரரும்

சூழ்ந்தே போதரச், சொல்லிய நந்தரின்
வனப்புடைக் கோயிலுள் வயிரோ சகனும்
புகுதர, நீவிர் பொருத்திய தச்சன்
தாரு வன்மனும் தப்பிய மதியால்
வந்த இளவல் வயிரோ சகனைச்
சந்திர குப்தன் சார்ந்தனன் என்றெணி,
எந்திரச் தோரணப் பொறியினை இயக்கி
வீழ்த்த இருந்தனன் விழிப்புடன் ஆயிடை.
அவனை அடுத்தே அத்தலை வந்தோர்
அந்நிலை கண்டனர் அவரவர் ஊர்தியின்
இருந்தனர் நின்றனர் இயங்கலர் வறிதும்
சந்திர குப்தனைச் சாடுங் கருத்தால்
நும்மிடை அந்நாள் நுவலற் கரிய
ஆணை யொன்றனை அன்புட னேற்ற
வருவாப் பாகன் வயங்கொளிப் பொன்னின்
தொடரிற் றொங்கிய சாம்பூ நதப்பொன்
தண்டிகை யொன்றனைத் தன்கையாற் பற்றி
அதனுட் கரந்துறை அரிவா ளொன்றனைக்
கைதனில் எடுக்கக் கருதினன் பெரிதும்.

**இராக்கதன்** : இருவருந் தவறினர் இறப்பவிம் முயற்சியின்.

**விராதகுப்தன் :** *சந்திர லேகையும்* சாற்றரு தன்னுடல்
புடைபடு மென்றெணிப் *பொள்ளென* நடக்க,
மதமில் பிடியின் மாணடை பொறுத்து
முன்னர் ஆக்கிய முழுப்பொறித் தோரணம்
குறியினிற் பிழைத்துக் குலைந்தே வீழப்,
பொன்தண் டத்தினிற் பொதிந்து கிடந்த
வாளொடு பயிலும் *வருவர கன்தான்*
மோரிய மன்னவன் எனவே மயங்கிய
வயிரோ சகனை அடையா முன்னர்
பொறித்தோ ரணத்தாற் பொன்னுல கடைந்தனன்.
பொறித்தோ ரணத்தைப் பொள்ளென வீழ்த்தலால்,
தன்னுயிர்க் கிறுதி துன்னுமென் றுணர்ந்து
தோரண மிசைவதி *தாரு வன்மனும்*
பொறியினை இயக்கும் பொல்லாக் கரும்பொன்
முளையினை எடுத்தே மொத்தெனப் புடைக்க,
சந்திர லேகைச் சுந்தரப் பிடிமிசை
இருந்த வாறே *இன்னுயிர் விட்டனன்*
*ஏழை இளவல் வயிரோ சகனும்.*

**இராக்** : அந்தோ, அவ்விரு செயல்களை அணுவும்
விழைந்திலன்; நிகழ்ந்தன. நிகழ்க. இன்னும்.

சந்திர குப்தன் சாகிலன் இருந்தனன்.
இறந்தனர் இவரெலாம் இன்னா விதியால்.
தச்சர் தலைவன் தாரு வன்மன்
என்னா யினனென இயம்புதி விரைவில்.

**விராதகுப்தன் :** வயிரோ சகன்முன் வரிசையிற் சென்ற
காலாட் படைஞர் *கல்லெறிந் தவனைக்*
*கொன்றனர்*. கரைந்தே பொன்றினன் அவனும்,

**இராக்கதன் :** (கண்ணீர் சொரிந்து)
அந்தோ துன்பம்! அன்பார் நண்பன்
தாரு வன்மனைத் தணந்தனம்; மருத்துவன்
அபய தத்தன் ஆங்கென் செய்தனன்?

**விராதகுப்தன் :** எல்லாச் செயலையும் எண்ணிச் செய்தனன்.

**இராக்கதன் :** (மகிழ்ச்சியுடன்)
தீயன் சந்திர குப்தன் தீர்ந்தனன்?

**விராதகுப்தன் :** அமைச்ச அவனை ஆகூழ் அளித்தது!

**இராக்கதன் :** (மிக வருந்தி)
எல்லாஞ் செய்தனன் என்றே கூறினை!

**விராதகுப்தன் :** அமைச்ச, அபய தத்தன் ஆயிடை
அரசற் களித்தனன் *அருவிடச் சுண்ணம்.*
சாணக் கியனதைச் சட்டென வாங்கிப்
*பொன்னின் இயன்ற பொங்கொளித் தட்டினில்*
இடவே இம்மென மற்றதன் வண்ணம்
வேறுபட் டதுவால்; வேந்தனை விளித்து
விருடல, 'விடப்பொடி யிதுவால்;
உண்ணா தேகொள்' எனவே உரைத்தனன்.

**இராக்கதன் :** விரகினன் வடுவே; வைத்தியன் கதியென்?

**விராதகுப்தன் :** *அதனையே அவனுக் கூட்ட இறந்தனன்!*

**இராக்கதன் :** (வருந்தி)
அந்தோ *அறிவின் தொகுதி அழிந்தது!*
அரசன் பள்ளி அறையினிற் புக்க
*பிரமோ* தகனின் செய்தி யாது?

**விராதகுப்தன் :** முன்னவர் நெறிதான்!...........

**இராக்கதன் :** (குழப்பத்துடன்)
........... எங்ஙனம் அந்நெறி?

**விராதகுப்தன் :** அமைச்ச, கயவன் அவன்தான் அந்நாள்
நீவிர் அளித்த நிறை பொருள் தாங்கிப்
பெரும்பொருட் செலவிற் போகந் துய்த்தனன்.
''எங்குப் பெற்றனை இத்தனை பொருளை''?
என்றார்க் கிவன்றான் ஒன்றா விடைகளைச்
சாற்றிய காலையில் சாணக் கியன்தான்
சித்திர வதையாற் சிதைத்தனன் இவனை.

**இராக்கதன் :** (கலக்கத்துடன்)
நம்மை விதிதான் நையப் புடைத்த
தங்கும். அமளியில் உறங்கும் அரசனை
அடித்துக் கொல்ல அரண்மனை யகத்துள
சுவரின் சுருங்கையுள் முன்னரே போகி
மறைந்து வதிந்த வயவலி இளையர்
*வீவச் சகன்முத* லோர்தம் விளைவென்?

**விராதகுப்தன் :** அதுதான் அமைச்ச, அறவுங் கொடிதே.

**இராக்கதன் :** (பரபரப்புடன்)
எங்ஙனம் கொடிது! என்னா யினரவர்?
வதிந்த இடத்தினை வல்வினை ஆரியன்
அறிந்தனன் கொல்லோ ............

**விராதகுப்தன் :** ............ அறிந்தனன் : அமைச்ச,
அரசர் அரண்மனை அகத்துப் புகுமுனர்
சாணக் கியர்தாம் சார்ந்தார் அவ்வறை.
ஆய்ந்தனர் பெரிதும் அங்குள இடனெலாம்.
அங்கொரு சுவரடி அமைந்த துளைவழி
*சோற்றுப் பருக்கையை ஏற்ற வாயின*
*எறும்பின் ஒழுக்கு வெளிவரக் கண்டே*
'ஆட்களை அகத்துக் கொண்டதிம் மனை'யென
உய்த்தே அறிந்தனர் உருவார் இல்லினைப்
பொசுக்கிப் போட்டனர். பொங்கிய புகையால்
கண்ணொளி மங்கி வெளிவரு வழியினை
அறியா வீவச் சகனா தியரெலாம்
அங்கிக் கிரையாய் அவணீ றாயினர்.

**இராக்கதன் :** (கண்ணீர் பெருக்கி)
நனிமிகக் கொடிது! நண்ப கொடிது!
தீய வேந்தன் சந்திர குத்தன்
பெற்ற பெறலரும் பேற்றினைக் காண்டி.
அவன்றன் ஆருயிர் பருக மறைவாய்
அனுப்பிய *அருவிடக் கன்னி* அந்தோ
அரைசிற் பாதியை அடைய விருந்த

*பர்வத வேந்தனைப்* படுத்தனள் பாவம்!
நஞ்சாற் பொறியால் நண்ணிக் கொல்லப்
போக்கியோர் *அனைவரும் பொன்றினர்* அவற்றால்!
என்பல விரகெலாம் எண்ணில் பயன்களை
சந்திரற் கென்றே தந்தன காண்டி.

**விராதகுப்தன் :** எனினும் அமைச்ச; எடுத்த வினையினை
விட்டிடல் வேண்டா வறிதும்-காண்டிர்:
கடையர் தொடங்கார் இடையூ றஞ்சி.
இடையர் ஒழிவர் இடையூ றிடைவரின்.
தலைநிலச் சான்றோர் சாற்றரும் இன்னல்
அடுக்கியே வந்தன அடிக்கடி தாக்கினும்
எடுத்த செயலை எனைத்தும் கைவிடார்....
கடைபோ களவிற் கருதி முடிப்பர்.
இன்னுங் காண்டிர்,
தரையினைச் சேடன் தள்ளிலன் என்னின்
பொறுத்தற் றுன்பிலன் எனல்பொருந் தாதே.
*அசைவே யிலனா லப்பரி தியெனின்*
இளைப்பிலன் உடலில் எனலா காதே.
ஆகலின், ஆன்றோர் ஆற்றற் கமைந்த
வினையினை விடுத்து வீணனைப் போன்றே
வெட்குவ ரோதாம்? எடுத்த வினையினை
விழைந்து பொறுத்தலே விழுமியோர் குலவறன்.

**இராக்கதன் :** எடுத்த வினையினை விடுத்தல் இலையெனல்
கண்கூ டாகக் காண்கின் றனையே
நண்ப, அடுத்தவண் நடந்த தியாது?

**விராதகுப்தன் :** அந்நாள் தொட்டே அச்சா ணக்கியன்
அரசன் உடலினை ஆயிரம் மடங்காய்க்
காத்தலிற் கண்ணுங் கருத்தும் உடையனாய்
நகர்க்கண் வதிதரு நண்பர் நுமரைத்
தேடித் தீயர் இவரால் இத்தனை
இன்னல் என்றே இவர்தமை ஒறுத்தனன்.

**இராக்கதன் :** (கவற்சியுடன்)
எவரெவர் ஒறுக்கப் பெற்றனர் இயம்புக.

**விராதகுப்தன் :** அமணச் சீவ சித்தியே அவருள்
முதல்வன்; அவனை மானம் போக்கி
நகரின் புறத்தே நனிவெருட் டினரால்

**இராக்கதன் :** (தனக்குள்)
பொறுக்குந் தகைத்திது. பற்றே யில்லான்

இடனிழ வாலே இம்மியும் வருந்தான்

(வெளிப்படையாய்)

நண்ப குற்றம் யாதென நவின்றே
புற நகர்ப் போக்கினர்?

**விராதகுப்தன் :** ............ ''இராக்கதன் ஏவிய
பெருவிடக் குமரியாற் பருவதே சுரனைக்
கொன்றனன் என்றே ............

**இராக்கதன் :** (தனக்குள்)
............ நன்றே குடில
பாதி யரசினுக் குரியனைப் படுத்தனை!
*நின்பழி துடைத்தனை நின்ற அப்பழி*
*வீழ்த்தினை என்மிசை* விதைத்த நயவிதை
பயந்தது பற்பல பயனை நினக்கே.

(வெளிப்படையாய்)

பின்னர்ப் பின்னர் ............

**விராதகுப்தன் :** ............ பின்னர்ச் சகடனே,
தச்சன் தாரு வன்மனா தியரைச்
சந்திர குப்தனை அந்தரம் சேர்க்க
நியமனஞ் செய்தா னென்றே நகரிற்
பலரும் அறியப் பேசிக் கழுவினில்
ஏற்றினன்.

**இராக்கதன் :** (கண்ணீர் பெருக்கி) அந்தோ என்னுடை நண்ப,
இத்தகை இறுதி இயையுமோ நினக்கே!
தலைவற் கன்றோ தந்தனை ஆருயிர்!
அதனால் நீயும் அளியை அல்லை;
நந்தர் குலந்தான் நசித்த பின்னர்
ஆருயிர் வாழ்வேம்; யாமே அளியம்!

**விராதகுப்தன் :** அமைச்ச நீவிர் அத்தலை வர்க்கா
அளப்பில் ஆள்வினை ஆற்றுகின் றனிரால்.

**இராக்கதன் :** தலைவர்க் கென்றே தாங்குவம் நல்லுயிர்;
அன்றி ஆருயிர் வாழ விழைந்திலம்.
இப்பொருள் கருதியே இருந்தனம் ஆகலின்,
துறக்கம் புக்கவர் தொடரப்பெற்றிலர்.
எஞ்சிய நண்பர் எத்துணைத் துன்பம்
அடைந்தன ரென்றே அறைதி கேட்பல்.

**விராதகுப்தன் :** சந்தன தாஸன் செவிக்கொண் டிதனை
அமைச்சர் மனைவியை அனுப்பினன் புறத்தே.

**இராக்கதன் :** கொடிய குடிலன் குறிப்பின் வழியே
சென்றிலன் அவனே. தகவல செய்தனன்!

**விராதகுப்தன் :** ஆயின் அமைச்ச, ஆருயிர் நண்பரைப்
பிழைத்தல் அதனினும் பெரும்பிழை யன்றோ?

**இராக்கதன் :** பின்னரென் பின்னரென் பேசுதி நண்ப.

**விராதகுப்தன் :** இவன்தான் பின்னர் இரந்தும் அமைச்சர்
மனைவியை ஈந்திலன்; மண்டிய சினத்தன்
சாணக் கியனே ............

**இராக்கதன் :** (பெரிதும் குழம்பி) சந்தனற் கொன்றிலன்?

**விராதகுப்தன் :** கொன்றிலன். பொருளைக் கொண்டனன் பின்னர்ப்
புகுத்தினன் புன்சிறை-மனையையும் மகனையும்.

**இராக்கதன் :** இராக்கதன் மனைவியை இனிதிற் போக்கினன்
புறத்தென எங்ஙனம் புகன்றனை மகிழ்வுடன்?
இராக்கதன் மனைவி மகனொடும் இருஞ்சிறை
புக்கனன் என்றே புகலுதல் வேண்டும்.

(ஏவலன் ஒருவன் புகுந்து)

**ஏவலன் :** வாழிய அமைச்சர் வந்தனன் வாய்தலில்
சகட தாஸன் ............

**இராக்கதன் :** ............ சகடனா! உண்மையோ?

**ஏவலன் :** பொய்யா இவ்விடம் புகல்வேன் அமைச்ச.

**இராக்கதன் :** விராத குப்த விழுமிய நண்ப
எங்ஙனம் இதுவே?............

**விராதகுப்தன் :** ............ என்னுடை அமைச்ச,
அங்ஙனம் ஆதல் அமையும்; விதிதான்
நல்லரை நனியும் நல்கும் கண்டீர்.

**இராக்கதன் :** பிரியம் வதக, பின்னேன் தாழ்ச்சி?
வல்லே தருக வாயில் நண்பனை.

**ஏவலன் :** அங்ஙனம் அமைச்ச அவன் றனைத் தருவேன்.

(சித்தார்த்தகனும் சகடதாசனும் வர)

**சகடதா** : (தனக்குள்)
மோரியற் போல மாணுறு தரைமிசை
நிறுவிய சூலம் நோக்கியும், அவன்றன்
பெருந்திரு வென்னப் பேருளங் கலக்கும்
செம்மலர்க் கண்ணியைச் சென்னியிற் கண்டும்,
தலைவன் இறுதிக்கிணையாத் தீக்குரல்
வெளிவிடு சாப்பறை முழக்கங் கேட்டும்,
முன்னடி பலவால் வன்மை பெற்ற
மனந்தான் வறிதும் விண்ட திலையால்.

(வந்து பார்த்து மகிழ்வுடன்)

ஈதோ அமைச்சர் இராக்கதர் உளரால்.
நந்தர் அழிந்தும், தலைவர்ப் பத்தி
குன்றா வண்ணம் குறித்த பணியினைப்
பொறுப்பவ ராகிப் புவிமிசைத் தலைவர்
இடத்தே ஈடுபா டுடையருள் இவரே
முன்னிய மேற்கோ ளென்ன மன்னினர்.
(நெருங்கி) வெல்க அமைச்ச ............

**இராக்கதன்** : ............................ சகட தாஸ
சாணக் கியனிடம் மாணச் சிக்கியும்
நல்விதித் துணையால் நானுனைக் கண்டேன்
ஆகலின் என்னை அன்புடன் தழுவுக.

(சகடதாஸன் அங்ஙனம் செய்கின்றான்)

**இராக்கதன்** : (நெடுநேரந் தழுவி)
இருக்கையின் இருத்தி (சகடதாஸன் இருக்க)
......................இன்னுயிர் நண்ப
இதயங் களிக்கும் இத்தகை மகிழ்ச்சியைத்
தந்தவன் யாவன் சகட தாஸ?

**சகடதா** : (சித்தார்த்தகனைக் காண்பித்து)
சித்தார்த் தகனிச் சீரிய நண்பன்
கொலைவினை மாக்களை வெருட்டிக் கொலைக்களம்
இருந்தெனைக் கொணர்ந்தனன் கடிதில் ஈங்கே.

**இராக்கதன்** : (மகிழ்வுடன்)
சித்தார்த் தகனே, செம்மல், வாழி
இனியநின் பணிக்கே இவையீ டாகா
எனினும் இவற்றினை ஏற்றுக் கொள்க.

(தன் உடம்பினின்றும் மணிக்கலன்களைக் கழற்றித் தருகின்றான்)

**சித்தார்த்** : (கலன்களைப் பெற்றுக் காலில் வீழ்ந்து தனக்குள்)
சாணக் கியர்தாம் சாற்றிய உரையிது;
அதன்வழி நின்றே ஆற்றுவன் அனைத்தையும்.

(வெளிப்படையாய்)

அமைச்ச வேண்டுவன்; அருளுக இதனை.
இதன்முன் இவ்வூர் வந்த திலையான்.
உற்றார் ஒருவரும் இந்நகர் எனக்கிலர்.
அளித்தநும் கலன்களை ஆரிடம் வைக்க?
ஆகலின் அவற்றினை ஆழி இதனால்
இலச்சினை யிட்டே இன்மதி அமைச்சர்
அரும்பொருள் அறைக்கண் வைப்பின்
வேண்டும் போழ்தினில் வேண்டிப் பெறுவனே.

**இராக்கதன்** : நல்லோய் தீங்கிலை; சகட தாஸ,
அங்ஙன மேசெய்............

**சகடதாஸ்** : ............ அமைச்சர் ஆணை.

(ஆழியை உற்று நோக்கி அமைச்சரிடம்)

அமைச்ச, ஆழி யிதன்மிசை நுந்தம்
பெயரே பொறித்துள முத்திரை காண்க.

**இராக்கதன்** : (பார்த்துத் தனக்குள்)
நகரினை நீத்து நான்வரு காலை
அன்புடை மனைவி ஆறி யிருக்க
என்னிட மிருந்தே இதனைப் பெற்றனள்.
இவன்கைப் பட்ட தெங்ஙனம் (வெளிப்படையாய்)
(நல்லோய்
சித்தார்த் தகனே, சிக்கிய வாறென்?

**சித்தார்த்** : பாடலி புரத்துப் பன்மணி குயிற்றும்
சால்புடை வணிகன் சந்தன தாஸன்
என்பான் ஒருவன் இனிதுளன் அமைச்ச
அவன்மனை வாயில் அருகோ ரிடத்தில்
வீழ்ந்து கிடந்ததிவ் வின்மணி யாழி.
கண்டனன் களிப்புடன் கொணர்ந்தனன் ஈங்கே.

**இராக்கதன்** : அமையும்............

**சித்தார்த்** : ............ அமைச்ச, அமைந்த தெதுவோ?

**இராக்கதன்** : பெருந்திரு வுடையார் அருமனை யருகில்
வீழலும் வீழும்; வீழ்ந்ததும் அடுக்கும்.

**சகடதா** : சித்தார்த் தகனே, சீரிய நண்ப
அமைச்சர் அரும்பெயர் கொண்ட திவ்வாழி.
அளித்தி அவரிடம்; அவர்தாம் அதன்விலை
விஞ்சி விழுப்பொருள் வழங்குவர் பரிசிலாய்!

**சித்தார்த்** : அமைச்சர் ஏற்பின் அதுவென் பேறாம்.

(ஆழியை அமைச்சர் கையில் இடுகின்றான்)

**இராக்கதன்** : சகட தாஸ, சால்புடை நண்ப,
ஆழி இதனால் ஆற்றுக நின்பணி.

**சகடதா** : அமைச்சர் ஆணை............

**சித்தார்த்** : ............ அமைச்ச வேண்டுகோள்

**இராக்கதன்** : வெளிப்படையாக விளம்புநின் கருத்தினை.

**சித்தார்த்** : சாணக் கியர்க்குச் சற்றும் பிடியாச்
செயலைச் செய்தவன் செழும்பா டலியில்
புகப்பெறா னென்பதைப் புகழ்மலி நீவிர்
அறிந்ததொன் றாகலின் அமைச்சர் அடிப்பணி
ஆற்றி இவ்வூர் இருக்க அருளுக.

**இராக்கதன்** : நல்லோய், நாமதை நயந்தனம், அதனை
அறிந்திலம் முன்னர்; ஆகலிற் கேட்டிலம்.
என்னுடன் இங்கிரு நாட்பல இனிதினே,

**சித்தார்த்** : (மகிழ்ச்சியுடன்)
அருளப் பெற்றேன் அமைச்சராற் பெரிதும்.

**இராக்கதன்** : மற்றவன் வழித்துன் பொழிக்க சகட.

**சகடதா** : ஆணை அமைச்ச............

(சித்தார்த்தகனோடு வெளிச் செல்கின்றான்)

**இராக்கதன்** : ..................அன்ப, விராத,
எஞ்சிய மொழிக, எழிலார் சந்திர
மன்னவன் பரிசனர் என்னுடைப் பேழ்
வினைகளை விழைகின் றனரோ?

**விராதகுப்தன் :** ...........................அமைச்ச
அய்யமே யின்றி அவர்விழை கின்றனர்.
அன்றியும் அவற்றின் ஆற்றினுஞ் செல்வர்.

**இராக்கதன்** : வெளிப்படை நிகழ்ச்சியை விளம்புக நண்ப.

**விராதகுப்தன் :** அமைச்ச இவையிவை ஆண்டைய நிகழ்ச்சிகள்:
மலய கேது மறைந்தமை தொடங்கிச்
சந்திர குப்தன் சாணக் கியனைச்
சினந்தே வருவன்; சீர்சால் குடிலனும்
வெற்றி வெறியான் வேந்தனை வெறுத்தனன்.
அவர்தம் ஆணைக ளனைத்தையும் மீறலால்
மன்னவன் மனத்துயர் வளர்த்தே வருவன்.
அடியனும் அதனை ஆயிடை அறிந்துளேன்.

**இராக்கதன் :** விராத குப்த, நண்ப, விரைக
பாம்பாட் டியெனப் பாடல நகர்க்கே.
இன்னும் கேண்மோ. என்னிடை ஈண்டிய
நண்பன் தனகல சனெனும் பெயரினன்
வைதா ளிகனின் வேடந் தாங்கி
ஆயிடை வதிவன்; அவன்பால் மொழிக
என்றன் மொழியால்; எவ்வெப் பொழுதெலாம்
சாணக் கியன்றான் சந்திர குப்தனின்
ஆணையை ஆற்ற அறவே மறுப்பனோ
அவ்வப் பொழுதெலாம் அரசனைப் புகழ்தலால்
அருஞ்சின மூட்டும் பெரும்பா சுரங்களைப்
பாடிப் பாட்டின் பயனைத் தெரிவி
மறைபிறர் அறியா மந்தண
முறையாற் கரபகன் வாயிலாய் எனக்கே.

**விராதகுப்தன் :** அமைச்சர் ஆணை வழியே ஆற்றுவென்.

(போகின்றான்)

**ஏவலன் :** (போந்து) சகட தாஸர் சாற்றுவர் இம்மொழி.
விழுக்கலன் மூன்று விலைக்கு வந்துள.
அமைச்சர் அவற்றினை ஆய்க நன்றென.

**இராக்கதன் :** (அவ்வணிகளை நோக்கி)
ஆஆ அருவிலை அணிகலன் அவைதாம்!
நல்லோய் நவில்தி சகடற் கென்மொழி.
விற்போன் வேண்டும் விலைதனை அளித்தே
விழுக்கலன் கொள்ளல் வேண்டும் வல்லே.

**ஏவலன் :** ஆணைப் படியே............ (போகின்றான்)

**இராக்கதன் :** ................ அதற்குள் யானும்
பாடலிப் பதிக்குப் போக்குவன் கரபனை

(எழுந்து)

சந்திர குப்தன் சாணக் கியனொடு
முரணுவன் கொல்லோ? முரணுவன் திண்ணம்!

என்னெனில்,

வேந்தன் மோரியன் ஏந்தல் பிறர்க்கெலாம்
இறைவனே யாகிஇடுவன் ஆணையை.
''என்துணை வலியால் ஏந்தல் ஆயினன்''
என்றே எஞ்சாச் செருக்கினைக் கொண்டனன்
சாணக் கியனும்; சந்திர குப்தன்
அரசினை அடைந்தனன்; அச்சா ணக்கியன்
நெடுமொழிக் கடலை நீந்திக் கடந்தனன்
என்னும் இவற்றால் வினைகள் முடிந்தன
என்றெணி *இருவரும் நட்பினிற் பிரிவரே.*

(அனைவரும் போகின்றனர்)

**இராக்கதன் சூழ்ச்சியெனும் இரண்டாம் அங்கம் முற்றும்.**



# மூன்றாம் அங்கம்

## போலிக் கலகம்

(கஞ்சுகி வருகின்றான்)

**கஞ்சுகி** : (வருந்தி) ஆசையே துடிப்பை. அனைத்தும் வீண்நின்
ஏவல் கேட்ட எல்லா உறுப்பும்
வல்லே ஆற்றல் இழந்தன மாதோ!
உருவம் ஆதிய ஐம்புலன் உணர்த்தி,
உறுபயன் உதவிய கண்முதல் பொறியும்,
அம்ம! வரவர ஆற்றல் இழந்தன.
முடிமிசை நரையும் அடியிட் டதுவால்!

(இங்குமங்கும் உலவி வானினை நோக்கி)

*சுகாங்க* மென்னும் சுந்தர மாளிகை
வதியும் வேந்தர் ஏவல் இளையீர்,
கவுமுதி விழவே கால்கொண் டதுவால்;
மகிழ்ச்சி மல்கிய மாநக ரிதனைக்
கண்டு களிக்கக் கருதுமென் னெஞ்சம்.
ஆகலின், நீயிர் அனைவரும் சென்று
சுகந்தரு சுகாங்க மாளிகை மேனிலை
கண்ணுக் கினிதாய்ப் பண்ணுறுத் துமினெனச்
சந்திர வேந்தர் சாற்றினர் ஆணை.

(மீண்டும் விசும்பினை நோக்கி)

என்னென் றீர்நீர்? ''இயம்பரு கவுமுதி
விழவே இலதென வேந்தர் பெருந்தகை
அறியா ரோவென'' ஆஆ கெட்டீர்!
இறப்பினை யின்னே யின்னே தருமொரு
செய்தியை எதனாற் செப்பினிர்? விரைவினில்
நிறைமதிக் கதிரென நிலவும் வனப்பார்
சாமரை பலவும், தீம்புகை கமழ்வதும்
நறுமலர் மாலைகள் நாலவிட் டனவும்
ஆன அழகுடைத் தூண்களை அணைக.
அரியணை பொறுத்து மயங்கிய அவனியின்
மாணெழில் முகத்து மயக்கந் தீர

நாண்மலர் விரவிய நறுஞ்சந் தனநீர்
தெளித்தா லென்னத் தெளித்திர் இடனெலாம்.
என்னென் றீர்நீர்? எந்தம் வேந்தர்
ஆணையாற் றுவமென. அணைதிர் நண்பீர்
சந்திர வேந்தர் சார்ந்தனர் வாய்தலில்.
அவர் தாம்,
உறுதி மிக்க உறுப்பின் துணையால்
ஊறு விளைக்கும் இடனே யாயினும்,
*ஆனே றன்ன* அரசரின் முன்னோர்
தாமே நெடிது பொறுத்தவிச் சுமக்கரும்
*புவிச்சுமை பொறுக்கப் புக்கனர் இளமையில்.*
*பழகிலர் எனினும் நழுவிலர்;* பொறுப்பர்
ஊக்கம் மிக்கவர் ஆகலின் உறுதுயர்.

(திரைக்குள்)

இவ்வழி வேந்த, இவ்வழி வருக.

(பின்னர் அரசனும் வாயிற் காப்போளும் வருகின்றனர்)

**அரசன்** : (தனக்குள்)
அரசியற் பணிகளை அறத்தின் ஆறே
ஆற்றும் அரசர்க் கரசது தானும்
அருந்துயர் தருமிடன்; அதனை விளம்புவென்.

என்னெனில்,

மன்னுயிர் பேணின் தன்னலன் ஒழியும்.
தன்னலன் விட்டவன் மன்னவன் ஆகான்.
தன்னலன் பேணலிற் பிறர்நலம் பெரிதெனின்
அந்தோ அவன்றான் அடிமையே மன்ற!
அடிமைதா னின்பச் சுவையினை அறிவனோ?
இன்னும் இயம்புவ லிதன்திறம்!
மனவலி மிக்க மன்னவர் தாமும்
அரசெனுந் திருவினை வழிபடல் அரிதே.

என்னெனில்,

கடுகடு தண்டக் காவலற் காணின்
ஒடுங்குவள் பெரிதும்; மென்மைய னாயின்
அவமா னத்தினை அடையினும் அடையும்
என்றெணி ஏந்த லிடையே தங்காள்.
கயவரை முனிவள்; கசடறக் கற்ற
புலவரைத் தாமும் பாராள் விழைவொடு.
அஞ்சா வீரரை நஞ்சா அஞ்சுவள்.

அச்சமிக் கோனை அறவும் பழிப்பள்.
பொதுமகள் மானும் பொங்கெழிற் றிருவினைப்
பேணல் அந்தோ பெரிதும் அரிதே.
அன்றியும், ஆரியர் அண்மையில் தம்முடன்
போலிக் கலாத்தினைப் *பொள்ளெ*ன விளைத்தே,
தன்னந் தனியே சிலநாட் சிறப்புடன்
உரைப்பரும் உரிமை பெற்றே,
அரசினை ஆள ஆணையிட் டுளரால்.
அரிதில் அதனைப்
பாதகம் என்னப் பற்றினென்.
அன்றியும் ஆரியர் தம்மால் அடிக்கடி
திருத்திப் பெருக்கிய
மதியால் என்றும் மாண்புறு
உரிமையம் யாமே உற்றுநோக் கிடினே.

என்னெனில்,

நல்லன் நாடிச் செய்யுஞ் சீடன்
செயலைச் செகத்தில் தடுக்குந ரில்லை.
மயக்கத் தாலே மாண்வழி விலங்கின்
அப்போ தாசான் அங்குச மாவான்.
ஆகலின், ஒழுக்கம் பேணும் ஆன்றோர்க்
கென்றும் அங்குசம் எனைத்தும் வேண்டா.
மற்றிதின் மாறிய மூற்றிய உரிமை
எமக்கென் செய்யும்? என்றும் வேண்டேம்.

(வெளிப்படையாய்)

ஆரிய வைகீ நரனே, அழகார்
சுகாங்க நெறியினைச் சுட்டிச் செல்க.

**கஞ்சுகி** : இவ்வழி வேந்த (நடந்து சென்ற) இதுவே சுகரங்க
மாளிகை. மெல்ல ஏறுக மன்னவ.

**அரசன்** : (ஏறித்திசைகள் அனைத்தையும் பார்த்து)
சரத்கா லத்துச் சார்தரு ஒளிமிகு
திசைகள் அனைத்தும் *திப்பியம்!* ஆஆ!

என்னெனின்,

ஆறே பைபய அறற்பெருக் கற்றுப்,
பான்முகில் மானும் *புளினம்* பலவாய்ப்,
பண்ணினை மிழற்றும் பானிறக் குருகெலாஞ்
சுற்றிச் சூழ்ந்து முற்றின வாகிய
பத்துத் திசைகள் பகரரு கங்குலுள்

கண்ணுக் கினிய *குமுதம் புரையும்*
வில்லிடு மீனினம் விளங்கப் பெற்று,
அத்தலை அகலார் ஆறுகள் அனைத்தும்
மாக விசும்பெனும் மலைத்தலை யிழிந்து,
பரவுவ போன்மே பளிக்குநீ ருடனே!

அன்றியும்,

வரம்பிகந்த மாவெளத்தின்
இடமிதுவென இடித்துரைத்தும்,
மணிச்சாலியின் முதிர்கதிர்த்தலை
நிமராவணம் தலைதாழ்த்தியும்,
கடுவிடமன களிமயில்மதம்
வளராவகை மெலமறைத்தும்,
ஆ ஆ,
கூறற் கரிய கூதிர்காலம்
பாரினுக் கடக்கம் பயிற்றிய தாமே.
உதுக்காண்,
*கணவன் கணக்கில காரிகை கலந்தனன்*
*எனவே கலங்கி* எழில்மெய் யிளைத்த
நாக நதியைத் தன்வழிப் படுத்திக்
கலவி மொழிவல கூதிர்த் தோழி
தெளிந்தவந் நதியைத் திரைகட லுய்க்குமே!

(சுற்றிப்பார்த்து உற்று நோக்கி)

களிதரு கவுமுதி விழவைப்
பாடலப் பதியுள்
என்னுடை மக்கள் இன்னும் தொடங்கிலர்
ஆரிய, வைகி நானே
விழவினை விழைந்தே
எடுக்க ஏவிய எந்தம் ஆணை
பாடல நகரினர் பறையால்
அறிந்தில ரென்ன அறிவேம் யாமே.

**கஞ்சுகி** : ஆமாம் அரசே

**அரசன்** : ஆணை கேட்டிலர்!

**கஞ்சுகி** : (காதுகளைப் பொத்திக்கொண்டு)
பாவம் ஒழிக, பாவம் ஒழிக.
உம்முடை ஆணை உலகெலாஞ்
செலுமே, செல்லா தோவிப் பதியிலே.

**அரசன்** : இன்னும் விழவேன் எடுத்திலர் பதியில்?

தூர்த்தர் சூழ்வரு தூய்மையில் மாதர்
நாணம் நீத்த நனிபல மொழிமிடை
காதல் மொழிந்தும், கனகடி தடத்தால்
தளர்நடை பெயர்ந்தும் சென்றிலர் மறுகில்.
நிதிமிகப் பெற்ற பதிவாழ் செல்வர்
ஒருவரின் ஒருவர் ஓங்குங் கருத்தொடு
பொறாமை நீத்துப் பொருட்குவை அளவினை
அறியச் செய்திலர்; அவரவர் இல்லுறை
மனைவியர் தம்மொடும் மகிழ்ச்சி மிகுந்தே
கலைமதி நாளிற் கண்ணுறு விழவிற்
களித்துத் திரிகிலர்; கருத்தறி கிலனே.

**கஞ்சுகி** : ஆமாம் அரசே, அதுதான்; அதுவே.

**அரசன்** : எதுதான் இயம்பிடு?

**கஞ்சுகி** : இதுதான் இறைவி வேறென்?

**அரசன்** : தெளிவாய்ச் சொல்லுக எதுவென.

**கஞ்சுகி** : *தடைப்பட் டதுவால் தண்மதி விழவே.*

**அரசன்** : (சினத்துடன்)
ஆஆ, அதனுக் கத்தடை எவரால்?

**கஞ்சுகி** : இறைவ, இதன்மேல் அடியன் இயம்பலன்.

**அரசன்** : சாணக் கியரெனும் சான்ற ஆரியர்
கண்ணுக் கினிய காட்சியை
எவரும் காண்டல்
கூடா தென்னக் கூறினர் கொல்லோ?

**கஞ்சுகி** : வாழ விரும்பும் வேறெவன் நுந்தம்
ஆணை கடக்குநன்? அரசர் ஏறே!

**அரசன்** : இருக்க விழைந்தேன் இடங்காண் சோணை!

**வா.காப்** : ஈதோ அரியணை இருத்திர் இதன்மிசை.

**அரசன்** : (அமர்ந்து)
ஆரிய வைகீ நரனே, ஆரியர்
சாணக் கியரைக் காணல் விழைந்தனென்.

**கஞ்சுகி** : எதுவோ தேவர் ஏவல் அதன்படி.

(வெளிச் செல்கின்றான்)

(சாணக்கியன் தன் வீட்டில் உள்ள இருக்கை யொன்றில் சினத்தொடும் ஆழ்ந்த கருத்தொடும் இருக்கின்றனன்)

**சாணக்** : எங்ஙன் அமையும் என்னுடன் துன்மதி
இராக்கதன் இங்ஙனம் போட்டி யிடுதல்?
''தன்பால் வந்த தாங்கரும் இழிவால்
நச்சர வென்ன நகர்ப்புறஞ் சென்ற
கவுடிலன் எங்ஙனம் கருதரு நந்தரை
முருக்கி மோரிய விருடலனை வேந்தென
அரியணை அமர்த்தினன்? அங்ஙனம், குப்தனின்
திருவினைப் பறிக்குவன் திண்ணமாய்'' என்றெணி
மதிவலி விஞ்சவே முயலுவன் தஞ்சென.

(விசும்பினை நோக்கி)

இராக்கத, இராக்கத, இந்நசை விடுக,
பயனில் முயற்சி! பாழ்மதி அமைச்சரால்
புரத்தல் பெற்ற புல்லிய புரவலன்
*நந்தன் இவனலன்; சந்திர குப்தன்!*
*சாணக் கியனும் நீயலை; இராக்கதன்.*
எனைப்போல் எல்லாஞ் செய்தலில், எனக்கும்
உனக்கும் மன்பகை ஒன்றே பொதுவாம்.

(ஆய்ந்து)

இல்லை, இத்துறை எனக்கேன் கவற்சி?

என்னெனில்,

பருவதன் மகனைப் பரிசனர் எமரெலாஞ்
சுற்றில ராகிப் பற்றினர் அவர் மனம்.
சித்தார்த் தகன்முதல் சிறப்புடை ஒற்றர்
அவரவர் வினையை ஆற்றுவர் மன்ற.
பேத விரகினன் வேதியன் யானும்
மவுரிய மன்னவன் தன்னொடு போலிக்
கலக மொன்றனை விளைத்தென் கருத்தின்
வண்ணம்—முரணும் வலியும் நிறைதரு
இராக்கத அமைச்சனைப் பகைவரி
னின்றும் நீக்கிடச் செய்வல் திண்ணமாய்.

கஞ்சுகி : (புகுந்து)
ஏவற் றொழிலில் எத்தனை துன்பம்!
அரசற் கச்சம்; அமைச்சற் கச்சம்!
அரசற் கன்பினர், அவன்மனை வாழ்ந்தே
அவனருள் பெற்றே அகச்சுவை யூட்டும்
விடர்களுக் கச்சம்! வேறுளர்க் கச்சம்!
வயிற்றினை வளர்க்க வருந்தி யுழைத்துப்,
பல்லினைக் காட்டிப் பரக்க விழித்து,

வறுமையால் வாடித் தாழ்ச்சி சொல்லும்
ஏவல் வாழ்வினை இழிந்த நாயின்
வாழ்வென வகுத்தனர் நன்மதிப் பெரியோர்.

(வளையச் சென்று பார்த்து)

ஆரியர் சாணக் கியரின் அழகார்
இல்லிது; புகுந்தே இயம்புவன் செய்தி.

(வீட்டினை நோக்குகின்றான்)

ஆஆ! அரசர்க் கரசரின் உழையர்
திருப்பெருக் கத்துத் திறந்தான்! என்னிது!
*ஈங்கொரு கல்லே எருமுட் டையினை*
இட்டுப் பொடிக்க இலகுறும்! ஆங்கெனின்,
சீடர் கொய்தே சேர்த்த தருப்பை
முட்டியின் கற்றை முற்றிக் காணும்!
இல்தான் இடிசுவர் பலவா னியன்றே
வேள்விச் சமிதை விரித்துலர்த் தியதால்
வளைவினைப் பெற்றே வயங்கும் கூரையும்.
சந்திர குப்தனைச் சாணக் கியன்றான்
'விருடலன்' எனவே விளிப்பதில் வியப்பென்?

என்னெனில்,

வாய்மை மொழியும் வளங்கெழு நாவினர்
அரசற் கில்லா அலகில் குணங்களை
அவன்மீ தேற்றி அவர்தம் நன்னாத்
தளர்வுறு காறும் வளமுறு சொல்லால்
மெய்யினை வணக்கிப் பொய்யாய்ப் புகழ்தல்
அவாவின் பெருக்கா லன்றிவே றில்லை.
*அவாவினை அறுத்த ஆன்றோர் அரசனை*
*முளிபுல் எனவே முனிகுவர் வெறுத்தே.*

(அச்சத்துடன் முன்னே பார்த்து)

ஆஆ, ஆரியர் சாணக் கியர்தாம்
இருக்கின் றனரால்! இவரே உலகினை
வணங்கி நந்தர்க் கழிவும் மவுரியற்
காக்கமும் ஒரு போழ்தினிலே அளித்தவர்.
பல்கதிர் பரப்பிப் பகற்செய் மண்டிலம்
தட்பம் என்றா வெப்பம் என்றா
பருவந் தாரா தொருபோ தினிலே.
அதனை விளைத்த அருஞ்செய லாரியர்
*பரிதியை விஞ்சிய பகரரு ஒளியினர்.*

(முழந்தாளிட்டுப் பணிந்து)

வெல்க, ஆரியர் பெரும வெல்க.

**சாணக்** : வைகீ நரனே வந்ததென் னீங்கே?

**கஞ்சுகி** : யான்முன்னென யான் முன்னென
அரசினர்பலர் அடிவிழ வவர்
அணிமணிமுடி அசைதருதலின்
அலகிலபல மணியொளிவிடு
திருவடிமலர்ப் பெருமவுரியன்
சந்திரமனன் தன்றலைகொடு
நும்மடிமிசை வீழ்ந்தெழுந்திது
நன்றே,
வேண்டுவன்; விழைந்தனென் வயமதி
ஆரியர்க் காண அருவினை கெடாமே.

**சாணக்** : விருடலன் காண விழைந்தனன் என்னை!
வைகீ நரனே! வளமார் விழவின்
தடைதான் விருடலன் செவிப்பட விலையோ?

**கஞ்சுகி** : ஆரிய, ஆமாம் பட்ட ததுவே.

**சாணக்** : (சினத்துடன்)
ஆஆ, அறிவித் தவரார், அதனை?

**கஞ்சுகி** : (அஞ்சி நடுங்கி)
ஆரிய அருள்க; அரசர் தாமே
சுகாங்க மிருந்து சுந்தர நகர்க்கண்
கவுமுதி விழவே கால்கொள விலையெனப்
பார்த்தே அறிந்தனர்; பகரவே றிலையே.

**சாணக்** : ஆஆ, அப்படி யாஅது? ஆயின்
அங்குள நீயிர் அவ்வம யத்தினில்
மவுரியன் சினத்தினை மண்ட விட்டனிர்.
வெகுண்டன னவனும்; வேறென் னிதன்கண்?

(கஞ்சுகி அச்சத்தால் நடுங்கித் தலைகுனிந்து வாய்மூடி நிற்கின்றான்)

**சாணக்** : சாணக் கியனைச் சந்திரன் பகைக்க
அரசன் பரிசனர் அன்புதான் ஆஆ
நன்றே. யாண்டுளன் விருடலன் இன்றே?

**கஞ்சுகி** : (அஞ்சி)
ஆரிய, அரசர் சுகாங்க மிருந்தே
அடியனை நுந்தம் இணையடிக் கனுப்பினார்.

**சாணக்** : (எழுந்து) சுகாங்க நெறிக்கொள்.

**கஞ்சுகி** : சுவாமீ இவ்வழி.

(இருவரும் செல்கின்றனர்)

**கஞ்சுகி** : ஆரிய! சுகாங்க அணிகெழு மாளிகை
மேனிலை மீமிசை மெல்ல ஏறுக.

**சாணக்** : (ஏறி மாளிகையினை உற்று நோக்கி)
ஆஆ, அரியணை அமர்ந்துளன் விருடலன்.
நன்றிது நன்றே! நலமா ரிவ்வணை
அரசர் கடமையை அவமதித் திட்ட
நந்த வேந்தரான் நனிவிடப் பெற்றது.
அரசருள் ஆனே றனைய விருடலன்
இப்போ ததனுள் இவர்ந்துள னினிதின்.
அரசர்க் கியைந்த தாயதவ் வரியணை.
குணமிவை யனைத்தும் கூடி என்மன
மகிழ்ச்சியைப் பெரிதும் மிகுக்கும் மன்ற.
(சிறிது முன்னேறி)
வாழிய விருடல, வழிவழி வாழ்க.

**அரசன்** : (இருக்கை விட்டெழுந்து)
ஆரிய! அடியேன் சந்திரன் வணக்கம்:
(அடிபணிகின்றான்)

**சாணக்** : (பணிந்த மன்னவனைக் கையால் எடுத்துத் தழுவி)
எழுக எழுக என்றன் குழந்தாய்
இமய வரையி னிரும்பா றையிடை
இழிதரு மருவி யிமையோர் நதியின்
நுண்டுளிப் பெருக்கால் தண்மை பெற்ற
அம்மலை தொடங்கி அவிரொளி முத்தம்
பலவாய் ஒளிவிடு பேரலைத் தென்கடல்
வரையுள கணக்கில் வேந்தரும் வந்தனர்
வந்தனர் அஞ்சினர் நின்னடி வணங்க,
அவரணி அணிமுடி அழுத்திய பன்மணிப்
பன்னிறம் நின்னடி மன்னிய செறிவிரல்
இடையே புகுதுக, இனிதின் விரவுக.

**அரசன்** : ஆரியர் அருளால் அனைத்தையும் அடைந்தேன்;
அன்புடை அடிகள் அமருக அமருக.

(இருவரும் இருக்கையில் அமர்கின்றனர்)

**சாணக்** : விருடல, எம்மை அழைத்ததென் விளம்பு.

**அரசன்** : ஆரியர் காட்சியால் அருள்பெறக் கருதியே.

**சாணக்** : (புன்முறுவல் பூத்து)
பணிவு போதும், தலைவர் தங்கீழ்ப்
பணிபுரி குநரைப் பயனின் றழையார்.

**அரசன்** : கவுமுதி விழவினைக் கெடுத்ததால் ஆரிய,
எப்பயன் கண்டீர் என்ன இயம்புக.

**சாணக்** : (புன்முறுவலோடு)
இடித்துக் காட்டவோ எம்மை அழைத்தனை?

**அரசன்** : பாவம் ஒழிக; பாவம் ஒழிக.
வைதற் கிலையிலை; விண்ணப் பஞ்செய.

**சாணக்** : ஆயின், அதனுக் கமைந்த ஆன்றோர்
செயல்கள் அவர்தம் சீடனால் மதித்தற்குரியன;
மறுத்தற்குரியவல்ல.

**அரசன்** : அமையும், அய்யமென்? ஆயினும் ஆரியர்
கருத்தே யின்றிக் கருமஞ் செய்யார் ஆகலின்,
எம்வினா எழுந்தது தக்கது வாகும்.

**சாணக்** : விருடல நன்னர்த் தெரிந்தனை; விழுப்பயன்
இன்றெனின் கனவிலும் இயங்கான் குடிலன்.

**அரசன்** : ஆகலின், ஆரிய அறிய விரும்பினேன்.

**சாணக்** : விருடல கேட்டீ; விளக்குவென் இதனை:
பொருணூல் கண்ட புலவலிச் சான்றோர்
*ஆட்சிமூ வகையென* அரசர்க் காக்கினர்.
ஒன்றே வேந்தன் ஒருவனே ஆளுதல்.
இரண்டே அமைச்சன் இனிதின் ஆளுதல்.
மூன்றே இருவரும் இயைந்து புரிதல்.
உன்னுடை ஆட்சி உன்னமைச் சனதால்.
காரணங் கேட்டல் கடவ தன்றே!
*யாமே இயைந்தனம் ஆய்ந்தனம் ஆற்றுவம்.*

**அரசன்** : (சினந்தவன் போல முகத்தினைத் திருப்பிக்கொள்கின்றான்)

(திரைக்குள் இரண்டு வைதாளிகர் பாடுகின்றனர்)

**முதல்**
**வைதாளிகன்** : நாணல் மலரொளி மானும் நீற்றால்
விசும்பின் இடனெலாம் வெண்ணிறம் விரித்துச்
செஞ்சடை மிலைந்த வெண்மதி நிலவால்
கருமுகில் சிவணுங் கரியுரி நிறத்தினைக்

கடிதின் மாற்றிக் கபால மாலையால்
நல்லன நிரையாம் வெண்ணகை விளைக்குஞ்
*சிவனார் செவ்வியை நிகர்க்கும் கூதிர்ப்*
பருவம் நுந்தம் பருவரல் மாய்க்கவே.

அன்றியும்,

பணாடவி மண்டிலம் தலையணை யாக
அரவணைத் துயின்றுபின் அறிதுறி லுணர
விரும்புந் திருமால் அண்மை விழிப்பால்
மந்த நோக்கொடு மணிவிளக் கனைய
அரவின் மணிக்குக் கூசியும், அதன்பின்
உடலை முரித்துக் கொட்டாவி விடலால்
வெளிப்படுஞ் சிறுதுளி கொண்டு விளங்கிச்
சோம்பரான் இடுகி மிகைபடு துயிலால்
நனிமிகச் சிவந்த நாரணன் விழியின்
அரைநோக் குமையே அளிக்க பெரிதே.

**இரண்டாம் வைதாளிகன்** : மனிதருட் சிறந்தோய் மன்னவர் முதல்வ,
நான்முகன்-வயமே, நண்ணிய பெருமை,
வெளிப்படு மானம், விளங்கிய செருக்கே,
எனுமிப் பண்பின் இருக்கை யென்ன
உன்போ லரசரை உவந்தனன் படைத்தான்.
தன்னுடை ஆற்றலால் தாங்கரு மதநீர்
பெருக்குஞ் செம்மற் பெருங்கரிக் குழுவினைத்
தபுக்கும் அருவயச் சினங்கெழு சீயமும்
எயிற்றுமுறி மானும் ஏவன் மீறலைப்
பொறா வாகப் பொறுப்பரோ நும்போல்
அவனி யனைத்தும் ஆளும் அரசரே?

அன்றியும்,

மணியணி தரிக்குநன் மன்னன் அல்லன்!
பிறராற் சிறிதும் பெயர்த்த லில்லா
ஆணை கொண்ட நீயே அரசன்!

**சாணக்** : (தனக்குள்)
கூதிர்ச் செவ்வியைக் கூறு முகத்தான்
முன்னிய தெய்வம் ஒன்றனைத் துதித்தே,
முன்னது வாழ்த்திய தாகும். பின்னது
என்னென எய்யேன் (ஆய்ந்து) ஏஏ அறிந்தேன்
இதுதான் இராக்கதன் ஏவல் மாதோ.
கண்டனென் நின்னை! கயமை யிராக்கத,
உளனே குடிலன் உறுவிழிப் புடனே!

**அரசன்** : ஆரிய வைகீ நரனே, அவ்விரு
வைதா ளிகர்க்கே வயங்குநூ றாயிரம்
பொன்னினை ஈக பொருக்கெனப் புகுந்தே.

**கஞ்சுகி** : வேந்த ராணையை விரைவினிற் செய்வல்.

**சாணக்** : (மண்டிய சினத்தனாய்)
வைகீ நரனே நில்நில்; மேற்செலல்.
விருடல, வீணில் ஏனிப் பெருங்கொடை?

**அரசன்** : (சினத்துடன்)
ஆரிய, அடிக்கடி ஆணை அனைத்தையும்
தடுத்துத் தாங்கரும் துன்பம் விளைத்தீர்
ஆதலின், *அரசினை அரசெனக் கருதிலன்.*
*கடுஞ்சிறை யென்னக் கருதுவென் கண்டீர்!*

**சாணக்** : விருடல ''வேந்தர் விருப்புடன் நாளும்
தந்தொழில் தாமே தம்மதித் துணையால்
ஆற்றா ரென்னின் அருந்துய ருழப்பர்''
பொறுக்கலை யெனின்நீ பொறுத்திநின் புயத்தினில்.

**அரசன்** : இனியாம் எந்தொழில் இனிதின் இயற்றுவம்!

**சாணக்** : யாமும் மகிழ்ந்தனம் எந்தொழில் ஆற்றுவம்!

**அரசன்** : ஆயின், ஆரிய அறிய அவாவினன்
கௌமுதி விழவினைக் கவிழ்த்ததின் பயனை.

**சாணக்** : கவுமுதி விழவினைக் கொண்டா டுவதால்
வருபயன் யாதென வலித்தி விருடல.

**அரசன்** : எந்தம் ஆணையின் இடையீ டின்மையே

**சாணக்** : விருடல, கவுமுதி விழவின் தடுப்பே
ஆணை ஆற்றலாம், அதுவே முதற்பயன்.

என்னெனில்,

தமாலம் அரும்பிய தளிராற் கருமை
கஞலிய கடற்கரைக் காடு சூழ்ந்தும்
சடுலத் திமிகுலம் பலவாற் கலங்கிய
நாற்கடல் நன்கரை நானில மிசைவதி
மன்னவர் நூற்றுவர் நின்னுடை ஆணையை
நாண்மலர் மாலையை நன்முடி வணக்கியே
ஏற்பது வென்ன ஏற்றனர் ஆற்றுவர்;
அதுதான் அங்ஙனம் ஆரியன் என்னுழைத்

தவறுமேற் காவல, தாங்கரும் இறைமைதான்
வியப்புடை விநய விழுக்கலன் அணிந்ததே!

**அரசன்** : அறிய அவாவினென் இன்னொரு பயனையும்.

**சாணக்** : அறைவல் அதனையும்

**அரசன்** : அறைதிர் அதனை.

**சாணக்** : ''மனக்கசப் பாலே மாநகர் விட்டு
மலய கேதுவைச் சார்ந்த படைஞர்
பத்திர படனா தியரைப் பற்றிய
எழுத்துறு தாளினை இன்னே கொணர்கென''
சோணோத் தரையே, சொல்லென் மொழியால்
அசலகா யத்தனை அண்மி அவன்பால்.

**வா.காப்** : ஆரியர் ஆணை—(வெளிச்சென்று திரும்பி வந்து)
ஆரிய அதுவிது.

**சாணக்** : (கையால் வாங்கி) விருடல கேட்டி.

**அரசன்** : விருப்புடன் கேட்பல்.

**சாணக்** : (படிக்கின்றான்)
''ஏமம். பொருந்திய எழிலார் நற்பெயர்ச்

சந்திர குப்தனைச் சார்ந்தினி திருந்த
தலைப்பரி சனத்தர் உலைவுறு மனத்தராய்
அவனைத் துறந்தனர் அடங்கலன் மலயனைச்
சார்ந்த நிலையினைத் தெளிக்கும் எழுத்திது.
தத்துறு மதகரிப் படையின் தலைவன்
பத்திர படனே, பரிப்படைத் தலைவன்
புருட தத்தன், பெருங்கா வலனார்
சந்திர பாநுவின் சகோதரி மகனாந்
திங்க ராதன்; திருமிகு வேந்தனின்
நெருங்கிய உறவினன் பெரும்பல குப்தன்,
இளமை தொட்டே இறைப்பணி ஆற்றும்
இராச சேனன், இரும்படைத் தலைவன்
சிங்க பலனின் சீரிய இளையோன்
பாகுரா யணனே, மாளவ மன்னன்
மைந்தன் உலோகி தாக்கன், மற்றும்
கத்திர கணத்துக் கருதரு தலைவன்
விசய வருமன், என்னுமிவ் வேடு-

**அரசன்** : அவர்தம் வெறுப்பினுக் கமைந்த காரணம்
அறிய அவாவுவல்

**சாணக்** : அறைகுவன் கேட்டி!
பத்திர படனும், புருட தத்தனும்,
கரிபரித் தலைவர்; கருமஞ் செய்யார்
காரிகை, கள்ளே, காட்டுமா வேட்டம்,
இவற்றுள் எஞ்சா வேட்கை விஞ்சினர்
'இழிசெய லினரிவர்' எனவே அறிந்து
நீக்கினம் இவரை; நீச ரிவர்தம்
வாழ்க்கைக் காக வழங்கினஞ் சிறுபொருள்.
அச்செயல் பொறாத அவ்வதி காரிகள்
அவர்தம் பொறுப்பில் அடங்கலன் மலயனை
அடைந்தன ராகி, அத்தொழில் பெற்றார்.
திங்க ராதனும் திண்பல குப்தனும்
பெரும்பொருள் பெறுமொரு பேரா சையினால்
நம்பொருள் நனிமிகச் சிறிதெனக் கருதி,
மாண்பொருள் ஈவோன் மலய கேதுவே
என்னுங் கருத்தால் இரிந்தனர் ஆங்கே.
இளையன் இனியன் இராச சேனன்
உன்னுடை அருளால் உலவாப் பொருளும்
கரியும் பரியும் கணக்கில பெற்றே
அளப்பரும் பெருந்திரு அடைந்தன னாகிப்
பார்த்திவன் கண்டாற் பறிமுதல் செய்யும்
என்றே அஞ்சி எடுத்தனன் ஓட்டம்
மன்னன் குமரன் மலைய னுழையே.
சேனைத் தலைவன் சிங்க வன்மனுக்
கிளவல் பாகுரா யணனும் பர்வத
மன்னனைப் பெரிதும் நட்டவன் மகனிடம்
நண்ணி நண்ப, நுந்தை-குடிலனால்
கொல்லப் பெற்றனன் என்னும் கொடிய
செய்தியைப் படைத்து, மறையிற் செப்பி,
அச்சம் விளைக்க அவனோ டினனால்.
அரசத் துரோகியர் சந்தன னாதியர்
சிறைப்படத் தனக்குமத் தீங்குறு மெனவே
அடைந்தனன் அஞ்சி மலய கேதுவை.
இவனே என்றன் இன்னுயிர் அளித்தோன்
என்றெணி, அவனும் நன்றியை உன்னி,
உவற்கே உழைவதி பதவியை உதவினன்.
விசய வன்மனும், உலோகி தாக்கனும்,
பங்கா ளியர்க்குநீ பரிவுடன் ஈந்த
அரும்பொருட் பெருக்கால் அழுக்கா றுற்று,
மன்மகன் மலய கேதுவைச் சார்ந்தனர்''
இவையே இவர்தம் வெறுப்பின் காரணம்.

**அரசன்** : இவர்தம் வெறுப்பினுக் கிவைகா ரணமென
ஆரியர் அறிந்தும் அவற்றினை வல்லே
மாற்றுஞ் செயலை ஆற்றிலிர் எதனால்?

**சாணக்** : மாற்ற முடியா மற்றவை விருடல.

**அரசன்** : ஆற்றல் இன்மையா? அரும்பயன் கருதியா?

**சாணக்** : ஆற்றல் இன்மையா? அரும்பயன் கருதியே!

**அரசன்** : அப்பயன் அறிய அவாவுவென் ஈங்கே.

**சாணக்** : கேட்டி, நன்னர்; கேட்டவை மனக்கொள்.
இறப்ப வெறுத்த இவர்தமைக் குறித்தே
இயற்றுவ இரண்டே ஈங்குள; அவற்றுள்
*ஒன்றே அருளல்; இரண்டே அழித்தல்.*
பத்திர படனும் புருட தத்தனும்
நம்மா னன்றே நீக்கப் பெற்றனர்!
அவர் தமக் கருளல் அவரை மீட்டும்
அப்பணி வைத்தலாம்; அரசர் பணிக்கண்
அன்பில ராகி அல்வழி ஒழுகும்
அவரை மீண்டும் அப்பணி நிறுத்தின்
அரசினுக் கடிப்படை ஆகி நின்ற
இபமும் இவுளியும் எஞ்சல துஞ்சும்.
திங்க ராதனும் திண்பல தேவனும்
ஆசைப் பேயர்; அகிலம் ஈயினும்
அமைதி அடைகிலர். அருளல் யாங்ஙனம்?
இராச சேனனும் பாகுரா யணனும்
இன்பொருள் இன்னுயிர் முறையே அஞ்சுவர்.
அவர் தமக் கருளலில் அணுவும் பயனிலை.
தாயா தியரின் தனநிலை பொறாது
தாமே பெரியர் என்றே தருக்கும்
உலோகிதாக் கற்கும் விசயவன் மற்கும்
எத்தனை அருளினும் ஈண்டா தின்பம்.

ஆதலின்,

முன்ன தொழித்தனம். பின்ன தழித்தல்:
அதுவுந் துறந்தனம். அதற்கிவை காரணம்.
நந்தர் திருவை அண்மையில் நண்ணி
நம்வழி நிற்கும் நல்லோர் தமையும்
கடுந்தண் டத்தா லொடுக்குவ மெனினே,
நந்தர் குலத்தை நாளும் விரும்பும்
நகரினர் நம்மை எனைத்தும் நம்பார்.
தாதையின் கொலையாற் றாங்கருஞ் சினத்தன்

பர்வதன் மகனாம் மலய கேது
தன்னைச் சார்ந்த நம்மவர்க் கருளி
மிகப்பல மிலேச்சப் படையாற் சூழ்ந்து
நம்மை அடர்க்க நனியும் முயல்வன்.
வினைபுரி காலம், விழவினுக் கன்றென
அரண்வலிப் படுத்தத் தொடங்குமிக் காலை
கவுமுதி விழவாற் கையுறும் பயனிலை
எனவே எண்ணி விழவைத் தடுத்தனம்.

**அரசன்** : ஆரிய அதன்கண் அளப்பில கேட்க
விழைந்தனென்

**சாணக்** : விருடல வேண்டின கேட்டி,
இதன்கண் எமக்கும் இயம்புவ பலவுள.

**அரசன்** : *கேடனைத் திற்கும், கேதுவே காரணன்*
என்பதை அறிந்தும் எவன்நீர் அவனை
தலைநகர் நின்றும் தப்ப விட்டனிர்?

**சாணக்** : அவன்றான் தப்பிய அமையேம் எனினே,
இரண்டு வழியே இதன்கண் நமக்குள.
ஒன்றே ஒறுத்தல்: இரண்டே இவற்கென
முன்னர் மொழிந்த வாக்கின் வண்ணம்
அரசிற் பாதியை அளித்து மகிழ்தல்
ஒறுத்தன மென்னின்,
நன்றி மறந்த நம்மா லேயே
மன்னவன் பர்வதன் மாய்க்கப் பெற்றனன்
என்னுங் கருத்தினுக் கிடங்கொடுத் திடுவம்.
அரைசிற் பாதி அளித்தன மெனினே,
பர்வத வேந்தனைப் படுகொலை புரிந்த
நன்றியில் பாவமே நமக்குப்'பயனாம்.
ஆகலின் அவனைத் தப்ப விட்டனம்.

**அரசன்** : அதுவே காரண மாயின் ஆரியர்
இந்நகர் இருந்த இராக்கத அமைச்சனை
வெளிவிட் டமைக்கு விள்ளும் பயனென்?

**சாணக்** : தலைவ ரிடத்தில் தளரா அன்பும்
ஒரேஎ இடத்தில் உறைதலும் இரண்டும்
உளதால் இராக்க தன் ஒழுக்கம் உணர்ந்து
நந்தரை விரும்பும் நகர மாந்தரால்
*விரும்பப் பெற்றனன். விழுப்புலம், ஆண்மை,*
*பெருந்திரு, துணைவலி பெற்றவன் ஆதலின்,*
இந்நக ரின்கண் இனிதின் வதிந்து

உட்கல கத்தை உண்டாக் குவன் நாம்
புறத்தே விடுதலால் புரட்சியை விளைப்பினும்
அரிய விரகினால் அகப்படுத் தலும்ஆம்.
இங்கவன் இருந்திடின், மற்றவன் நமக்கு
இதயத் தேறிய இருஞ்செறும் பென்னவே
எண்ணி எடுத்தனம் எறிந்தனம் புறத்தே.

**அரசன்** : ஆரிய அவனைச் சூழ்ந்தேன் பிடித்திலிர்?

**சாணக்** : *இராக்கத னலனோ? எவனென் றெண்ணினை?*
வலாற்கா ரத்தான் வயமிகு அமைச்சனைப்
பிடித்தன மென்னிற் பொன்றும் நின்படை.
இராக்கதன் தானும் இறப்பினு மிறப்பன்.
இவ்விரு செயலும் இறப்பத் தீயவே.
உதுக்காண்,
வலியப் பிடித்தலால் வல்லுயிர் இழப்பனேல்
விருடல, இழந்தனை வன்மதி அமைச்சனை.
நம்படைத் தலைவரை அழித்தனன் எனினே
அதுவும் பீழை; ஆகலின் அவனைக்
காடுறை களிற்றினைக் கருதரு சூழ்ச்சியாற்
பற்றுவ தென்னப் பற்றலே தகுசெயல்!

**அரசன்** : ஆரியக் குரிசிலை அத்தகு பேச்சில்
வெல்ல வல்லேம் அல்லேம் எனினும்
அதனாற் போந்தது "அமைச்சன் இராக்கதன்
*எல்லா வகையினும் எண்ணுறு புகழ்ச்சிக்*
*குரியன்* என்பது வேயாம் உண்மையில்.

**சாணக்** : (சினத்துடன்)
'நீயலை' என்பதே நின்ற தெஞ்சியே.
இராக்கதன் செய்தது யாதோ விருடல?

**அரசன்** : கேட்டிர், கிளப்பன்; கெடலரு பெரியோன்
அவனே வென்ற அணிநகர் விழைவின்
வண்ணமே வதிந்தனன்; நந்தங் கழுத்தினிற்
காலை வைத்தனன்; கருதரு நம்படை
வெற்றி முழக்கினுக் கின்னல் விளைத்தனன்.
விரிந்தே ஆழ்ந்த நயம்பல ஏவி
மருட்கை விளைத்தனன்; மாண்ட மதியினர்
நமரை நாமே நம்பா வண்ணம்
நடலை இழைத்தனன் நவின்றென் பலவே.

**சாணக்** : (சிரித்து)
இவ்வள வேயோ இராக்கதன் செய்தது?

நந்தரைப் போல நின்னை யொழித்தே
உன்னைப் போலவே உறுவலிக்' கேதுவை
அரசர்க் கரசாய் ஆக்கினன் எனவே
எண்ணி யிருந்தனென் எனாது விருடல.

**அரசன்** : எவனோ ஒருவன் இதனை இயற்றினன்!
ஆரியர்க் கதன்கண் அமைந்த தொடர்பென்?

**சாணக்** : பெரியோர் பெருஞ்செயல் பேணா மன்ன!
அகத்துள சினத்தீ அறவே மேலெழத்
துள்ளித் துள்ளித் துடிக்கும் விரலால்
*உச்சிக் குடுமியை உருவி உதறி,*
அங்குள அனைவரும் அஞ்சியே கேட்ப
''நந்தர் குலத்தினை நான்மாய்த் திடுவல்''
என்றோர் இயம்பரு *வஞ்சினங் கழறி,*
இராக்கத வமைச்சன் இருவிழி காணத்
தொண்ணூற் றொன்பது நூறு கோடிப்
பொற்கா சுகளைப் பொருந்திய தலைவர்
*ஒன்பான் நந்தரை ஒருவர் ஒருவராய்க்*
*காட்டுமா வென்ன வீட்டிய வீரன்*
*எவனவன் என்றே* இயம்பிடு எனக்கே.

மேலும்,

திக்கெலாம் கருமுகில் நக்குவ தென்னத்
தொல்கதிர்ப் பரிதியின் வில்லிடு கிரணம்
கழுகுப் புகையாற் கரந்தன வாகி
அகலார் விசும்பினிற் பறந்தே, அசையாச்
சிறகர் விரித்தே வட்டமிட் டிருப்ப
இறைச்சி நசையால் இடுகாட் டின்கண்
இங்கும் அங்கும் எண்ணில் விலங்குகள்
உலந்த நந்தரின் உடல்வழி உருகிப்
பெருகி யோடிய அருங்கொழுப் புண்ண
உவப்புடன் உலவித் திரிவதைக் காண்டி,
ஈதோ ஈமத் தீயே
அவிந்தில தின்னும் ஆர்ப்புட னெரிமே.

**அரசன்** : எவனோ ஒருவன் இதனை இயற்றினன்.

**சாணக்** : எவனே இதனை இயற்றினன் சொல்லாய்?

**அரசன்** : நந்தரை முனிந்த நண்ணரு விதியே.

**சாணக்** : கல்லார் சொல்வர் பொல்லா விதியென.

**அரசன்** : கற்றோர் வியவார் கனவினுந் தம்மை.

**சாணக்** : (சினத்துடன்) ஏவல னென்றா ஏறுகின் றனைநீ?
கட்டிய குடுமியைத் தட்டவெ ழுங்கரம்!

(தரையினைக் காலால் ஓங்கி உதைத்து)

காலும் விரையும் கடுவஞ் சினஞ்சொல
நந்தரை முருக்கிய நவிலரு கடுஞ்சினம்
அவிந்த தேனும் அடல்கெழு விதியால்
மீட்டும் மேலெழ *மூட்டினை சினத்தீ.*

**அரசன்** : (தன்னுளே பெரிதும் அஞ்சி)
அந்தோ ஆரியர் சினந்தார் உண்மையில்!
சேர்ந்தது சினமே; சுழன்றது விழியும்.
இமைவழி வார்ந்தன இன்னீர்த் துளிதாம்
மண்ணின கண்ணினை; மங்கிய தொளியே.
புருவத் துடிப்பெனும் புகைதான் எழலாற்
செங்கன லொளியெனச் சிவந்தது கண்ணே.

உருத்திரன் அந்நாள் ஓங்கி ஆடிய
உருகெழு நடந்தரு உருத்திரச் சுவையினை
உன்னச் செயுமிது நன்னர் எனவே
உள்ளும் நிலமகள் உருமார் ஆரியர்
உருத்தடி வைப்பால் உளதாம் நடுக்கினை
ஏற்றனள் அரிதின் எனவே எண்ணுவன்.

**சாணக்** : (தன் போலிச் சினத்தை அடக்கி)
விருடல விருடல வீண்மொழி போதும்.
எம்மிற் பெரியன் இராக்கதன் எனினே
ஈதோ இவ்வாள் இராக்கதன் கைக்கொடு.

(வாளை எறிந்து விசும்பினை நோக்கித் தனக்குள்)

இராக்கத இராக்கத இது தான் உன்னுடைக்
கவுடிலி யனைவெலும் கருதரு புலவரை,
கயவ, சாணக் கியன்கண் நழுவிய
அன்புடை மோரிய அரசனை, இனிதின்
இன்னே வெல்வல் எனநீ யேவிய
பேதச் செயல்தான் பெரிதும் உனக்கே
பழியினை விளைத்துப் பரிபவந் தருமால்!

(சாணக்கியன் போகின்றான்)

**அரசன்** : வைகீ நரனே வருக. 'ஆரிய
சாணக் கியனின் சார்பே யின்றிச்
சந்திர குப்தன் தன்திறத் தாலே

இன்று தொடங்கி இயற்றுவன் ஆட்சியை
என்று குடிகட் கின்னே உணர்த்துக.

**கஞ்சுகி** : (தனக்குள்)
'ஆரிய சாணக் கியரெ'ன அழையார்
அடைமொழி யின்றிச் 'சாணக் கியரென'
அறைந்தனர் வேந்தர். அந்தோ ஆணை
இழந்தனன் அமைச்சன்; இத்திறத் தின்கண்
*அரசன் பிழைத்தற் கமைச்சனே காரணன்.*
*மதமா பாகன் குறைவாற் பழிப்புறும்.*

**அரசன்** : ஆரிய ஆய்வதென்?

**கஞ்சுகி** : 'ஒன்றும் இல்லை.
இன்றே இறைவர் ஆனீா பேற்றால்.
(என்று கூறிச் செல்லுகின்றான்)

**அரசன்** : (தனக்குள்)
இங்ஙனம் நம்மை ஏதிலர் கருதலால்
வெற்றியைத் தமது வினையில் விரும்பும்
ஆரியர் குரிசிலும் அடைக அதனை.

(வெளிப்படையாய்)

பயனில் கலகம் இதனால் பயன் தலை
வலியெனை நனிமிக வருத்தலே காண்டி.
சோணோத் தரையே, வல்லே
பள்ளி யறைக்குப் பரிவுட னுய்த்தியே.

**வா. காப்** : வருக மன்னவ வருகவிவ் வழியே.

**அரசன்** : (இருக்கையி னெழுந்து தனக்குள்)
ஆரியர் குரிசில் ஆணையின் ஆறே
அவர்தமை அறவே அவமதித் தாலும்,
நாணத் தாலே நன்னிலக் கமருட்
கரந்துறை தலையே கருதும் என்மதி.
உறுதி நோக்கின் உறுமதிக் குரவரை
மீறுநர் மனத்தை நாணம்
பிளவா திருத்தல் பெரிதும் வியப்பே!

(அனைவரும் போகின்றனர்)

**மூன்றாம் அங்கம் போலிக் கலகம் முற்றும்.**



# நான்காம் அங்கம்

## இராக்கதன் ஆள்வினை

(வழிப்போக்கன் வேடம்பூண்ட ஒருவன் வருகின்றான்)

**வழிப்போக்கன் :** என்னே வியப்பு! எவன்தான் தலைவ
ராணை அறப்பெரி தின்றேல், அதற்கமை
காரணந் தானும் கனத்தது வின்றேல்,
நூற்றின் விஞ்சிய யோசனை நெறியைக்
களைப்பே யின்றிக் கடந்து செல்வன்?
ஈதோ இராக்கத அமைச்ச ரில்லம்
ஏகுவல் (களைத்தவன்போல் நடந்து) புறங்கடைபுரப்போர்
(எவரே?)
''வாய்தலில் வந்துளன் வளமார் பாடலி
நகரத் திருந்தே நம்பன் கரபகன்''
என்றே அறிவித் திடுமின்
இராக்கத அமைச்சரை இன்னே சென்றே.

**வாயிற் காப்போன் :** (புகுந்து)

நல்லோய், மெல்ல - மெல்லப் பேசுதி.
அமைச்சர் அரசியற் பணியின் கவற்சியால்
கண்டுயி லின்றிக் கடுந்தலை வலியாற்
படுக்கைவிட் டிலரினும்; பொறுபொறு மூர்த்தம்.
வாய்ப்பினை நோக்கிநின் வருகையைத் தெரிப்பல்.

**வழிப் :** நல்லோய், அங்ஙனம் செய்க நலதே.

(இராக்கதன் தன் படுக்கையறையின்கண்ணுள்ள இருக்கை ஒன்றனுள் கவற்சி நிறைந்த உளத்தனாய் வீற்றிருப்ப, அவனருகில் சகடதாஸனும் இருக்கின்றனன்)

**இராக்கதன் :** (தனக்குள்)
வினைத்தொடக் கத்தே விளைந்த விதியின்
முரணார் செயலை மனத்துக் கருதியும்,
கவுடிலி யன்றன் கருஞ்செயல் குறித்தும்,
யான்செய் செயல்கள் யாவும் வீணா

யினமை யாங்ஙன மென்னக் கருதிக்
கண்துயி லின்றிக் கழிந்தது கங்குல்.

அன்றியும்,

கருதிய வினைதான் கடைபோ தற்காச்
சூழ்ச்சிச் சிறுவிதை முதற்கண் வித்தியும்,
வித்திய வித்தின் வளர்ச்சி விழைந்தும்,
நாறிய வித்தின் நனிபல . பனை
மறைவாய் எழுப்பியும், மதியாற் சூழ்ந்தும்,
சிதறிய பயன்களைச் சேர்த்தொன் றாக்கியும்,
*நாடகா சிரியனும், நம்போல் வானும்,*
*இத்தகு இன்னற் குரிய ராவரே.*
சாணக் கியனெனும் சால்பிலாக் கொடியன்............

**வாயிற்** : (புகுந்து)
வெல்க!

**இராக்கதன்** : அடைவெனே மாற்றம்!

**வாயிற்** : அமைச்சர்!

**இராக்கதன்** : (இடக்கண் துடிக்கத் தனக்குள்)
வழங்கிய உரைக்கண் வாக்கின் செல்வி
இருந்தனள் விடுத்த இன்னா விரிச்சியும்,
இடக்கண் துடித்தலும், இயைந்தே தம்முள்
கெடுமதிச் சாணக் கியனே வெல்வன்;
அடைவன் அமைச்சன் ஏமாற் றத்தினை''
என்றன எனினும், ஒழியேன் முயற்சி.

(வெளிப்படையாய்)

நல்லோய் உரைசில நவில விழைதியோ?

**வாயிற்** : அமைச்ச, கரபகன் அடைந்தனன் வாய்தலில்.

**இராக்கதன்** : *பொள்ளெனப்* புகவிடு ...........

**வாயிற்** : அமைச்சர் ஆணை.

(வெளிப்போந்து கரபகனைக் கிட்டி)

அன்ப, அமைச்சரை அடைதி வல்லே.

(போகின்றான்)

**கரபகன்** : (நெருங்கி)
அமைச்சர் வெல்க.

**இராக்கதன்** : அன்ப, இருத்தி.

**கரபகன்** : அமைச்சர் ஆணை (தரையில் இருக்கின்றான்)

**இராக்கதன்** : (தனக்குள்) அன்பன் இவனை
எப்பணி குறித்துப் போக்கினம் முன்னர்?
என்ன எண்ணியும் எண்ணில் பணியால்
எனக்கிது நினைவிலை, எண்ணுவன் இன்னும்.

(ஆழ்ந்த கருத்துடன் இருக்கின்றான்)

(பிரப்பங் கோலுங் கையுமாய் இன்னொருவன் உட்புகுந்து)

வழிவழி, அப்பால்! வந்தனர்! அகல்மின்
சேய்மை; மக்காள், சேய்மை! கண்டிலிர்?
பொன்மலை மேருவிற் பொருந்திய தேவர்
போன்ற நற்குலம் பொறுக்கும் வேந்தரை
நற்பே றில்லார் நோக்கலும் அரிதால்;
அகல்க அனைவரும் அப்பால் வல்லே.

(வானத்தை நோக்கி)

சான்றீர், சாற்றிய செய்தி யாது?
வழிசெயற் காரணம் வினவினிர்; வலிப்பல்.
மாண்ட மாந்தீர், மன்னிளங் குமரன்
மலய கேதுவின் மதிவல் லமைச்சன்
தலைவலி யாலே தாங்கருந் துன்பம்
உற்றனன் என்ன உழையோர் உரைப்பக்,
காண்டல் கருதிக், கடும்புடன் இவ்வழி
வல்லே வருகின் றமையான், நும்மை
விலகுமின் சிறிதென, வேண்டினென் யானும்.

(மலயகேதுவும் பாகுராயணனும் கஞ்சுகி சூழ வருகின்றனர்)

**மலயகேது** : (தனக்குள் பெருமூச்சுவிட்டு)
எந்தை இறந்தார். பத்துத் திங்கள்
இன்றொடு கழிந்தன. யானும் செருக்கால்
எந்தைக் கீந்திலன் எட்புனல் இன்னும்.
என்றன் தாயர் எழிலார் மார்பம்
ஒச்சிப் புடைத்தனர்; உதிர்ந்தன வளைகள்;
மேலா டையெலாம் நழுவி வீழ்ந்தன;
கருங்குழன் மீமிசைக் கப்பின பூழி,
ஆ ஆ என்றே அலறிக் கூவுந்
துயர்நிலை யதனைத் துன்னார் மாதர்க்
கீந்த பின்னரே எள்ளும் புனலும்
எந்தைக் குரியன. .......... என்றொரு வஞ்சினம்

இயம்பினென் அந்நாள். இயம்பலென் பலவுரை?
என்றன் அன்புடைத் தாயரின் அவலக்
கண்ணீர் மாற்றிக் கடிதினிற் றுடைத்தே
பகைவரின் பன்னியர் பரந்த விழிகளிற்
கண்ணீர் பொழியக் கண்ணுவன் ஒருவினை,
அன்றேல், ஆண்மை வீரர் நெறியினை
விழைந்த எந்தைபோல் வீடுவன் போர்க்களம்.

(வெளிப்படையாய்)

ஆரிய ஜாஜலி, அறைமின்........., என்பின்
வந்திடும் மனர்க்குத் தந்தவென் னுரையால்.
தனித்துச் சென்றே தனிக்கலை அமைச்சரை
எதிர்பா ராத எனாது வருகையால்
மகிழ்ச்சியை விளைப்பென். நடைத்துயர் அவர்க்கேன்?

**கஞ்சுகி** : அங்ஙனம் செய்வல். (வறிதே நடந்து வானினை நோக்கி)
அடலார் அரசீர்,
உம்முள் எவரும் உறுவலிக் குமரனைச்
சூழ்வரல் வேண்டா; சொல்லினென் ஆணை.

(பார்த்து மகிழ்ந்து)

மன்னிளங் குமரன் மலய கேதுவின்
மாபெரும் ஆணையால், மன்னர் மீண்டனர்.
மன்னர் சிலர்தாம் மாண்ட கலினம்
சிவுக்கென இழுக்கச், செவ்வே உயர்த்திய
தலைகளைப் பெரிதும் தாழ்த்தன தரைமிசை.
நிலத்தையும் புடைத்தன நோன்றாள் குரங்கொடு.
விசைதடை படலால், விளங்கிய மணியொலி
அடங்கிய களிற்றின் ஆர் தரு மன்னர்
திரும்பிச் சென்றனர். சிலரே நீலக்
கடலெனக் கடந்திலர் எல்லையை நின்றனர்.

**மலயகேது** : ஆரிய ஜாஜலி, அடைந்தார் தம்மொடு
திரும்பிச் சென்மின்; திருந்திய நண்பன்
பாகுரா யணனே பரிந்தெனைத் தொடர்க.

**கஞ்சுகி** : அங்ஙனம் குமர, ஆணையால் மீள்வன்.

(உழையருடன் போகின்றான்)

**மலயகேது** : பாகு ராயண, பகரக் கேண்மோ.
பத்திர படனும் பிறரும் இவணுறு
காலை, கருதிக் கூறிய மொழியிது:

''இராக்கத அமைச்சன் இன்னருட் டுணைக்கொடு
மன்னிளங் குமரர் நும்மிடைப் பணிசெயல்
ஒல்லேம். ஆயினும், ஓங்கிய புகழுறு
சேனைத் தலைவன் சீரிய சிகரகன்
துணையால், துன்மதிச் சாணக் கியனை
விலக்கிய மோரிய வேந்தொடு முரணி,
உயர்பண் புகளால் உறுதல் அரிய
அரசிளங் கோநுமக் காட்செய விழைந்தேம்''
நெடிதே நினைத்தும், நீளச் சூழ்ந்தும்,
உரைத்த மொழியின் உட்பொரு ளுணரேம்.

**பாகுராய** : அம்மொழிப் பொருள்தாம் அரியன அல்ல.
வேறற் கருத்தும், விளங்குநல் லியல்பும்
உடைய தலைவனை உற்ற நட்பும்,
அன்பும் மல்கிய ஆளின் வாயிலாய்
அடைதல் ஆரும் அவாவிச் செய்வர்.

**மலயகேது** : பாகு ராயண, பயங்கெழு நண்ப,
இராக்கதன் நமக்கு நண்பன் அல்லனோ?

**பாகுராய** : ஆமாம்; ஆயினும் *அமைச்ச னிராக்கதன்*
சாணக் கியனைச் சாலப் பகைத்தனன்
*அன்றிச் சந்திர குப்தனை அன்றே?*
அதனால், மோரியன் ஆரியக் குடிலனின்
செயல்களைப் பொறாதே செயிர்த்தால், அமைச்சுப்
பதவியி னின்றும் நீக்கிடின் நந்தர்
குலத்துள பற்றினால், கூறிய நந்தர்
மருக னாதலின், மாபெரு நண்பர்
தம்மினும், இராக்கதன் தணிப்பில் ஒளிகெழு
மோரிய னேடு முற்றிய நட்பினை
விழைவன்; விழையின் வேந்தன் மோரியன்
''எந்தை மந்திரி இணையிலா இராக்கதன்''
என்னுங் கருத்தால் ஏற்குவன் நட்பினை,
அங்ஙன மாயின் அரசிளங் குமர,
பத்திர படனொடு பிறரை நீயிர்
நம்ப கில்லீர்; நவின்ற மொழிப்பொருள்
இதுவே யன்றி இயம்பவே நிலையே.

**மலயகேது** : ஆயின் அமையும்; அமைச்ச னிராக்கதன்
இல்லினுக் கேகும் நல்வழி காண்பி.

**பாகுராய** : இவ்வழி, குமர, இவ்வழி வருதி.

(இருவரும் நடக்கின்றனர்)

**பாகுராய** : இராக்கதர் இல்லிது; இதனுட் புகுதுக.

**மலயகேது** : இன்னே புகுவென் இராக்கதர்க் காண.

**இராக்கதன்** : ஆமாம் அறிந்தேன். (வெளிப்படையாய்) அன்புடை [நண்ப

தனகல சனைநீ தனமலி நம்நகர்ப்
பாடலி மறுகினிற் பார்த்தனை கொல்லோ?

**ஏவலன்** : கண்டனென் அமைச்ச, கலசனைக் கண்டனென்.

**மலயகேது** : (கேட்டு)
பாகு ராயணா, பாடலி புரத்துச்

செய்திகள் பேசுவர், சேரல் வேண்டா.
இங்கொரு மறைவினில் இருந்தே கேட்குவம்.

என்னெனின்,

அமைச்ச ராவார் அரசர் முன் அவர்
மனவலி குறையும் எனவே அஞ்சி
ஒருவகை யாக ஓர்ந்தே பேசுவர்.
அரச ரில்வழி, அவர்தாம் பேசும்
வெளிப்படைப் பேச்சினில் உண்மை விளங்கும்.

**பாகுராய** : அரசிளங் குமரர் ஆணைப் படியே.

**இராக்கதன்** : நல்லோய், அப்பணி நனிமுற் றியதோ?

**கரபகன்** : அமைச்சர் அருளால் அனைத்தும் வெற்றியே.

**மலயகேது** : நவின்ற செய்தி யாது? நண்ப.

**பகுராய** : அமைச்சர் வினைதாம் அறப்பரந் தனவால்.
இதுவென அறிதல் எவர்க்கும் அரிதாம்.
இருந்தனிர் கேட்டிர் இம்மியும் விடாதே.

**இராக்கதன்** : அவையெலாங் கேட்க அவாவுவன் பெரிதும்.

**கரபகன்** : அமைச்சர் கேட்க : அந்நாள் நீயிர்
என்னை நோக்கி ''கரபக, இன்னே
பாடலி புரத்தினைப் பரிவுடன் வல்லே
அடைந்தனை ஆண்டுள அன்புடை நண்பன்
தனகல சன்எ னும் வைதா ளிகனை
'அரசர் ஆணையை அமைச்சன் ஏற்றிலன்'
என்றொரு தலைக்கீ டியம்பி, இறைவன்
சந்திர வேந்தன் சாணக் கியனை

வெறுக்க வல்ல வெய்ய பாட்டினைப்
பாடிப் பகைத்தீப் பற்றி எரியச்
செய்வி என்றனிர்'' செய்தனென் ஆணையால்.

**இராக்கதன்** : நல்லோய், அதன்மேல் நவிலுதி நன்னர்.

**கரபகன்** : அமைச்சர் ஆணையால் அப்பதி மேவித்
தனகல சற்குத் தெரித்தனன் செய்தியை.
அப்போ தாங்கண் அணிநகர் மக்கள்
நந்தர் மறைவால் நனிவருந் தினரென
அவர்தம் மகிழ்ச்சி அளவில பெருகக்
'கவுமுதி விழவினைக் களிப்புடன் எடுக்க'
என்றே ஆணை இட்டனன் ஏந்தல்.
அதனைக் கேட்ட அப்பதி மாந்தர்
மகிழ்ச்சிக் கடலில் மூழ்கித் திளைத்தனர்.

**இராக்கதன்** : (கண்ணீர் வார்ந்து)
ஆஆ நந்த, ஆருயிர் இறைவ,
அல்லியை அலர்த்தும் சந்திரன் இருப்பினும்
அவனியை அளிக்கும் அரச மதியாம்
நீயிர் இலாதே நிரம்புமோ விழவே?

**கரபகன்** : மக்கள் கண்களி கௌமுதி விழவினைச்
சந்திரன் விழைந்தும், சாணக் கியன்தான்
கெடுமதி யாலே கெடுத்தனன் தடுத்தான்.
தனகல சன்எனும் தகுதி யாளன்
இதுதான் சமயம் எனவே பாட்டினைப்
பாடினன், பொங்கினன் பார்த்திவன் சினத்தால்.

**இராக்கதன்** : பாடல் எவையெவை? பகர்தி வல்லே.

**கரபகன்** : ('மன்னர் மன்ன மன்னருள் முன்னவ' முதலான
வைதாளிகப் பாடல்களைப் படிக்கின்றனன்)

**இராக்கதன்** : (மகிழ்ச்சியுடன்)
நன்று நன்று நற்றன கலச,
பருவம் நோக்கி வித்திய பகைவிதை
விரும்பிய பயனை விளைத்ததில் வியப்பென்?
கல்லா மனிதனும் களிதரு விழவினுக்
கின்னல் விளைக்க இறையும் பொறானெனின்
ஒளிகெழு வேந்தன் பொறுப்பனோ ஒருகணம்?

**மலயகேது** : அனைத்தும் உண்மை.

**இராக்கதன்** : அதன்பின் அதன்பின்?

**கரபகன்** : சந்திர குப்தன் சார்தரு குடிலனை
எரியெழச் சினந்தே ஏத்தினன் நும்மை.
ஆணை மறுத்த ஆரியக் குடிலனைப்
பதவி நீக்கிப் பரிபவஞ் செய்தனன்.

**மலயகேது** : பாகு ராயண, புகழ்ந்த மொழியால்
சந்திர குப்தன், மந்திரி யிராக்கதன்
மீது வைத்துள விஞ்சிய அன்பு
விளங்கிற் றன்றோ?

**பாகுராயணன் :** விளங்கினும் சந்திரன்
புகழ்ச்சியா லன்று; புந்திக் குடிலன்
நிலையிழந் ததனால். நினைக்க வேறிலை.

**இராக்கதன்** : கௌமுதி விழவினைக் கெடுத்தனன் என்றோ,
வேறொரு வினையை வெறுப்பச் செய்தனன்
என்றோ, எதனால் ஏந்தல் குடிலனைக்
காய்ந்தனன்? கரபக, கருதிக் கூறுக.

**மலயகேது** : நண்ப, நரபதி சினத்திற் கேது
பிறிதொன் றுண்டேற் பேசுக என்றே
இராக்கதன் கேட்டல் எப்பயன் கருதி?

**பாகு** : மன்னிளங் குமர, மதிமாண் குடிலன்
சந்திர மன்னனின் சாற்றரு சினத்தைக்
காரண மின்றிக் கனவிலும் எழுப்பான்.
நன்றி மறவா நல்லியல் மன்னன்
மறந்தும் மந்திரி ஆணையை மீறான்.
இங்ஙனம் இருப்ப, இதனினும் நல்ல
காரணம் உண்டெனின் காவலன் கொண்ட
பகைநனி வேர்க்கொளும் எனக்கரு தினனே.

**கரபகன்** : ஆமாம் அமைச்ச அறைகுவென், பிறிதொரு
காரணம் உளதே காவலன் சினக்க,
மன்னிளங் குமரன் மலய கேதுவும்,
இரும்புல அமைச்சன் இராக்கதக் குரிசிலும்,
நகரி னின்றும் நழுவுங் காலை
ஒன்றுஞ் செயாமல் ஒய்ந்திருந் தானாம்!

**இராக்கதன்** : (மகிழ்ச்சியுடன்)
சகட தாஸ சாற்றுவென் கேட்டி.
சந்திர குப்தன் சிக்கினன் என்கையில்.
சந்தன தாஸனும் பந்தனம் நீங்குவன்.
மனைவியை மகனுடன் மேவுவை நீயும்.

**மலயகேது** : ‘என்கையில்’ என்றதன் பொருள்தான் யாது?

**பாகுராயணன் :** பொருளென்? சாணக் கியனைப் பிரிந்த
சந்திர குப்தனைக் கைதூக் குவதே
பொருந்திய பணியெனக் கருதினன் அமைச்சன்.

**இராக்கதன்** : நல்லோய், பதவி நீத்த ஆரியன்
இப்போ தெங்குளன்? இயம்புக இனிதே.

**கரபகன்** : பாடலி புரத்தில்!

**இராக்கதன்** : (பரபரப்புடன்) பாடலி புரத்திலா?
தவவனம் சென்றிலன்? தாவா வஞ்சினம்
மீட்டும் உரைத்திலன்?

**கரபகன்** : மீள்வன் தவவனம்
என்றே அமைச்ச எனக்கொரு செய்தி
செவிப்பட் டதுவால்.

**இராக்கதன்** : சகட தாஸ,
சாற்றிய செய்தி நன்றிலை காண்டி
இயம்பரு செருக்கின னிச்சா ணக்கியன்
மாநில இந்திரர் நந்த மன்னரின்
இருக்கை விலக்கின் இழிவினைப் பொறானெனின்,
தன்னால் அரசினைப் பெற்ற சந்திரன்
இழிவினைச் செய்ய, எங்ஙனம் பொறுப்பன்?

**மலயகேது** : வனமே குறுகினும், வஞ்சினங் கூறினும்,
கூடிய தொன்றிலை குறித்திடு தற்கே.

**பாகுராயணன் :** இதன்பொருள் அறிதல் இறப்ப எளிதால்.
சாணக் கியன்றான் சந்திர வேந்தனை
நீங்குந் தோறும் நீங்குத் தோறும்,
இழந்த பதவியை இனிதிற் பெறுதலால்,
கருதிய வினைதான் கைகூ டப்பெறும்.

**இராக்கதன்** : வே ாய் எண்ணலிர் வெளிப்படை இதுதான்.
அமைச்சர் பெரும, ஆய்மின் இதனை.
வில்லிடு மணிமுடி வேந்தர் சென்னியில்
அடியிடு மோரியன் அன்பார் மக்கள்
ஆற்றிய ஆணைப் பிறழ்வினை இறையும்
ஆற்றான். ஆரியக் குடிலன் சினவினும்,
அந்நாள் அறைந்த அழிவினை மந்திரத்
துன்பினை அறிவான். விதியார் துணையால்
விளம்பிய வஞ்சினம் வென்றவன் மீட்டொரு
வஞ்சினங் கூறான் வழுக்கினை அஞ்சியே.

**இராக்கதன்** : சகட தாஸ, சாற்றிய துண்மை
கரபகன் களைப்பினைக் களையப் போதி.

**சகடதா** : அமைச்சர் ஆணை ஆற்றச் சமைவல்.

(கரபகனோடு போகின்றான்)

**இராக்கதன்** : காவலன் கான்முளை காண விழைந்தனென்?

**மலயகேது** : (முன்னே சென்று)
அமைச்சர் பெரும, அடைந்தனன் யானே.

**இராக்கதன்** : (மகிழ்வுடன் கண்டு)
ஆஆ இஃதென் அரசிளங் குமரர்!

(இருக்கையின் எழுந்து)

ஈதோ இருக்கை, இனிதின் இருத்திர்.

**மலயகேது** : இருந்தேன். நீயிரும் இருத்திர் இருக்கையில்.

(இருவரும் அவரவர் இருக்கையில் இருக்கின்றனர்)

பொறுக்கரு தலைவலி போயிற் றிலையோ?

**இராக்கதன்** : மன்னிளங் குமரர் மன்ன ராயிடின்
அன்றி, அவ்வலி அகலுமோ வறிதும்?

**மலயகேது** : ஆரிய அமைச்சர் அப்பணி நிற்பின்
அரசும் எய்தும் அங்கையின் மன்ற.
எண்ணில் படைகளை எங்கும் கூட்டி
ஏதிலர்க் கெஞ்சா இன்னல் விளைக்க
எத்தனை காலம் ஏங்கி யிருப்பேம்?

**இராக்கதன்** : காலங் கழித்தல் கவலைக் கிடனே.
இன்னே எழுமின், ஏன்பா ணித்தல்?
அடங்கலர் அழிவர்; அடுக்கும் வெற்றியும்.

**மலயகேது** : அமைச்ச ரேறே, அடங்கலர் திறத்துத்
தீங்கு நிகழ்ச்சியைத் தெரிந்தனிர் கொல்லோ!

**இராக்கதன்** : அறிந்தனன். அதுதான் ............

**மலயகேது** : அறைதிர் யாதென?

**இராக்கதன்** : அமைச்சன் இன்மையே; அதனின் வேறெது?
சாணக் கியற்குச் சந்திரன் சேயன்!

**மலயகேது** : அமைச்ச னிலாமை ஆகுமோ தீங்கென?

**இராக்கதன்** : ஏனை வேந்தர்க் கொருகால் இத்தகை
அமைச்சின் இன்மை இன்மையே யில்லை.
ஆயின் சந்திரர்க் கப்படி யன்று.

**மலயகேது** : அற்றன் றாரிய, சாணக் கியனார்
ஆற்றிய குற்றமே அரசற் சார்பினர்
வெறுப்பினுக் கடிப்படை. வினைவல குடிலனும்
பதவி நீங்கினன். பண்டே முற்றிய
அன்பினர் இன்னமும் அரசனை விழைவர்.

**இராக்கதன்** : அற்றன் றதுதான் அரசிளங் குமர,
நந்தரின் அன்பினர்--சந்திரற் சார்ந்தோர்
எனவிரு திறத்தர். ஏழினகர் மாந்தர்
சாணக் கியனின் சால்பில் செயல்கள்
சந்திர குப்தனைச் சார்ந்த மக்களின்
மனத்தே மாபெரு வெறுப்பினை விளைத்தன
வன்றி, நந்தரை அண்டியோர்க் கிலையால்.
தந்தைய ரான நந்தரை அழித்தனன்
விருடல வேந்தன் வீணில் எனவே,
மக்கள் மனத்தொரு வெறுப்புவேர்க் கொளினும்,
சார்புவே றின்றிச் சார்ந்தனர் அவனை.
ஆகலின், அவரெலாம் அரசிளங் குமரரைப்
போன்ற பெறுவலிப் பொங்கரி ஒன்றனைப்
பகைவர்த் தேய்க்கப் பரிவுடன் பெறினே,
விருடலனைப் பிரிந்தே விரைவில் நும்மைச்
சார்ந்தே மகிழ்வர்;சான்ற கரியாய்
யாமே அமைகுவம்; யார்பிறர் இதற்கே?

**மலயகேது** : ஆரிய, அரசற் கமைச்சிலாக் குறைதான்
முதற்குறை யென்று முடிவினைச் செய்தே
முழங்குநம் படையினை முற்றுகை செய்ய
ஏவுத லன்றி, இயம்புதற் கான
பிறகா ரணங்கள் பெரும, உளவோ?

**இராக்கதன்** : இதுவே முதற்குறை? வேறொன் றெதற்கே?

**மலயகேது** : எங்ஙனம் முதற்குறை என்னுடை அமைச்ச?
நம்படை யெழினே நளிர்மதி வேந்தன்
நல்லவோர் அமைச்சனை நாடிக் கண்டே
அமைக்குவ னோதான்? அன்றி, அவனே
அப்பணி நிற்பின், ஆற்றலுக் கென்செயும்?

**இராக்கதன்** : ஆற்றல் இல்லை அணுவும் அவற்கே
தாமே பணிபுரி மன்னர்க் கென்னின்

இயையும் அதுவே: அவனென் செய்வான்?
சந்திர குப்தன் சற்றும் வலியிலன்
அமைச்சனைச் சார்ந்தே அரசா ளுதலின்
உலக நிகழ்ச்சியை உற்றுக் காணாப்
பிறவிக் குருடனைப் போன் றுளன் பெரிதும்.
தானே தன்னந் தனியனாய் நம்படை
தாங்குவ னென்றல் தகும்உரை அன்றே.
அரசாம் திருவே தன்னுடை அடிகளை
அரசன் மீதும் அமைச்சன் மிசையும்
ஒவ்வொன் றாக உறுத்திப் பொருத்துவள்.
அவர்தாம் அடலால் அறஉயர் காலை
மெல்லியல் ஆதலின் மிகுபொறை ஆற்றாள்
இருவருள் ஒருவரை இம்மென நீங்குவள்.
பாலினுக் காகத் தாய்முலை குதட்டும்
பச்சிளங் குழவியைப் பருமுலை நீங்கப்
பிரித்தல் போலப் பாரியல் அறியா ,
உலகியல் கல்லா-உல்காள் வேந்தன்
அமைச்சன் பாலே அனைத்தையும் விட்டபின்
அமைச்சனைப் பிரிந்தும் இருந்தனன் என்றால்
அரசாள் தகுதி அவற்கிலை இலையே.

**மலயகேது** : (தனக்குள்)
எனாது பணியினுக் கென்றும் அமைச்சரை
நாடி நிற்கிலேன் நற்பே றதனால்,

(வெளிப்படையாய்)

நீவிர் நவின்றது நேரிதே ஆயினும்
பகைவரைத் தாக்கப் பலகா ரணங்களுள்
அவர்தம் மிடையே அரும்பிய தீமை
ஒன்றனை நாடி ஒடுக்கப் புகுதலால்
விளையுமோ நமக்கு வெற்றி திண்ணமாய்?

**இராக்கதன்** : வெற்றி திண்ணம் வேந்தன் மகனே.

(என்னெனில்)

அடர்ப்போர் அளப்பில் படையுடை நீவிர்;
நன்னகர் மக்கள் நந்தரை விழைவர்;
பதவி நீங்கிப் போயினன் குடிலன்.
வழியினைக் காட்டும் வான்தொழி லன்றி
வேறொரு தொழிலிலா (தற்புகழ்ச்சி நாணி)யானும்
[நும்வயம்.
விருப்பமே வேண்டும் விழுப்பயன் எய்த.

**மலயகேது** : ஆரியர் அடங்கலர் மேலெழக் காலம்
இதுவெனக் கருதின், எதற்குத் தாமதம்?
உயரிய கரையிடை, ஒளிநீர் மிகையொடு,
பொசிநீர்ப் பெருக்கொடு, பொங்கிரு பாலும்
இருள்பொதி மரமொடு, இன்னொலி அலையொடு,
விரைவொடு இழிதலின் நிவர்கரை கரைத்திடு
சோணைப் பெயர்பெறு சோதியா றெனவே,
செஞ்சுணம் பூசிச், செவ்வே யோங்கி,
மதநீர் பெருக்கி, மழைநிறம் முற்றி,
பிளிற்றொலி எழுப்பிப், பிறங்கிய மருப்பாற்,
கரையினைக் குத்திக், களிப்புட னாடும்
ஆனைகள் அனைத்தும் ஆயிர மாக
விரைவினிற் சென்று, மொத்துக பகைவரை.

அன்றியும்,

கருவிக் கமஞ்சூற் கொண்டற் குமுறி,
ஒல்லென உரறி, இடித்தே யின்னீர்
பொழிந்தே, பொன்முடி விந்தஞ் சூழ்ந்த
தென்ன, வென்னுடை எழிலார் பத்திக்
களிறுகள் பிளிறிக், கனமத நீரின்
துளிகளைச் சிதறித், துன்னரு முகிற்குலம்
எனவே, முற்றுக எழிலார் நகரினை.

(மலயகேதுவும் பாகுராயணனும் போகின்றனர்)

**இராக்கதன்** : எவரெவர் அங்கே எமரென நின்றவர்?

**பிரியம்வதகன்** : (நுழைந்து) அடியேன், அமைச்சர் ஆணை கேட்பேன்.

**இராக்கதன்** : உளரோ சோதிடர் உரமார் வாய்தலின்?

**பிரியம்** : அமண வாண்டி ஆண்டுளன் அமைச்ச.

**இராக்கதன்** : (தீய நிமித்தங்கண்டு தனக்குள்)
முதற்கணே அமணன் முகத்தில் விழித்தல்!

**பிரியம்** : சீவ சித்தி சீர்சால் அமைச்ச.

**இராக்கதன்** : (வெளிப்படையாய்)
வெரூஉக் கொளா வேடமொடு தருக.

**பிரியம்** : அமைச்சர் ஆணை: அங்ஙனம் ஆகுக.

(போகின்றான்)

**அமணன்** : மாற்பிணி மருத்துவர் சமணர் மொழியினை

முந்திக் கேண்மின்; முதற்கண் கடுவாய்ப்
பின்னர்க் கட்டியாய்ப் பெருந்துணை செயுமே.

(அமைச்சனை நெருங்கி)

சாவக நோன்பினர்க் கறம் கைவருக.

**இராக்கதன்** : நண்ணலர் மேலெழ நல்ல நாளினைப்
பதந்த, பார்த்துப் பகர்தி நன்னர்.

**அமணன்** : சாவக, துணிந்தேன் சார்ந்த நாளினை.
பிற்பகல் வரைக்கும் பௌர்ணமி நாளாம்.
வடதிசை நின்று தென்திசை ஏகுவை.
நாளும் மீனும் நல்லன வல்ல.

ஆக்லின்,

பரிதி மறைந்தபின், பான்மதி எழுந்தபின்,
புதனுக் குரிய மிதுனத் தொடர்பில்
இராகுவும் கேதுவும் எழுந்து மறைந்ததும்,
போகிற் போகப் பொருந்தினை யென்னின்.

**இராக்கதன்** : பதந்த பார்த்தனை பொருந்தாப் பகலை.

**அமணன்** : சாவக, கேட்டி: சாற்றும் உரையினை.
நாளுக் கொருகுணம்; மீனெனின் நான்கே.
அறுபான் நான்கது ஆய்ந்த விலக்கினம்.
சோதிட நூலோர் சொன்ன முடிபிவை.

என்னெனின்,

புதனின் இலக்கினம் இனிதே திண்ணம்.
இல்லையென் றாலும் இன்மதித் துணையால்
எழுகின் றனையென எண்ணுதி யாயின்,
எஞ்சா வெற்றி இயைந்த துன்கையில்.

**இராக்கதன்** : பதந்த, கணியர் பிறரையும் பார்த்துக்
கலந்தனை சூழ்ந்து காண்டி முடிபினை.

**அமணன்** : நானென்? நீகல. நடப்பேன் ஈதோ.

**இராக்கதன்** : கோப மிலையே கொண்ட கொள்கையால்?

**அமணன்** : பதந்தன் சினவான் பணிவல் லமைச்ச.

**இராக்கதன்** : சினவாய் நீதான், சினந்தது யாது?

**அமணன்** : விதியார் வலியே; விட்டனை தமரை;

நட்டனை பிறரை. நானென் செயவே?

(அமணன் போகின்றான்)

**இராக்கதன்** : பிரியம் வதக, பேசுக போழ்தினை.

**பிரியம்வத** : மாண்ட பரிதி மலைமறை காலம்.

**இராக்கதன்** : (எழுந்து நோக்கி)
மாண்ட பரிதி மலைமறை காலம்!
ஆஆ இனியே,
ஒண்கதிர்ப் பரிதி உதய கிரிமிசைத்
தோன்றி வானெழத், தொன்மர இலைகள்
நிறமும் ஒளியும் நிறையும் பெற்றே,
நீளார் நிழலின் நல்லுருக் கொண்டே,
அன்பார் இளையர் முன்செல வென்ன,
அவன்முன் னெழுந்தே அறவும் நீளும்;-
பரிதி மண்டிலம் பிற்பகற் போழ்தினில்,
அத்த கிரியினை அடையுங் காலை,
தருநிழ லனைத்துந் திருமிப் பின்னிடுஞ்
செயலினை நோக்கின், செய்பணி யாளரின்
தலைவர் திருவால் தளருங் காலை,
அவரைத் தணந்தனர் அகறல் போன்மே.

(அனைவரும் போகின்றனர்)

**இராக்கதன் ஆள்வினையென்னும் நான்காம் அங்கம் முற்றும்.**



# ஐந்தாம் அங்கம்

## மறைபொருளெழுத்து

(இலச்சினையிட்ட முடங்கலையும் கலச்செப்பினையும் எடுத்துச் சித்தார்த்தன் வருகின்றான்.)

**சித்தார்த்** : என்னே வியப்பு! என்ன வியப்பே!
இடங்கா லமெனும் இருகுடந் தம்மால்
அறிவெனும் அருவிநீர் பெருக வார்த்த
சாணக் கியனின் நீதிக் கொடிதான்
காரியக் கனியைக் காட்டுங் காலம்.
ஆகலின், ஆரிய வமைச்சனால் முதற்கண்
வரைந்த வரிமிகு முடங்கலை-இராக்கத
வமைச்சன் முத்திரை அழுத்தி-அதுபோல்
கலச்செப் பொன்றனைக் கையில் தாங்கிப்
பாடலிப் பதிக்குப் பரிவுடன் செல்வேன்.

(சிறிது நடந்து நோக்கி)

அந்தோ, அதோஅவ் வமணன் எதிர்ந்தான்!
அவனைக் காண்டல் ஆகாச் சகுனம்!
எனினும் எனக்கிது எண்ணில் நன்மை.
விலகிடா வண்ணம் முயன்று செல்வேன்.

(அமணன் வருகின்றான்)

**அமணன்** : ஆழ்ந்த மதியாற், சூழ்ந்த செயலால்
சித்தியை அடையும் சித்தன் தொண்டர்ப்
பணிந்தனன் பன்முறை பரிவுடை மனத்தால்.

**சித்தார்த்** : பதந்த, வணங்கினன் சித்தார்த் தகன்யான்.

**அமணன்** : அன்புடைச் சாவகர்க் கறம்கை வருக.

(பார்த்து)

செயலினைக் குறித்துச் செல்கின் றனையோ?

**சித்தார்த்** : எங்ஙனம் அறிந்தாய் எனாது பதந்த?

**அமணன்** : அறிதற் கென்அதில்? ஆற்றின் உய்க்க
அமைந்தது சகுனம். அங்கை முடங்கலும்
அறியச் செய்தது. அறிந்தனன் யானும்.

**சித்தார்த்** : அறிந்தனை அறிந்தனை. அயல்நாட் டினுக்குச்
செல்லச் சமைந்தேன். செல்லும் இந்நாள்
நன்னா ளாவென நாடிச் சொல்லுதி.

**அமணன்** : (சிரித்து)
சாவக, முடித்தாய் சவரம்; முடித்தபின்
நாளினைக் கேட்பதால் நிரம்பிய தெதுவோ?

**சித்தார்த்** : கேட்டா லென்னை? கெட்டதொன் றிலையே.
சொல்ல வேண்டும். நல்ல நாளெனின்
நான்வழிக் கொள்வேன், நவையெனின் மீள்வேன்.

**அமணன்** : சாவக, சாற்றுவென் : மலய கேதுவின்
சேனைக் குழாத்தினைச் சேறல் அரிதே.

**சித்தார்த்** : எப்படி யென்றே எனக்கிதை இயம்புக.

**அமணன்** : கேட்டி சாவக, கெடலரும் படையில்
முன்னெலாம் போவதும் வருவதும் எளிதே.
இப்பொழு தோவெனின், இன்னகர்ப் பாடலம்
அணித்தென, ஆரும் அநுமதி யின்றி,
அகத்தோ புறத்தோ அடியிடல் ஒல்லார்.
ஆகலின், அறிவுடைப் பாகுரா யணனின்
இலச்சினைச் சீட்டுன் கையில் இருப்பின்,
அச்சமே யின்றிச் செல்க அவ்விடம்,
அச்சீட் டின்றி அவ்விடஞ் செல்லின்
காவல் வீரர் காற்கும் கைக்கும்
இருப்புத் தளையினை விருப்புடன் மாட்டி
அழைத்துச் செல்வர் அரசன் திருமுன்.

**சித்தார்த்** : அமணப் பதந்த, அறிவை நீயெனை :
இராக்கத அமைச்சன் இன்னுயிர் நண்பன்
யானென அறிந்தும், யாவன் என்னைச்
சீட்டே யின்றிச் செல்கின் றானெனத்
தடுக்கும் ஆணையன்? தடுத்தால் தெரியும்!

**அமணன்** : அமைச்சன் இராக்கதன் ஆருயிர் நண்பனோ,
அல்லது பேயோ, ஆரா யிருப்பினும்,
சீட்டில் லாமற் செலமுடி யாதே.

**சித்தார்த்** : அன்ப, சினவேல்; அரும்பணி வெல்க.

**அமணன்** : சாவக செல்க, நின்செயல் முற்றுக.
பாகுரா யணனிடம் பல்லைக் காட்டிச்
சீட்டினை வாங்கிச் செல்வல் யானும்.

(போகின்றனர்-பிரவேசகம் முற்றும்)

(பின்னர்ப் பாகுராயணன் ஏவலனொருவனொடு புகுகின்றனன்)

**பாகுராய** : (தனக்குள்)
ஆஆ, ஆரியச் சாணக் கியனின்
தந்திர நீதி வியத்தல் சான்றது!
ஒருகால் அதுதான் ஒளிகெழு பெரும்பயன்
தரினே வெளிப்படை யாகும்; ஒருகால்
எதுவும் எவரும் அறியா மறையாம்.
முற்றிய உருவென மிளிரும் ஒருகால்.
மெலிந்தெனத் தோற்றும் மற்றொரு காலை.
வித்தே அழிந்தென விளங்கு மொருகால்.
பலபயன் தந்தெனப் புலனாம் ஒருமுறை
அரசியல் வல்ல ஆரியன் தந்திரம்
விதியின் செயலென விசித்திரம் சான்றது!

(வெளிப்படையாய்)

நல்லோய் பாசுர, நீங்கிய என்னை
மன்னிளங் குமரர் விழையார் ஆகலின்,
அத்தா ணியினோர் ஆதனம் அமைத்தி.

**ஏவலன்** : ஈதோ இருக்கை இதன்மிசை இருத்திர்.

**பாகுராய** : (இருக்கின்றான்)
சீட்டினை வேண்டிச் சிலர்பலர் வந்தால்,
அவர்தமை அகத்தே அழைத்துவா வல்லே.

**ஏவலன்** : ஆணையின் வண்ணம் அழைத்து வருவேன்.

(போகின்றான்)

**பாகுராய** : (தனக்குள்) நம்பி நட்டவென் மலய கேதுவை
நானே நன்கு வஞ்சிப் பதுதான்
கொடிதாம் எவற்றினும் கொடிதாம் அந்தோ!
குலனே குடியே கீர்த்தி மானம்
என்னும் இவற்றினை எண்ணா னாகிப்
பேரா சையினாற் பெருஞ்செல் வற்கு
நில்லா வுடலை நிலையாய் விற்றே
அவனுக் காட்செயும் அடிமை ஒருவன்
நன்மை தீமை ஆய்ந்தனன் ஆயின்

அதனா லவனுக் காம்பயன் உண்டோ?

(மலயகேது வாயிற்காப்பா ளொருத்தியோடு வருகின்றான்)

**மலயகேது** : (தனக்குள்)
அமைச்சன் இராக்கதன் அருஞ்செயல் குறித்து
ஐயம் பலவாய், அமைதியும் முடிவும்
இன்றிப் பெரிதும் என்மனம் வருந்தும்

என்னெனின்,

நந்தர் மீதுள நந்தலில் அன்பால்,
சந்திர குப்தனந் நந்தர் வழியினன்
என்னுங் கருத்தால், இறைவன் குடிலனைப்
பதவியி னின்றும் பெயர்த்த செயலால்,
சந்திர வேந்தொடு சந்துசெய் தனனோ?
அல்லது, அவன்தான் அந்நாள் அளித்த
வாக்கின் வண்ணம் வாய்மையோ டிருந்தே
கலங்காத் திண்மையாற் கருமம் செய்வனா?
என்றெலாம் என்மனம் எண்ணி யெண்ணி
மட்பகைக் குயவன் திரிகை மான
அல்லும் பகலும் அலமரும் மன்னோ.

(வெளிப்படையாய்)

பாகுரா யணன்தான் எங்குளன் விசயை?

**வாயிற்காப்** : குமர, சேனைக் குழாத்தினை விட்டுச்
செல்ல விழைந்தோர்க் கெல்லாம் சீட்டினை
ஈந்தனர் உளரால் இத்தலை அவர்தாம்.

**மலயகேது** : விசயை இயங்கேல், வறிதிரு இத்தலை;
மெல்லச் சென்றே ஞெரேரெனப் பின்னால்
இருந்தே இவன்விழி இறுகப் புதைப்பன்.

**வாயிற்காப்** : அரச குமரர் ஆணை வழியே.

(ஏவலன் வருகின்றான்)

**ஏவலன்** : (வந்து பாகுராயணனை நோக்கி)
ஆரிய, ஈங்கோர் அமண வாண்டி
அநுமதிச் சீட்டினை அடையுங் கருத்தொடு
காண விழைவன். கருத்தெனிற் கொணர்வேன்.

**பாகுராய** : உள்ளே வரவிடு.

**ஏவலன்** : உளத்தின் படியே. (போகின்றான்)

(அமணன் புகுதலும்)

**பாகுராய** : (அவனைப் பார்த்துத் தனக்குள்)
அடடா சீவ சித்தி, ஆரியர்
இராக்கதர் நண்பன்! (வெளிப்படையாய்) இராக்கதன் [பணிமேற்
போகின் றனையோ புலவலி அமண!

**அமணன்** : (காதுகளைப் பொத்திக்கொண்டு)
பாவம் ஒழிக! பாவம் ஒழிக!
எங்கே இராக்கதன் பெயரோ பிசாசின்
பெயரோ இல்லையோ அங்குப் பெயர்கேன்.

**பாகுராய** : போலிச் சினமிது பெரிதும் வலிதால்!
இராக்கதன் இயற்றிய இன்னல் யாவை?

**அமணன்** : ஐயா, அமைச்சன் ஆற்றிலன் தீமை.
நற்பே றில்லா நானே செயல்சில
ஆற்றி இந்நிலை அடைந்தனென் நாணுவேன்.

**பாகுராய** : கேட்கும் ஆசையைக் கிளப்புகின் றனையே.
உட்கிடை விளங்க உரைத்தி எனக்கே.

**மலயகேது** : (தனக்குள்)
நவில்க, யானும் நன்னர்க் கேட்பேன்.

**அமணன்** : கேளாச் செய்தியைக் கேட்டலாற் பயனென்?

**பாகுராய** : மந்தண மாயின் மற்றஃ திருக்க.

**அமணன்** : மறையிலை சாவக, மாணக் கொடிது.

**பாகுராய** : மறையிலை யென்னின் மற்றதை விளம்பு.

**அமணன்** : மறையிலை யெனினும் சாவக, மொழியேன்.

**பாகுராய** : முத்திரைச் சீட்டை வழங்கேன் யானும்.

**அமணன்** : (தனக்குள்) கேட்ட இவற்குக் கூறல் தக்கதே.

(வெளிப்படையாய்)

கதியிலை, வேறே, கேட்டி சாவக.
நற்பே றில்லா நானும், அந்நாள்
பாடலி புரத்து வாழ்ந்து வந்தேன்.
அப்போ தாரிய இராக்கத னோடு
நெருங்கிப் பழகி நண்பனும் ஆனேன்.
அந்நாள் அமைச்சன் இராக்கதன் மறையாய்

பெருவிடக் கன்னியைப் பொருக்கென ஏவி
மாய்த்தனன் பருவத மன்னர் மன்னனை.

**மலயகேது** : (கண்ணீர் வடித்துத் தனக்குள்)
எப்படி எந்தையார் உயிரை இராக்கதன்
கொன்றான்? கொன்றவன் குடிலன் அலனோ?

**பாகுராய** : பின்னர்ப் பதந்த,

**அமணன்** : பின்னர் நானும்,
இராக்கதன் நண்பன் என்றே எண்ணி
என்றன் மானம் எல்லாம் போக்கிச்
சாணக் கியனால் சால்புடைப் பாடலி
வளநகர் நின்றும் வெருட்டப் பெற்றேன்.
அரசியல் நீதியில் ஆற்றல் சான்ற
ஆரிய இராக்கதன் அந்நாட் செய்த
கருஞ்செயல் போலொரு செயலைக் கருதித்
தொடங்கியும் விட்டான். தொட்ட அதனால்
மண்ணில் இருந்தெனைத் துரத்தினும் துரத்தலாம்.

**பாகுராய** : பதந்த வாக்கின் வண்ணம் பாதி
அரசினை அளிக்க மனமிலாக் குடிலன்
பருவதே சுரனைப் படுத்தனன்; இராக்கதன்
அல்லன் எனவே அன்றுயாம் கேட்டனம்!

**அமணன்** : (காதுகளைப் பொத்திக் கொண்டு)
சாந்தம் பாவம், சாணக் கியன்றான்
நச்சுக் கன்னியின் நாமமும் அறியான்.

**பாகுராயணன்** : இந்தா, முத்திரைச் சீட்டு ஈந்தேன்.
அரச குமரரை அண்மி அறிவி.

**மலயகேது** : (புகுந்து)
கேட்டனன் நண்ப காதினைப் பிளக்குஞ்
செய்தியை. சீரிலாச் சூழ்ச்சியில் வல்லவிப்
பகைவனே புகழ்சால் எந்தையைக் கொன்றான்
எனவே கூறினன் எய்திய நண்பனும்.
எந்தை துஞ்சி எண்ணில் நாட்கள்
கழிந்தன வேனும் கருதரு துயர்தான்
இருமடங் காக என்னுட் பெருகும்.

**அமணன்** : (தனக்குள்)
மலய கேதுவும் மாட்சியிற் கேட்டனன்;
அம்ம அருவினை அனைத்தும் முடித்தேன்.
(போகின்றான்)

**மலயகேது** : (யாரிடமோ நேரிற் பேசுவதுபோல விசும்பினை நோக்கி)
இராக்கத, இராக்கத, இயையும் இயையும்;
நல்லவென் தாதை நம்பினன் நின்னை
எல்லாச் செயற்கும்; பொல்லாச் சூழ்ச்சியால்
எந்தையைக் கொன்றனை; எமரும் நண்பரும்
கண்ணீர் வடித்துக் கதறி அழுதனர்.
இராக்கத, இயம்பரு இராக்கத னாயினை.

**பாகுராய** : (தனக்குள்)
இராக்கதன் உயிரை இனிதே காக்கென
அந்நாள் ஆரியர் ஆணை இட்டனர்.
நல்லது காண்பல்; (வெளிப்படையாய்) மன்னிளங் குமர
ஏனிப் பதைப்பு? இருக்கையில் இருந்தபின்
செய்தி யொன்றனைச் செப்ப விரும்புவல்.

**மலயகேது** : (இருந்து) நண்ப, எதனை நவில விரும்பினை?

**பாகுராய** : வேந்தன் குமர, விளங்குமிவ் வுலகில்
பொருணூற் பெருங்கடல் மறுகரை கண்ட
சான்றோர் பலரும் சாற்றிய நூலால்,
நட்பே பகையே நொதுமல் இவற்றைப்
பயனைப் பொறுத்தே பகுப்பர் அல்லால்,
உலகினர் போல உளத்தினுக் கியைந்த
வண்ணஞ் செய்யார்; திண்ணம் இதுவே.
ஆகலின், முன்னாள் அமைச்ச விராக்கதன்
சருவார்த் தசித்தியைச் சகத்திறை யாகவே
விழைந்தனன் பெரிதும்; விழைந்தும் இதற்குப்
பருவத வேந்தனே பகரரு மோரிய
வேந்தனின் விஞ்சிய வலியால் விளங்கி
இராக்கதன் செயலுக் கிடையூ றாயினன்.
அதனால், நுந்தை அரும்பகை ஆயினன்.
அமைச்சன் ஆற்றிய அச்செயல் தன்னில்
குற்றம் உளதெனக் கூறேன் யானும்.
இன்னும் நோக்குக மன்னிளங் குமர,
இப்பிறவியிலே இயைந்தா னொருவன்
முன்னம் பிறப்பினை நினைவனோ மறப்பனோ?
அதுபோல் அரசியல் நெறியில் நண்பர்
பகையாய்ப் பகைவர் நண்பாய் மாறுதல்
அவ்வக் காலத் தரசியற் கேற்ப
நிகழ்வ தொன்றலால் நிகழ்த்தவே றில்லை.
இராக்கத வமைச்சனை இதன்கண் குமர,
பழித்துக் கூறலிற் பயனே யில்லை.
நந்த ரரசு நம்கைப் படும்வரை

இராக்கதன் இனிதின் இருக்க; பின்னர்
அமைச்சனாய் அவனைப் பேணிக் கொளவோ
பிடித்துத் தள்ளவோ முடித்தி ஒருசெயல்.

**மலயகேது** : நண்ப, நன்கு நவின்றனை; ஒக்கும்.
அமைச்சனைக் கொல்லின் அமைந்த மக்கள்
ஒய்யென எழுவர்; ஓங்கும் குழப்பம்;
வெற்றியும் ஐயம்.

(ஏவலன் புகுந்து)

**ஏவலன்** : வெல்க குமர,
ஐய வந்துளன் அகலார் வாய்தலில்
நற்கண் காணி நும்மிடை நவில.
''அநுமதிச் சீட்டினை அடையப் பெறாமல்
கடிதமுங் கையுமாய்க் கடும்படை விட்டுப்
போயின ஒருவனைப் பொள்ளெனப் பிடித்தேன்,
ஆதலின் அவனை ஆரியர் காண்கென.

**பாகுராய** : நல்லோய் தருக

**ஏவலன்** : நானிதோ ஆணை.

(கை பிணிக்கப்பெற்ற சித்தார்த்தகன் காவலனால்
பின் தொடரப்பெற்று வருகின்றான்)

**சித்தார்த்** : (தனக்குள்)
ஏவிய வெல்லாம் மேவிய குணமாய்க்
குற்றங் காண்டலிற் குருட்டுக் கண்ணாய்
எம்போ லியர்க்கெலாம் எண்ணரு தாயாய்
விளங்குறு தலைவர்ப் பற்றே, வணக்கம்.

**ஏவலன்** : ஆரிய, இவன்தான் அந்த ஆளு.

**பாகுராய** : (அவனை நோக்கி)
இவன்யா ரப்பா இங்குள யாவர்
ஏவலன்? அலனேல் அயலானா இவன்?

**சித்தார்த்** : ஆரிய, இராக்கத அமைச்சரின் அடியுறை!

**பாகுராய** : விடையினை யின்றி விட்டதென் படையினை?

**சித்தார்த்** : வேலை நெருக்கம்; விரைந்தே சென்றேன்.

**பாகுராய** : வேந்தர் ஆணையை மீறும் வேலை
நெருக்கம் எதுவது?

**மலயகேது** : நல்லது நண்ப,

பாகு ராயண, பற்றிய முடங்கலைப்
பறித்திடு முன்னர் : பார்க்குவம் பின்னர்.

**பாகுராய** : (சித்தார்த்தகன் கைக்கடிதத்தினை வாங்கி அதிற்
பொறித்துள்ள முத்திரையை நோக்கி)
குமர, காண்டி கூறிய கடிதத்
திராக்கதன் பெயர்பொறி இலச்சினை இனிதே.

**மலயகேது** : இலச்சினை கெடாமல் ஏட்டினைப் பிரித்தே
என்கை இடுதி : என்னெனக் காண்பல்.

(பாகுராயணன் அங்ஙனமே செய்து கடிதத்தை
மலயகேதுவின் கையில் கொடுக்கின்றான்)

**மலயகேது** : (படிக்கின்றான்)
ஏமம், எவ்விட மிருந்தோ யாரோ
ஒருவர் யாரோ ஒருவர்க் கிங்ஙனம்
இனிதின் இதனை எழுதுகின் றனரால்.
நந்தம் பகைவனின் நன்மை குலைத்து
வாய்மை யாளர் வாய்மையை நிறுவினர்.
முன்னர் நம்முள் முற்றிய எழுத்தில்
ஒப்பிய வண்ணம் ஒடியா நட்பினர்
நேய நெஞ்சினர் நிலைபெறல் கருதி
ஊக்கம் ஊட்டி உறுபொருள் ஈயும்
விருப்பினர் ஆகுக வாய்மை யாளரும்.
கடமை முற்றின், கருதும் இவரெலாம்
அவர்தம் தலைவரை அழித்தொழித் தனராய்
அரும்பொருட் கொடையரை அண்மூவர் அன்புடன்.
வாய்மை யாளர் மறப்ப ரல்லர்
எனினும், இதனை நினைப்பூட் டினமால்.
இவரிடை யேசிலர் எதிர்ந்தார் தமது
இருநிதிக் குவையினை இனிதென விழைவர்.
வேறு சிலர்தாம் கரிப்படை வேண்டுவர்:
நாட்டினை விழைவர் நன்றெனச் சிலரே.
வாய்மை யாளர் விருப்பாற் போக்கிய
முக்கலன் எம்கையிற் சிக்கறப் பெற்றேம்.
எழுத்துடன் ஒருபொருள் வழுத்திப் போக்கினம்.
பெறுதல் வேண்டும். உறுவோன் உண்மையன்.
விழைந்தால் வேண்டும் செய்தியை விள்ளுவன்.

**மலயகேது** : பாகு ராயண, பார்த்தையா? எப்படி?

**பாகுராய** : எவருக் கையா இந்தக் கடிதம்?

**சித்தார்த்த** : ஐயா அறியேன்.

**பாகுராய** : ஆ ஆ கெட்டாய்!
ஏட்டினைத் தாங்குவை. எவர்க்கென அறியாய்!
இருக்க இவையெலாம். எவரால் வாய்மொழி
கேட்கப் படுதல் வேண்டும்?

**சித்தார்த்த** : (அஞ்சி) உம்மால்

**பாகுராய** : என்னிது? எம்மால்!

**சித்தார்த்த** : என்னைப் பிடித்தீர்,
கூறுவ தறியேன் குழம்பி நின்றேன்.

**பாகுராய** : (கடுஞ்சினத்துடன்)
விரைவில் அறிவை, சித்தார்த் தகனே.
பாசுர, இவனைப் பற்றி வெளியே
நிறுத்தி வாய்மை சொல்லும் வரையில்
அடித்துப் போடுக.

**ஏவலன்** : அமைச்சர் ஆணை

(சித்தார்த்தகனோடு வெளியே சென்று மீண்டும் திரும்பிவந்து)

கக்க மிருந்தே கழன்றதிக் கலனிடு
முத்திரைப் பேழை, முந்தக் காண்மின்.

**பாகுராய** : (பார்த்து) இதுவும் இராக்கதன் இலச்சினை குமர.

**மலயுகேது** : எழுத்தொடு தொடர்ந்த விழுக்கொடை போலும்!
முத்திரை கெடாமல் திறந்தே காட்டுக.

(பாகுராயணன் பேழையினைத் திறந்து காட்டுகின்றான்)

**மலயகேது** : (உற்றுப்பார்த்து)
ஆ ஆ அணிகலன் இவைதாம்-அந்நாள்
என்னால் என்னுடல் நீக்கி இராக்கத
அமைச்சற் கனுப்பப் பெற்றவை. எழுத்தும்
சந்திர குப்தர்க் காக மன்ற.

**பாகுராய** : அரச குமர, ஐயம் தீர்க்குவம்.
நல்லோய், மீண்டும் நையப் புடைத்திடு.

**ஏவலன்** : அமைச்சர் ஆணை

(வெளிச்சென்று மீண்டும் சித்தார்த்தகனோடு திரும்பிவந்து)

அடித்த அடியால்
மன்னர் மகற்கே மொழிய இசைந்தனன்.

**மலயகேது** : அங்ஙனம் ஆகுக.

**சித்தார்த்** : (அடிகளில் வீழ்ந்து) அரச குமர,
அபயம் அளித்தெனை அருளல் வேண்டும்.

**மலயகேது** : அயலாற் கென்றும் அபயம் உண்டே.
உண்மையை ஒளியா துரைத்தி நல்லோய்.

**சித்தார்த்** : மன்னிளங் குமர, மாற்றம் கேட்க.
இராக்கத வமைச்சர் இக்கடி தத்தினை
ஈந்தார்; என்னை "இறைவன் மோரியன்
கைக்கொடு" வென்னக் களிப்புடன் போக்கினார்.

**மலயகேது** : வாய்மொழி யாதென வகுத்துரை ஈங்கே.

**சித்தார்த்** : அமைச்சர் இட்ட ஆணை இதுவாம்:
ஈண்டுளர் ஐவர் இன்னுயிர் நண்பர்
அரசர் அவரெலாம் நுந்தமக் கன்பினர்.
அவர் தாம், குலூத நாட்டின் அதிபன்
சித்திர வன்மன்; மலய மன்னன்
சிங்க நாதன்; சீர்மிகு காசுமீ
ரத்துப் புட்க ராக்கன்; சிந்து
நாட்டினன் சிந்து சேனன்; பரா
சீக மன்னன் மேக நாதன்;
என்போர். அவருள் முன்னர் இயம்பிய
மூவரும் மலயனின் மாநிலம் வேண்டுவர்.
பின்னர்ப் பேசிய இருவரும் பிளிற்றொலி
பரப்பும் களிற்றுப் படையைப் பொருளை
விழைவர். வீணன் குடிலனை நீக்கி
வேந்தர் எனக்கு மகிழ்ச்சி விளைத்தனர்;
அதுபோல் அவரையும் அரும் பொருளாலே
திருத்தி செய்க என்பதே வாய்மொழி.

**மலயகேது** : (தனக்குள்)
என்னிது? சித்திர வரும னாதியர்
எனக்குமா கேட்டினை எண்ணி விட்டனர்?
அதனாற் போலும் அமைச்ச ரிடத்தே
அவர்க்கெலாம் அத்தனை அன்பு! ஆமாம்.

(வெளிப்படையாக)

விசயை, இராக்கதர்க் காண விழைந்தேன்.

**விசயை** : அரசிளங் குமரர் ஆணை வண்ணமே (போகின்றாள்)

(இராக்கதன் தன் மாளிகையில் இன்னொரு ஏவலனோடு
ஆழ்ந்த கருத்தினனாய்ப் புகுகின்றான்)

**இராக்கதன்** : (தனக்குள்)
நந்தம் படைதான் சந்திர குப்தன்
படையால் நிறைந்துள தென்றல் திண்ணம்
ஆகலின் என்மனத் தமைதியே இல்லை.

என்னெனில்,

அச்சா தனமே, அறுதி யிட்ட
சாத்தியத் தோடு சார்ந்தமை யானும்,
அந்வய மென்றா அடுத்த சபக்கம்
என்றா எனஇவை உடைமை யானும்,
விபக்க மிருந்தே மீண்டமை யானும்,
விழைந்த வெற்றியை விரைவில் தருமால்.
சாதனம் சாத்தியம் சாற்றும் வேற்றுமை
இன்றி ஒன்றினும், பக்கம் இரண்டினும்
ஒத்துக் காணினும், தனாது சார்பினுக்
கெதிர் தாயினும், ஏற்பின் அதனை
வாதியைப் போலவே வேந்தன் அழிவான்.
வேந்தன்மோ ரியனை வெறுத்த வீரரும்
முன்னர் என்னுடைப் பேத மொழிகளை
ஏற்றே என்னிடம் இருந்தோர் தாமும்
வந்தனர் படைக்கெனக் குழம்பல் தவறே.

(வெளிப்படையாய்)

பிரியம் வதக, பேரிளங் குமரர்ச்
சார்ந்த மன்னரைச் சாற்றுதி ஆணையால்.
நாளும் நாளும் நன்னகர்ப் பாடலம்
அணித்தா கின்றது; ஆதலின் அவரெலாம்
இன்னே படையினை இனிதின் இயக்கிச்
செல்லுதல் வேண்டும் செப்பிய முறையில்.
எங்ஙனம் எனினே இயம்புவன் கேட்டி;
மகதரும் கசரும் மாணுறு தலைவராய்
நடத்துறு படைதான் நலமுறு பத்தியில்
என்னைத் தொடர்ந்தே முன்னே றுகதான்.
காந்தா ரர்தாம் கருதுறு யவனப்
படைகொடு விழிப்புடன் இடையினில் வருக.
அவர்க்குப் பின்னே அஞ்சா வீரர்
சகவேந் தர்தாம் சீனர் ஊணர்
இவர் தமை எழுப்பி இனிதின் இயங்குக.
குலூத வேந்தனும் கருதுறு பிறரும்
மன்னிளங் குமரரைத் துன்னி இருந்தே
வழியெலாஞ் சூழ்ந்தே விழிப்புடன் காக்கவே.

**பிரியம்வதகன் :** அவ்வணம் யானே (போகின்றான்)

**வாயிற்**
**காப்போள் :** (புகுந்து) அமைச்சர் வெல்க.
அமைச்ச, குமரர் காண விரும்பினர்.

**இராக்கதன் :** இருத்தி மெல்லியால்; இளையரிங் கெவரே?

**ஏவலன் :** (புகுந்து) அமைச்ச, ஆற்றுவென் ஆணை இடுமின்.
இயம்புதி சகடனை இன்னே போகி.
விழுக்கல னீந்த வேத்திளங் குமரரை
அணியணி யாதே அண்மிக் காண்டல்
தக்கதன் றாதலால் வாங்கிய அணிகள்
மூன்றனுள் ஒன்றைத் தருதி யெனவே.

**ஏவலன் :** ஆணை அங்ஙனம் ஆற்றுவன் ஐயா,
(வெளிச்சென்று மீட்டும் உட்புகுந்து)
அமைச்ச அணிகலன் இதுவாம் அணிமின்.

**இராக்கதன் :** (அதனை அணிந்தெழுந்து)
அரசர்க் காணும் அவ்வழி உய்த்தி.

**வாயிற் :** வருதிர் அமைச்சீர் வருதிர் இவ்வழி.

**இராக்கதன் :** (தனக்குள்)
ஆற்றல் கண்ணிய அரசியற் பதவி
குற்றமே யில்லாக் கூர்மதி யாற்கும்
பெரும்பே ரச்சம் பெரிதும் தருமிடன்.
தலைவ ரிடத்துள தாங்கரும் அச்சம்,
பணிபுரி நெஞ்சில் தணிவிலா துறுமால்.
அதன்பினர், அவனை அண்மிச் சூழ்ந்தோர்
தம்மால் தணிப்பில் அச்சம் தலைக்கொளும்.
நற்பணி ஆற்றி நல்லதோர் பதவி
அடையின், அங்குள ஆன்றோர் கயவர்
பகையாற் பகரரு மச்சம், பார்ப்பின்—
உயர்நிலை இருந்தோர் ஏற்றம் இறுதியில்
வீழ்ச்சியை விரைவில் விளைக்கும் மன்ற.

(உலவுகின்றான்)

**வாயிற் :** அமைச்ச, குமரர்-அடைக அவர்தமை.

(அமைச்சர் பார்த்து)

**இராக்கதன் :** ஈண்டுளர் குமரர்; இவர்தாம் இமையா
இருவிழி இணையடி பொருத்தி, இயங்கலர்

கண்ணுறு பிறபொருள் காணார் ஆகி,
இந்து முகத்தினை இடக்கையில் தாங்கி,
அரும்பணிச் சுமையால் அழுந்தியோ ரென்னக்,
கவிழ்ந்தே இருப்பர். காணுவன் பெரிதே.

(அரசகுமரரை அண்மி)

அடைக வெற்றி, அரசிளங் குமர!

**மலயகேது** : ஆரிய, வணக்கம் : ஆதனத் திருத்திர்.

(இராக்கதன் இருக்கையில் அமர்கின்றான்)

**மலயகேது** : ஆரிய அமைச்சரை அண்மையிற் காணப்
பேறு பெறாமையிற் பெரிதும் கவன்றேம்.

**இராக்கதன்** : மன்னிளங் குமர, மாணுறு படையினை
இயக்கும் வினையில் இருந்தே னாதலின்
வந்திலன்; கவற்சி விளைத்தனன் நும்மிடை.

**மலயகேது** : பகையினை இயக்கிய பான்மை கேட்க,
ஆரிய விழைந்தனன். அறைதிர் அம்முறை.

**இராக்கதன்** : நமரென இருந்த நல்வேந் தர்க்குக்
குமர, இங்ஙனம் கூறினன் ஆணை.

(மகதரும் கசரும் எனத் தொடங்கும் அடிகளைப் படிக்கின்றான்)

**மலயகேது** : (தனக்குள்)
என்னிது? யார்யார் என்னை அழித்து
மவுரிய மன்னனை வழிபட முயல்வரோ
அவரெலாம் (அவரே) என்னைச் சூழ்ந்திருக் கின்றனர்!

(வெளிப்படையாய்)

பாடலி நகர்க்குப் படர்கின் றவனோ
அன்றி அந்நகர் விட்டிவண் வருகின்
றவனோ ஒருவன் ஈங்குளன் ஆரிய.

**இராக்கதன்** : வருவதும் போவதும் வேண்டுவ திலையே.
சிலபகற் செல்லின் செல்லுவம் யாமே.

**மலயகேது** : (தனக்குள்) அறிந்தேன்—
அப்படி ஆயின் ஆரிய
ஏட்டொடு எப்படி ஏவலன் இவனை
அந்நகர் குறித்தே அனுப்பினீர்? கூறுதிர்.

**இராக்கதன்** : (பார்த்து)
சித்தார்த் தகனா! நல்லோய், என்னிது?

**சித்தார்த்** : (கண்ணீர் பெருக்கி நாணத்துடன்)

அமைச்ச அருள்க; அடிபொறுக் கல்லேன்
அடக்ககில் லாதே அருமறை விண்டனன்.

**இராக்கதன்** : நல்லோய், மறையா! நானதை அறியேன்.

**சித்தார்த்** : அடிபொறுக் கல்லேன்; அமைச்ச, முன்னரே
அறைந்தனன் அல்லேனா? அடிபொறுக் கல்லேன்.

(இங்ஙனம் கூறி அச்சத்தால் தலைகுனிந்து நிற்கின்றான்)

**மலயகேது** : (பாகுராயணனை நோக்கி)
அன்ப, அவன்றான் அச்சம் நாணம்
என்றிவை தம்மால் எத்துணை கேட்டும்
சாமி முன்னர்ச் சொல்லா னாதலின்
அமைச்சர்க் கிதனை அறிவித் திடுநீ.

**பாகுராய** : அரச குமரர் ஆணையின் வழியே
அமைச்ச, நீவிர் அவனை மோரிய
வேந்திடை முத்திரை முடங்கலும், வாய்மொழி
ஒன்றும் ஈந்தே இனிது போக்கினிர்
என்னக் கூறினேன். இதுதான் அம்மறை!

**இராக்கதன்** : சித்தார்த் தகனே, சொன்ன துண்மையா?

**சித்தார்த்** : (வெட்கி)
நையப் புடைத்தனர். நவின்றேன் அப்படி.

**இராக்கதன்** : இதுபொய் : அடித்தால் எதைத்தான் சொல்லான்!

**மலயகேது** : முத்திரை முடங்கலைக் காட்டுதி நண்ப!
வாய்மொழி இளையன் மொழிவன் விடுத்தே.

**பாகுராய** : அமைச்ச, இதுதான் அத்தகு முடங்கல்.

**இராக்கதன்** : (படித்து)
அரசிளங் குமர, அடங்கலர் சூழ்ச்சி!

**மலயகேது** : கடிதம் மாத்திரம் கூடா தென்றே
ஆரியர் நீவிர் அணிகலன் ஒன்றும்
அனுப்பி யுள்ளீர்; ஆகலின், அதுதான்
அடங்கலர் சூழ்ச்சி என்றல் அமையுமோ?

**இராக்கதன்** : (அணிகலனை நன்னர் உற்று நோக்கி)
உம்மால் இக்கலன் உவப்புடன் எனக்கே
அந்நாள் அனுப்பப் பெற்றது அதனைச்

சித்தார்த் தகற்கே செறிந்த அன்பால்
நன்கொடை யென்ன நல்கினென் நானே.

**பாகுராய** : மன்னிளங் குமரர் மாண்புடை அமைச்சர்க்
கன்பினால் அவருட லணிந்த அருவிலை
யணிகலன் அளித்தன ராயின், அதனை
இவனுக் கீதல் எங்ஙனம் பொருந்தும்?

**மலயகேது** : 'வருவோன் வாய்மொழி வலிப்பன்' எனவும்
வரைந்தனிர் ஆரிய, விடுத்த எழுத்தில்.

**இராக்கதன்** : என்ன வாய்மொழி? எவர்க்கு வாய்மொழி?
எழுத்தே தானும் என்ன தில்லையே.

**மலயகேது** : எவருடை முத்திரை இதுதான்? இயம்புக.

**இராக்கதன்** : கள்ளர் ஆக்குவர் கள்ள முத்திரை!

**பாகுராய** : அரசிளங் குமர, அமைச்சர் நன்கு
நவின்றனர். நல்லோய், சித்தார்த் தகனே,
எவரால் இதுதான் எழுதப் பெற்றது?

(சித்தார்த்தன் இராக்கதன் முகம்நோக்கித்
தலைகுனிந்து வாளா இருக்கின்றான்.)

**பாகுராய** : நல்லோய், மீண்டும் நையப் புடைப்பர்.
வேண்டா மவுனம், விளம்பிடு உண்மையை.

**சித்தார்த்** : சகட தாசச் செம்மலால் ஆரிய.

**இராக்கதன்** : சகட தாசன் எனவே சாற்றின்
என்னுடை எழுத்தே; ஏந்தற் குமர.

**மலயகேது** : விசயை, சகடனை விரைவில் அழையிவண்.

**வாயிற்காப்** : ஆணையிட்ட வண்ணமே குமர.

**பாகுராய** : (தனக்குள்)
சாணக் கியனைச் சார்ந்தோர் அனைவரும்
வெளிப்படை யன்றி வந்தன கூறார்.

(வெளிப்படையாய்)

கடிதம் வரைந்தோன் குமர 'யானெனச்'
சகட தாசன் மந்திரி யார்முனம்
ஒப்பவே மாட்டான். ஆதலின், இவனே
எழுதிய இன்னொரு படியைக் கொணர்ந்தே
ஒப்பு நோக்கிடின் உண்மை நமக்குத்
தெளிவாய் விளங்கும்.

**மலயகேது** : விசயை செய்க.

**வாயிற்காப்** : இலச்சினை? குமர.

**மலயகேது** : இரண்டும் வேண்டும்.

**வாயிற்காப்** : அரசர் குமரர் ஆணையின் படியே.

(வெளிச்சென்று மீண்டு வந்து)

இறைவன் மைந்த, இதுவே அத்தகு
சகட தாசனின் சொந்த எழுத்து;
இதுகாண் முத்திரை; ஏற்றரு ளுகவே.

**மலயகேது** : (இரண்டனையும் ஒப்பு நோக்கி)
ஒத்தன ஆரிய; ஒன்றே இரண்டும்.

**இராக்கதன்** : (தனக்குள்)
இரண்டும் ஒன்றே எனினும், சகடன்
என்னுடை இன்னுயிர் நண்பன் எனும்போ
தவைதாம் ஒவ்வா; அதனாற் சகடனே
மனைவி மக்களின் நன்மையை எண்ணியும்,
தலைவர்ப் பத்திதான் இலையென மறந்தும்,
நிலையில் பொருளை நனியும் விழைந்தும்,
அழியாப் புகழினை அறவே மறந்தும்,
எழுதினன் கொல்லோ பழிதரு மிதனை?
இதிலென் ஐயம்? இலச்சினை யாழியும்
உளதே இவன்கை! அன்றியும் உவற்குச்
சித்தார்த் தகனும் சிறந்த நண்பன்.
இந்தக் கடிதமோ இவனே எழுதிய
இன்னோ ரெழுத்தால் இரண்டும் ஒன்றென
வெட்ட வெளிச்சமாய் விளங்கி விட்டது.
தன்னுயிர் காக்கத் துணிந்த சகடன்
பேதச் செயல்வல பகைவர்க் கிணங்கித்
தலைவர்ப் பற்றினைத் தூரத் தள்ளி
இழிசெயல் இழைக்க இயைந்தனன் போலும்!

**மலயகேது** : (இராக்கதனை நோக்கி)
ஆரிய, அரசர் அன்பால் அனுப்பிய
'அணிகலன் மூன்றையும் அங்கையிற் பெற்றேன்'
எனவே எழுதினீர் எழுதிய எழுத்துள்.
அவற்றுள்-அமைச்ச, ஒன்றோ இதுதான்?

(நன்னர் அணிகலனை உற்று நோக்கித் தனக்குள்)

எந்தையார் பூண்ட எழிற்கல னன்றோ?

(வெளிப்படையாய்)

ஆரிய, அணிகலன் அடைந்த தெப்படி?

**இராக்கதன்** : வணிகர் விற்றனர்; விலைக்கு வாங்கினென்.

**மலயகேது** : அணிகலன் இதனை அறிவையோ விசயை?

**வாயிற்கா** : (உற்றுப் பார்த்துக் கண்ணீர் வடித்து)
மன்னிளங் குமர, மறப்பனோ அதனை.
மாபெரும் புகழொடு மாண்ட நுந்தை
பருவதே சுரனே பரித்தனன் அந்நாள்.

**மலயகேது** : (கண்ணீர் பெருக்கி)
ஆஆ எந்தாய், அவ்வணி கலனே
வழிவழி வந்த வான்குலப் பணியாம்
அணிவிழை நுந்தம் அகலக் கேற்றது.
கூதிர் காலக் குளிர்மதி நிறைவுடன்
மீன்பல வற்றுடன் மின்னார் விசும்பில்
விளங்குவ தென்ன விளங்கினை நீயும்
அணிகல னேந்தி அகலார் உலகினே.

**இராக்கதன்** : (தனக்குள்)
பருவதே சுவரன் பரித்தனன் முன்னாள்
என்றனன்! என்னிது? எழிற்கலன் அவனதே
என்பதும் வெளிப்படை (வெளிப்படையாய்) இவைதாம் ஒருகால்
சாணக் கியனே வாணிகச் சாத்தினை
என்னிடம் போக்க எனக்கவ் வாணிகர்
விலையினைப் பெற்றே விற்றனர் போலும்!

**மலயகேது** : எந்தை ஏந்திய எழிற்கலன் இவைதாம்
சந்திர குப்தன் கரத்தினைச் சார
வணிகர் அவற்றினை விற்றனர் உமக்கெனல்
பொருந்துவ தன்றே, திருந்திய அமைச்ச?

(இன்றெனில்)

இங்ஙனம் கூறின் இயையும் பெரிதும்.
பேரு தியத்தைப் பெரிதும் விரும்பிய
மவுரிய மன்னன் விலைக்கு விற்றனன்;
எம்மை அவற்றின் விலையாய் இயைத்தனிர்!

**இராக்கதன்** : (தனக்குள்) பகைவர் பண்ணிய பொல்லாச் சூழ்ச்சி!

(என்னெனின்)

இவ்வெழுத் தெனதிலை யென்பது விடையிலை.
முத்திரை எனதே. முறிந்தது சகடன்
நட்பெனின் இதனை நம்புவார் யாவர்?
மோரியன் கலன்களை விற்றா னென்றல்
நிகழா நிகழ்ச்சி. ஆதலின், நானிதை
ஒப்புதல் நன்றே; மழுப்புதல் தீதே.

**மலயகேது** : இதனைக் கேட்பல் இருமதி ஆரிய.

**இராக்கதன்** : (கண்ணுங் கண்ணீருமாய்)
ஆரியன் யாவனோ அவனைக் கேட்க :
அநாரியன் ஆயினெம் யாமே இனியே.

**மலயகேது** : மவுரியன் நுந்தம் தலைவர் மகனாம்;
நும்வழி நின்ற நண்பர் மகன்யான்.
அவனது மனப்படி பொருளுமக் களிப்பன்;
நுந்தம் மனப்படி நான்பொருள் பெறுவேன்.
அத்தலை நீவிர் அமைச்சரே ஆயினும்,
மதிப்போ டியைந்த தொண்டே அதுவாம்.
ஈண்டோ நீயிர் இணையிலாத் தலைவர்!
இதனினும் உரிமை இயம்புதற் குண்டோ?
இருந்தும் நீயிர் எந்நலன் கருதி
அநாரியர் ஆயினீர், அமைச்ச, அறைதிர்.

**இராக்கதன்** : மன்னிளங் குமர, மாட்சியில் உரையால்
நீயே விடைதனை நிறுவினை நன்றும்.
நீயுந் தவறிலை; நினவுந் தவறில.

(முன்னர் மலயகேது மொழிந்தவற்றையே-தன்மையை முன்னிலை யாக்கியும், முன்னிலையைத் தன்மை ஆக்கியும் விடை கூறுகின்றான்.)

**மலயகேது** : (கடிதத்தினையும் கலச்செப்பினையும் இராக்கதற்குக் காட்டி)
உற்றுக் காண்டிர் உற்றவை என்னென.

**இராக்கதன்** : நுண்ணிய மதியும் நன்றியும் கொண்டு
எந்தநற் றலைவர் என்பால் அன்பால்
தாழ்ச்சிக் கிடனாம் தொழும்பினைப் பூண்ட
என்னையும் தம்மொடு ஒன்றாய்க் கருதி,
மகவினும் மேலாய்த் தலையளி செய்து,
அவனி அனைத்தும் அறிந்த அரசரை
எவ்விதிக் கயவன் அழித்தொழித் தனனோ,
மாந்தர் முயற்சியை மாயக் கெடுக்கும்
அத்தகு விதியின் பெருவிளை யாடல்.

**மலயகேது** : (சினத்துடன்)
இன்னும் இதனை ஏன்மறைக் கின்றீர்?
உறுவிதி யாடல்! உலோபம் அன்றோ?
அநாரிய அந்நாள் அருவிடக் குமரியை,
நன்றி மறந்தோய், நன்றெனப் போக்கினை
நல்லன் நீயென நம்பித் தொடர்ந்த
எந்தையின் மீதே. எந்தையும் துஞ்சினர்.
அமைச்ச ராக்கி அருமதிப் பீந்த
எம்மை, இறைச்சி போல எண்ணி
அடங்கலர் தமக்கு அருவிலைப் படுத்தி,
அந்தோ, ஆஆ, அழிக்கத் தொடங்கினை.

**இராக்கதன்** : (தனக்குள்) இதுதான்,
மிடற்றுக் கழலையின் மீதெழு கட்டி!
(செவியைப் பொத்தி வெளிப்படையாய்)
சிவ சிவ! சிவ சிவ! செயிர்விடக் கன்னியைப்
பருவதன் மீது போக்கியோன் யானலேன்.

**மலயகேது** : இல்லெனின் எவரால் எந்தை இறந்தார்?

**இராக்கதன்** : விளக்கம் வேண்டின் விதியினைக் கேட்டி.

**மலயகேது** : (சினத்துடன்)
அமண வாண்டியை யன்றோ? விதியை!

**இராக்கதன்** : (தனக்குள்)
சாணக் கியனைச் சார்ந்தவன் தானோ
சீவ சித்தியும்? அந்தோ! செறுவரென்
இதயத் தினையும் இனிதே கொண்டனர்!

**மலயகேது** : (சினத்துடன்)
பாசுர, கேட்டி சேகர சேனற்
கென்னுடை ஆணை யிதனை அறிவி.
குலூத வேந்தன் சித்திர வன்மன்,
மலய மன்னன் சிங்க நாதன்,
காசுமீ ரத்துப் புட்க ராக்கன்,
சிந்து நாட்டுச் சுடேண மன்னன்,
பாரசீ கத்துமேக நாதன்,
என்னுமிவ் வைவரும் இராக்கதன் நண்பர்.
நம்முடல் தம்மை நாசஞ் செய்வதால்,
சந்திர குப்தனைச் சார விரும்பினர்.
முதற்கண் மொழிந்த மன்னர் மூவரும்
எனாது நிலம்பெற இச்சித் தனராம்.
அதனால் அவர்தமை ஆழ்குழி வீழ்த்தி

மண்ணினைத் தள்ளி மாய்த்திடு. பின்னர்
எஞ்சிய இருவரும் என்கரிப் படையினை
வேண்டின ராகலின் வெங்கரி தம்மால்
கரைந்தே கலுழக் கொன்றிடு கடிதினில்.

**பாசுகன்** : அங்ஙன மேயான் ஆணை ஆற்றுவென் (போகின்றான்)

**மலயகேது** : (சினத்துடன்)
இராக்கத, இராக்கத, மலய கேதுயான்.
நம்பியைக் கொன்ற நல்லிராக் கதனலேன்!
போதி, மோரியன் பணிபுரி விழைவுடன்.
விஷ்ணு குப்தனும் மோரிய வேந்தனும்
உனக்குத் துணையாய் உறுவ ரெனினும்
அநீதி யொன்றே அறம்பொருள் இன்பம்
அழிப்பது மான அழிக்கும் ஆற்றலேன்.

**பாகுராய** : காவலன் மகனே காலம் கழித்தலென்?
இயக்குக படையினை இன்னெழிற் பாடலம்
முழுவலி கொண்டே முற்றுதல் கருதி.
பத்தியின் இயங்கும் பாய்மா அனைத்தும்
நுதியார் குளம்பினைக் கதியால் வைத்தலின்
மிகைபடு தொகுதியாய் மீதெழு புழுதி
கந்து சுளித்தெழு களிறுகள் யாவும்
மதநீர் சொரிவதால் மாய்வதன் முன்னம்
மாணலர் சென்னியில் மண்டிப் படிக.
சுரும்பின மென்னச் சுருண்ட மகளிர்
கருங்குழற் படிந்து வெண்ணிற மாக
உலோத்திர மலரின் உறுபொடி அப்பிக்
கடிமண நாறும் கௌட நாரியர்
கன்ன மீமிசைக் கறையெனப் படர்க.

**இராக்கதன்** : (குழப்பத்துடன்)
அந்தோ! ஆ ஆ! அருந்துயர்! அளியர்
சித்திர வன்மனும் சீர்த்திப் பிறரும்
கொல்லப் பெற்றனர் குமர னாணையால்.
எங்ஙனம் இதுதான்? ஏழை இராக்க தன்!
நண்பரைக் கொலவே நனிமுயன் றனனால்.
பகைவரைப் படுத்திலேன் பல்வகைச் சூழ்ச்சியால்.
நற்பே றில்லா நானென் செய்கேன்?
தவவனம் செல்வெனோ? தவத்தால் மனப்பகை
மாயா தந்தோ! மருவலர் வாழ
நந்தர் புகுந்த நாகம் புகுவெனோ?
நாரியர்க் கேயிது நனியும் தக்கது!

வாளே துணையாய் வலிகெழு படைஞர்
இடையே வீழ்வெனோ? இது நன்றன்றே. 630
மனமோ நன்றியை மறவா திருப்பின்
சந்தன தாசன் சார்சிறை நீக்க
விரைவில் என்னைத் தடுக்கும் திண்ணமே. 633

(அனைவரும் போகின்றனர்)

**மறை பொருளெழுத்தெனும் ஐந்தாம் அங்கம் முற்றும்.**



# ஆறாம் அங்கம்

## போலி யாப்பு

(பின்னர் ஆடை அணிகலன் ஆகியவற்றால் தன்னை ஒப்பனை
செய்துகொண்ட சித்தார்த்தன் மகிழ்ச்சியொடு வருகின்றான்)

**சித்தார்த்** : கேசியைக் கொன்ற கேசவன் வாழிய.
மழைநிற வண்ணன் வாழியர் வாழியர்.
மக்கள் விழிகளின் நல்விருந் தாகும்
சந்திரன் போன்ற சந்திர குப்தனும்
வெற்றி வினைகள் வேண்டிய செய்தே
ஒன்னலர் குழுவினை ஒடுக்கித் தேய்த்த
சாணக் கியனார் சாற்றரு நீதியும்
வாழிய வாழிய விரிநீ ருலகினே.
சார்ந்த நண்பன் சமித்தார்த் தகனைப்
பலநாட் கழித்துப் பார்க்கின் றேன்யான்.

(இயங்கிப் பார்த்து)

இதோவென் இன்னுயிர் நண்பன் இந்த
வழியே வருகின் றானே, வரட்டும்
நெருங்கச் சென்றே நேரிற் காண்பேன்.

(சமித்தார்த்தகன் வருகின்றான்)

**சமித்தார்த்** : துன்பம் போக்கலில் தூய்மதி போன்று
நங்குடும் பத்தில் நாளும் கிழமையும்
வந்தால் தாமும் இன்பம் எய்துறு
நெஞ்சு கலந்த நண்பர் இன்றிக்
காசும் பணமும் கடுந்துய ரப்பா!
மலய கேதுவின் சேனை விட்டுச்
சித்தார்த் தகன்தான் சிலநாள் முன்னம்
வந்தே சேர்ந்தனன் என்னும் வதந்தி
காதிற் பட்டது; காண்பேன் போகி.
(சிறிதே இயங்கி முன்னர் நோக்கி)
இதோ எனது இன்னுயிர் நண்பன்!

**சித்தார்த்** : (நெருங்கி)
சமித்தார்த் தகனே, சேமம் எப்படி?

(ஒருவருக்கொருவர் தழுவுகின்றனர்)

**சமித்தார்த்** : சேனை விட்டே சேர்ந்தனை ஊரை
எண்ணத் தொலையா எத்தனை நாட்கள்
கழிந்தே போயின! காண்பதற் கிலையே.
வீடு வந்திலை விளைத்திலை மகிழ்ச்சி!

**சித்தார்த்** : மன்னிக்க வேண்டும் தம்பி-அதுதான்,
சாணக் கியரெனைச் சாடையாய்ப் பார்த்துச்,
சந்தோஷ மான சங்கதி ஒன்றை,
மாரா சர்க்கு மகிழ்வுடன் சொல்லென,
உத்தர விட்டனர். ஓட்டமாய் ஓடி,
உரைத்தேன் செய்தி. உறுபுகழ் அரசர்
மகிழ்வுடன் ஈந்த மாபெரும் பரிசில்
பார்என் உடம்பில்! பார்த்திவர் அருளு!
உன்வீட் டுக்கே உன்னைப் பார்க்க
வருகிற வழியில் வந்தாய் கண்டாய்.

**சமித்தார்த்** : நோக்கிற் கினிய சந்திர குப்தரைச்
சார்ந்துநீ சொன்ன மகிழ்ச்சிச் சங்கதி
என்ன அண்ணே? எனக்குச் சொல்லக்
கூடு மானாற் குறிப்பாய்ச் சொல்லேன்.

**சித்தார்த்** : உனக்கு உண்மையை ஒளிப்பனா தம்பி!
கருத்துடன் கேளு; அருமை ஆரியர்
சாணக் கியனார் செய்த சூழ்ச்சியால்,
மலய கேது மதிமயங் கிப்போய்,
இராச்சஸ மந்திரி இருந்தது போதும்
என்றே பதவியில் இருந்தே எடுத்துப்
போட்டான். போட்டது மல்லால், பொக்கெனச்
சித்திர வன்மன் முதலிய சிறந்த
ஐந்து மன்னரை அடித்துக் கொன்றான்.

இருந்த அரசர் இந்தச் செயலைப்
பார்த்து, அரசன் பாவி, கொடியன்,
என்றே அஞ்சி இமைப்பொழு தினிலே,
இவனை விட்டே, அவரவர் நாட்டினை,
ஒடுங்கிப் போன ஊக்கத் தோடே,
அடங்கிய படையொடும், அஞ்சி நடுங்கும்
வேலை யாளொடும், விரைவில் அடைந்தனர்.
இச்சம யத்தில் இருந்த தலைவர்
பத்திர படனும், புருஷ தத்தனும்,
திங்க ராதனும், திண்பல குப்தனும்,
பாகுரா யணனும், ராஜ சேனனும்,

உரோகி தாக்ஷனும், விசய வன்மனும்,
மலய கேதுவைப் பிடித்துக் கட்டினர்.

**சமித்தார்த்** : அண்ணே அதென்ன? அந்தப் பத்திர
படனும் பிறரும் பகைவர் போலே
சந்திர குப்தர் ஆகா ரென்றே
விட்டுத் தொலைத்து, மலய கேதுவை
ஒட்டினா ரென்றே உலகம் எண்ணுது!
அதென்ன ஆற்ற மாட்டாக் கவிதான்
செய்தநாடக நூலைப் போலே
முதலில் ஒண்ணு முடிவில் ஒண்ணா?

**சித்தார்த்** : சாணக் கியனார் செய்யும் சூழ்ச்சிகள்
விதியைப் போல விளங்கா தம்பி.
கையைக் குவித்துக் கும்பிடு போடணும்

**சமித்தார்த்** : அப்புறம் அண்ணே ஆன தென்ன?

**சித்தார்த்** : அப்புறம் ஆரியர் சாணக் கியர்தாம்
ஆற்றல் மிக்க அரிய படையொடு
அங்கே சென்று அவர்தமை அடர்த்துத்
தலைவர் தனியே தவிக்க விட்ட
மிலேச்சப் படைகளை மிச்சமி லாமல்
சுற்றிச் சூழ்ந்தே பற்றிக் கொண்டனர்.

**சமித்தார்த்** : இப்போ தவையெலாம் எங்கே அண்ணே?

**சித்தார்த்** : அங்கே தம்பி, அதோ பாரு!
கறுத்த மேகம் கிடுகிடு வென்றே
இடித்துப் பொழிந்தால் எப்படி? அப்படி
அங்கே ஆனை யெல்லாம் அடக்க
முடியா மதநீர் சொரிந்தே கலித்துப்
பிளிறித் திரண்டேஓடுது, பாய்மா
சிவுக்கென அடிக்கும் சவுக்கடிக் காகக்
கழுத்து நடுங்கிக் கடலலை போலே
காட்டி, வெற்றி முழக்கம் கேட்டு,
முடுகி யோடி ஒருபுறம் சேருது.

**சமித்தார்த்** : அண்ணே அதுதான் அப்படி ஆச்சுது.
சாணக் கியர்தாம்-மந்திரி வேலை
வேண்டா மென்று வெளிப்படை யாகச்
சொல்லிப் போட்டு மறுபடி அவ்விடம்
அமர்ந்த விதந்தான் கொஞ்சம்..........

**சித்தார்த்** : அவர்தம் மனத்தை ஆழம் பார்க்க

உன்னால் முடியுமா? சொன்னால் தம்பி,
இராச்சஸர்கூட இவர்தம் மனத்தை
அறிய வில்லையே, அறியாத் தனந்தான்!

**சமித்தார்த்** : இராச்சஸர் இப்போ தெங்குளர் அண்ணே?

**சித்தார்த்** : இப்படித் தம்பி இங்கே வதந்தி.
சாணக் கியர்க்கும் சங்கதி வந்தது.
சண்டைக் குழப்பம் சலசலத் துப்போய்
நிற்கும் போது மலயனை விட்டனர்
இராக்கத மந்திரி எழிலார் பாடலம்
வந்து சேர்ந்தனர். மந்திரி நிழல்போல்
ஓடித் தொடர்ந்த ஒற்றன் உதும்பரன்
உளவுகள் அறிந்தே உலவுகின் றானாம்.

**சமித்தார்த்** : அண்ணே அவர்தாம் அந்நாள் தொடங்கி
நந்த ராச்சியம் நமக்கே வேண்டும்
என்றே இவ்வூர் விட்டு வெளியே
போயி வேலை செய்தார். பயன்தான்
இல்லை. இப்போ இங்கேன் வந்தார்?

**சித்தார்த்** : சந்தன தாசர் சிநேகம் தம்பி!

**சமித்தார்** : சரிதான், சந்தன தாசரின் விடுதலை!

**சித்தார்த்** : அதுதான் இல்லை; அதிர்ஷ்டம் வேண்டாம்?
விடுதலை! சரிதான்! நன்றாய் விட்டார்!
அமைச்சர் ஆணையை அறியாய் தம்பி.
நீயும் நானும் சந்தன தாசனைக்
கொலைக்களம் கூட்டிப் போயி, பாவம்,
கொன்றிட வேணும்; கேட்டியா தம்பி.

**சமித்தார்த்** : (சினத்துடன்)
சாணக் கியரா சொன்னார்? அண்ணே
ஆளா யில்லை அவருக் குத்தான்?
கோரக் கொலைக்கு வேறே ஆளு
இல்லையா? அண்ணே என்ன இவரு-?

**சித்தார்த்** : தம்பி, பொறு பொறு; தாண்டி விழாதே.
உயிரை வைத்தே, உலகினில் வாழ
ஆசை யுள்ளவர் ஆரா னாலும்,
மந்திரி ஆணையை மீறவே மாட்டார்.
சரிவா, சண்டாள வேஷம் சரியாய்க்
கட்டிக் கைதியை நெட்டிக் கொலைக்களம்
கொண்டே கொன்று போடுவோம். வாய்யா.

(இருவரும் போகின்றனர்)

(பின்பு சுருக்குக்கயிறுங் கையுமாய் ஒருவன் வருகின்றான்)

ஆறு குணத்தால் அதிபலம் பெற்றே,
நயம்பல கொண்ட நற்சுருக் குடைய,
பகைவரை உயிரொடு பற்ற வல்ல,
சாணக் கியரின் நீதிக் கயிறுதான்
வாழிய வாழிய வளமா ருலகினே.

(மெல்ல நடந்து சுற்றிப் பார்க்கின்றான்)

சாணக் கியரின் சாரன் உதும்பரன்
சொன்ன இடமிது. சொன்ன ஆணையால்
இராக்கத ஐயரை இங்கே காண்பேன்.

(சுற்றிப் பார்த்து)

இதோபார், இராக்கதர் இந்தப் பக்கமாய்
முக்கா டிட்டே வருகுவர். நானும்
பழஞ்சோ லையிதில் பலமர நடுவே
மறைவா யிருந்தே மந்திரி இராக்கதர்
எந்த இடத்தில் இருக்கை கொள்வார்
என்றே காண்பேன் ஏற்ற ஆணையால்.

**இராக்கதன்** : (கண்ணீர் வடித்து)
ஆட்சியின் திருவே-'ஆர்துணை செய்வார்'
என்றே போலும் ஏங்கிய நெஞ்சினள்,
பொதுமகள் போலப் புக்கனள் புறமனை.
சென்றவர் பின்னே செல்லும் மக்களும்
அவளுடன் சென்றனர் அன்பினைத் துறந்தே.
நம்பின நண்பரின் நோன்தாள் அனைத்தும்
பயந்தில வாதலின், பணியும் விட்டனர்
தலையிலா உடலெனத் தரைவாழ் கின்றனர்!

மேலும்,

அரசின் செல்வி அவள்தன் கொழுநன்
உலகின் தலைவன் உயர்குடி வந்தோன்
ஒருவனை ஏதோ ஒருகா ரணத்தால்
விட்டனள், விருடல வேந்தனை அடைந்தனள்,
இழிமகள் போல இருந்தனள் அவனுழை.
நிலைபெற, நாமென் செய்தல் கூடும்
நடலை விதிதான் நண்ணலர் போல
அடுத்தடுத் தாற்றும் ஆள்வினை தம்மைப்

பயனளி யாமல் பாழ்படச் செய்தால்!
யானே,
பொல்லா விதியின் பொருத்தமில் செயற்குப்
பொருந்தா மன்னன் விருந்தா யினனெனப்
பருவதே சுரனைப் பாலனத் தலைமையில்
வலிதின் முயன்றே வைத்தேன், அவனும்
ஆருயிர் துறந்தான். அவனை யடுத்தே
அவன் மகன் அரசினை அடைந்தும்,
கருதிய காரியம் கைவர வில்லை.
ஆதலின் விதியே நந்தர் குலப்பகை;
அமைச்ச அந்தணன் அல்லன் மன்ற.
அந்தோ! மிலேச்சன் அறியா மைதான்!
அடங்கலர் தம்மால் அலக்கண் உறாமல்
இன்றும் இராக்கதன் இறந்த தலைவரை
எண்ணி யெண்ணி இன்பணி புரிகுவன்.
இன்னுயி ரோடிவன் இவ்வுடல் சுமந்தே
இடனார் உலகில் இருக்கும் அளவும்
இல்லா அறிவால் மலயன் இதனை
சூழான் வறிதும். விதியார் வலிதான்
தலைக்கொள் காலை மதியெலாம் வேறாம்.
நண்ணல ரோடே மன்னினன் அமைச்சன்
என்பது எங்ஙனம் இயையும்? ஆதலின்,
இத்தகை நிலையினும், இராக்கதன் இன்னுயிர்
ஈந்தே இறத்தல் அன்றி, இழிவார்
அடங்கலர் கையில் அகப்படான் என்றும்.
'வஞ்சின முடிக்க வலியிலன் இராக்கதன்'
எனவரும் பழியினை ஒருகால் விழையினும்,
வஞ்ச மியற்றி வென்றனர் பகைவர்
எனவரும் உரையை என்றும் விழையான்.

(கண்ணுங்கண்ணீருமாய்ச் சுற்றிப் பார்த்து)

பாடல் சான்ற பாடலப் பதியின்
எல்லை இதுவே; இத்தலை, அந்நாள்
நந்தர் நடந்து நடந்து நனியும்
புனிதம் வாய்ந்த புண்ணிய நீரது.
முன்னர் இங்கே,
மன்னர் பெருமான், மாணுளைப் பரிமா
இவர்ந்தே, காற்றினும் கருத்தினும் கடுப்புடன்
சென்றே, ஞெரேரெனக் கலினம் தளர்த்தி,
வில்லினைக் குனித்தே வாளிகள் ஏவி,
அசைந்திடு குறிகளை அனைவரும் வியக்க,
அணுவும் பிழையார் அடித்தே மகிழ்வர்.

இவ்விள மரக்கா எழிலுடன் இருந்தது;
இத்தலை மன்னர் ஏனை வேந்தொடு
பேசிய தாகும். பார்க்கப் பார்க்கப்
பெருந்துன் பந்தான் பெருகுமிவ் விடத்தே.
அந்நாட் கழிந்தன அவரெலாம் போயினர்.
எங்குச் செல்கேன் ஏழை யானே?

(சுற்றிப் பார்த்து)

ஆவா, பழக்கா இதனிற் புகுந்தே,
சந்தன தாசனைச் சார்ந்த செய்தியை
ஆரிட மாயினும் அறிந்தே மகிழ்வேன்.
இடனார் உலகில் இன்பமுந் துன்பமும்
மக்கள் அறியா வண்ணம் வந்திடும்!
எந்தம் நந்தர் இருந்த அந்நாள்
மன்னன் மான மெல்லடி வைத்தே.
ஆயிரக் கணக்கின ரானசிற் றரசர்
என்னைச் சூழ்வர இளம்பிறை மதியினைச்
செறிவிரல் தம்மாற் சுட்டுவ தென்ன,
நகரினர் எனையே நனியுஞ் சுட்ட,
நடந்தனன் இங்கே; நடந்த யானே
பழம்பதி யுடுத்த பழஞ்சோ லையிலே,
விதிர்விதிர்ப் புடனே மெல்லடி வைத்தே,
அச்ச மிகையால் அற்றம் நோக்கும்
திருடனைப் போலத், திடமார் முயற்சிகள்
தீர்ந்தன வாகி, நடந்து வருவல்.
எவரான் எனக்கு எண்ணில் நல்லன
விளைந்தவோ அவரெலாம் விண்ணுல கடைந்தனர்!

(புகுந்து சுற்றிப்பார்த்து)

அந்நாள் மலர்க்கா அழகிழந் ததுவால்!
சிற்பத் தொழிலமை சீரிய மாட
மேனிலை தானே மாணறம் இயற்றிய
பெருங்குடி யொன்று பொன்றிய தென்ன
இடிந்தும் பிளந்தும் இற்றுவீழ்ந் ததுவே.
நண்பரின் மாய்வால், நல்லோர் இதயம்
வற்றிய தென்ன வறண்டதிப் பொய்கையும்.
நற்குண மில்லா நவையார் வேந்திடைப்
பொருந்திய சூழ்ச்சிகள் பயன்தரா வாறே,
பயன்மரந் தாமும் பழுத்தில நின்றன.
கயவர் நெஞ்சினுள் கள்ள வுரைகள்
பம்பிய வென்னக் கப்பின பசும்புலும்.
நனியும் கூரிய நீளார் நவியம்

பாய்தலின், பாசிலைப் பயன்மரக் கிளைகள்
பெரும்புண் ணேற்றுப் பெருகிய நோவைக்
குறுகுறு புறவின் குரலால் தெரிப்பக்,
கண்ணாற் கேட்ட கட்செவி யெல்லாம்,
உலவா அருளால் உஸ்ஸென ஊதி,
பழங்கண் அடைந்தார் பழகியோர் என்னத்
தத்தம் உரியால் இரத்தம் பெருகும்
புண்ணைப் பொதிந்தே பிணித்துப் போற்றுவ.
தண்ணீர் இல்லாத் தவசித் தருக்களின்
வற்றிக் காய்ந்த பெற்றியை, ஆண்டுள
புழுக்கள் பற்றின புகுந்தன உண்மரம்.
மேன்மேற் சென்றே, மெல்லக் குடைந்தன.
உள்ளுறு துன்பம்-உலவாக் கண்ணீர்
பெருக்கிப் பேசும் பெற்றியிற் போலப்
போந்தது மரத்தூள். போயின இலைகள்.
முழுகின துன்பம் முதுகாட் டிற்குச்
செல்வது போலத் தோற்றம் தருமே.
இதற்குள் யானும் ஈதோ காணும்
பொல்லா விதிதான் பொருந்திப் பிளந்திறு
கன்மிசை மூர்த்தம் கவலோ டிருப்பன்

(இருந்து கேட்கின்றான்)

ஆவா, அஃதென் அசதியில் முழக்கம்?
பறையொலி சங்கொலி பலவகை வாச்சியம்
எல்லாம் இயைந்தே இனிதின் இயம்பச்
செவித்துளை புகுந்து செவிசெவி டாக,
மாளிகை யெல்லாம் மாணொலி பருகிக்,
கான்ற கலகல ஒலிதான், களிப்பொடு
பலதிசை களிலும் பரவிச் செலுமே.

(ஆய்ந்து)

ஆஆ அறிந்தேன்; அதுதான், மலயனைப்
பிணித்த பெருமகிழ் வதனால், அரச
குலத்துள் (அசூயையோடு) மோரியன் குலத்துள்
முழக்கம்!

(கண்ணீர் பெருக்கி)

கஷ்ட மையா, கஷ்டம் கஷ்டம்.
கேளார் ஆக்கம் கேட்க வைத்தது!
இழுத்து வந்திதனைக் காணவும் செய்தது!
ஊழ்தான் இதனை உணரச் செய்ய
எடுத்தது போலும் எஞ்சா முயற்சியை.

**மனிதன்** : அவனும் அமர்ந்தான். ஆரியர் ஏவிய
ஆணையை, ஈங்கே ஆற்றுதல் வேண்டும்.

(இராக்கதனைப் பாராதவன் போல அவன் எதிரிலேயே கையில் உள்ள கயிற்றால் கழுத்தில் சுருக்கிட்டுக் கொள்கின்றான்.)

**இராக்கதன்** : (அவனைப் பார்த்து)
என்னைப் போன்றோர் ஏழை மனிதன்,
கைக்கயிற் றாலே கழுத்திற் சுருக்கித்,
தொங்க விரும்பினன் அந்தோ ஏனிது?
நல்லது, இவனை நானே கேட்பேன்.

(மனிதனை நெருங்கி)
நல்லோய், என்செயல் நவில்தி எனக்கே?

**மனிதன்** : (கண்ணீர் வார்த்து)
நண்பர் மாய்வால் நடலை நண்ணி
வருந்தும் நற்பே றில்லா எவர்க்கும்
ஏற்ற திச்செயல் ஆரியர் பெரும.

**இராக்கதன்** : என்னைப் போன்றோர் ஏதில் ஏழை
என்பது திண்ணம். எதுவோ செய்தி?

(வெளிப்படையாய்)

என்போன் றவனே, இந்தச் செய்தி
மறையன் றாயின், மாபெரி தன்றெனில்,
கேட்க விழைவன் கிளத்தி பெரிதே.

**மனிதன்** : ஆரிய, மறையும் அன்றே; மாபெரி
தன்றே. ஆருயிர் நண்பர் அழிந்த
இன்னலால் வருந்தும் இதயம் உடையேன்.
இறந்தே போக இத்தனை காலம்
போக்கிய தன்மையைப் பொறுக்கவே மாட்டேன்.

**இராக்கதன்** : (பெருமூச்சுவிட்டுத் தனக்குள்)
நண்பன் பேரிடர் மூழ்கி வருந்த,
கவலையே இன்றிக் காலம் கழிக்கும்,
எம்போ லியர்க்கிது இயைந்த கற்பே.

(வெளிப்படையாய்)

மறையும் இன்றேல், மாபெரி தன்றேல்,
நல்லோய், நானதை விழைவன் கேட்க.

**மனிதன்** : அச்சோ, ஆரியர் அழுத்திக் கேட்கிறார்.
வேறு கதியிலை; விட்டுச் சொல்வேன்.

இந்தப் பதியில் இரத்தின வணிகர்
விஷ்ணு தாஸர்! தெரியுமா அவரை?'

**இராக்கதன்** : (தனக்குள்) உளன், தெரியுமே! உற்ற நண்பனே
விஷ்ணுதா சற்குச் சந்தன தாசன்!

(வெளிப்படையாய்)

அவனுக் கென்ன அடைந்த திப்போது?

**மனிதன்** : அவரென் ஆருயிர் நண்பர் ஆரிய.

**இராக்கதன்** : (மகிழ்ச்சியொடு தனக்குள்)
ஆருயிர் நண்பன் அவனுக் கென்னின்
நனியும் நெருங்கிய தொடர்புடை யவனே.
சந்தன தாசன் செய்தியும் அறிவான்.

(வெளிப்படையாய்)

நல்லோய், நண்பனுக் கென்னுற் றதுவே?

**மனிதன்** : அவர்தான் இப்போ,ஆடை, அணிகலன்,
வீடு, வாசல், சொத்துச் சுதந்திரம்
எல்லாம் ஏழைக் கிறைத்துப் போட்டு,
நெருப்பில் விழற்கு நகர்ப்புறம் சென்றார்.
கேட்கவும் கொடிய சங்கதி காதில்
விழுமுன், நானும் தூக்கில் தொங்கிச்
சாகவே வந்தேன் சீர்கெடு சோலை.

**இராக்கதன்** : நண்பன் நள்ளெரி புகுதலின் காரணம்?
மருந்தால் தீரா மாபிணி யாலோ?

**மனிதன்** : இல்லை ஆரிய, இல்லை எதுவும்?

**இராக்கதன்** : எரியினைக் கடுவினை ஏய்க்கும் ஏந்தலின்
சினத்திற் கிலக்காய் வெளியே றினனோ?

**மனிதன்** : ஆரிய, ஆண்டவன் அருள்க பெரிதும்.
சந்திர குப்தரின் செங்கோல் ஆட்சியில்
தீமையும் உண்டோ தினையள வேனும்?

**இராக்கதன்** : காதற் காரிகை கைப்பட விலையோ?

**மனிதன்** : (காதினைப் பொத்தி)
அரஹர சிவசிவ, அவர்களா அப்படித்
தப்பு வழியிலே? அப்பழுக் கேது?

**இராக்கதன்** : உன்போ லவனும் உற்ற நண்பனை
இழந்தே இன்னல் உழந்தனன் கொல்லோ?

**மனிதன்** : ஆமாம் ஆரிய, அதுவே அதுதான்.

**இராக்கதன்** : (பரபரப்போடு தனக்குள்)
சந்தன தாஸன் நண்பன் அவனே
என்னக் கேட்டும், இத்தகை நண்பனின்
இழப்பே எரிவீழ் செயலுக் கியைந்த
காரண மெனவும், கேட்டவென் னிதயம்
அன்பி னாகிய பற்றின் வாயிலாய்
என்னுளே நடுங்கும்; ஏங்கும்; அலமரும்.

(வெளிப்படையாய்)

அவன தழிவிற் கமைந்த வற்றையும்,
அழிவு குறித்தே ஆருயிர் ஈயும்
நண்பனின் நல்ல வரலாற் றினையும்,
கேட்க ஆசை; கிளத்தி அன்பனே.

**மனிதன்** : இந்தப் பாவி இனியொரு கணமும்
தொங்கிச் சாகத் தாமதம் செய்யான்.

**இராக்கதன்** : கேட்க வேண்டிய கதையைச் சொல்லுதி.

**மனிதன்** : கதியிலை, செய்வதென், கேட்டிர், கூறுவன்.

**இராக்கதன்** : நல்லோய் நன்றாய்க் கேட்பன் சொல்லுதி.

**மனிதன்** : இந்நகர் ஒருசார் இரத்தின வாணிகர்
சந்தன தாசர் என்பவர் உளரால்.

**இராக்கதன்** : (வருத்தத்தோடு தனக்குள்)
இங்கே விதிதான் இன்னற் கதவினை
நன்னர்த் திறக்கும்; நெஞ்சே நிலைநில்!
ஆற்றுதற் கரிய அருந்துயர் கேட்பை.

(வெளிப்படையாய்)

நல்லோய் கேள்வி, நண்பர்க் கினியன்.
நல்ல பண்பினன். நிகழ்ந்தவை அவற்கே?

**மனிதன்** : அவரிவ் விஷ்ணு தாசரின் நண்பர்.

**இராக்கதன்** : (தனக்குள்)
இன்னல் இடியிதுஇதயத் தருகே.

**மனிதன்** : விஷ்ணு தாசர் விருடல வேந்திடை
வீழ்வுறு விழுத்தகை நண்பர் சார்பிலே
விண்ணப் பித்தே வேண்டினர் இதனை.

**இராக்கதன்** : அதுதான் யாதென அறைக எனக்கே

**மனிதன்** : அடியேன் இல்லில், குடிபுரத் தற்காய்
அளக்க லாகா அரும் பொருள் உண்டு :
போதிய பொருளவை ஏற்றுத், தேவர்
சந்தன தாசரைச் சிறைக்கண் ணிருந்தே
விடுதலை செய்கென, வேண்டினர் ஆரிய.

**இராக்கதன்** : (தனக்குள்)
நன்று விஷ்ணு தாச, நன்றே.
நண்பர்ப் பற்றினை நிறுவினை ஆவா!

(ஏனெனில்)

அரும்பொருள் ஏதுவாய், அயலான் போலத்
தந்தையர் புதல்வரை; புதல்வர் அவர்தமைப்
பொறுக்கரும் இன்னலுட் புகுத்திக் காண்பர்;
நண்பர் நண்பரின் நட்பையும் விடுவர்.
பிரித்தற் காகாப் பொருளின் பற்றினை
நண்பன் திறத்துத் துன்பெனத் துறந்தநீ,
வணிகனே யாயினும், நின்பொருள் விழுப்பொருள்!

(வெளிப்படையாய்)

இங்ஙனம் நண்பன் இரந்த பின்னர்
மோரிய வேந்தன் விடையென் சொன்னான்?

**மனிதன்** : இப்படி அவர்தாம் இரந்து கேட்டார்.
சந்திர வேந்தர் இப்படிச் சொன்னார்.
''விஷ்ணு தாஸ, விளங்கக் கேட்க.
சந்தன தாசரைச் சிறையில் போட்டது
பணத்துக் கில்லை. பாவி ராக்ஷஸர்
குடும்பத் தினரைக் கரந்து போற்றினர்
என்றுதான் யார்க்கும் தெரியும் இதுவும்.
பலமுறை கேட்டும் கொடுத்திலர் அவர்தமை.
ஆதலின், அந்த மனைவியைப் பிறரை
விட்டால் விடுதலை சிறைக்கண் இருந்தே.
இல்லா விட்டால் இவர்தலை 'இரவல்'
என்றே சொல்லி, எங்கள் வேந்தர்
''சந்தன தாசரை உந்திக் கொலைக்களம்
கொண்டு போங்கள் கொலையா ளிகளே''
என்றோர் உத்தர விவர்கட் கிட்டார்.
விஷ்ணு தாசன் விளங்கக் கேட்டு
நண்பன் சாகு முன்னம் நான்போய்
நெருப்பிற் குளித்தே சாவே னென்றே

நகரினை விட்டான். நானும் அவர்தாம்
சாகும் முன்னர்ச் செய்தி தானும்
செவிப்படு வதற்குள் மாய்தல் நன்றென
சுருக்குக் கயிற்றால் தொங்குதற் கென்றே
புற்கெனும் சோலை பொள்ளென அடைந்தேன்.

**இராக்கதன்** : நல்லோய் சந்தன தாசர் கொலைப்பட இலையே?

**மனிதன்** : படுவார் இப்போ. அவர்தான்
மந்திரி இராக்கதர் சுற்றத் தாரை
விட்டுவி டென்றே மீண்டும் மீண்டும்
இரக்கப் படுவர். இன்னுயிர் நண்பர்
மீதுள பற்றால் வழங்கிலர்' தாசர்.
இக்கா ரணத்தால் காலம் போக்க
என்னால் இயலுமா? இக்கணம் மாய்வல்.

**இராக்கதன்** : (தனக்குள் மகிழ்ச்சியுடன்)
சந்தன தாச, சான்ற நண்ப,
நல்லது நல்லது, நன்றே செய்தனை.
அந்நாள், அடைந்ததன் அல்லல் தீரிய
சீரை புக்க சீர்சால் சிபியினும்
சிறந்தோன் நீயே; சிபிதான் அடைந்ததன்
கண்முன் ஏறினன் பண்பார் துலைமிசை.
நண்பர் இன்றியும் நாரால் நாறிச்
சீர்த்தியை ஈட்டினை சீரிய நண்ப.

(வெளிப்படையாய்)

நல்லோய், நடநட, தாமதம் வேண்டா;
விரைந்தே போகி, விஷ்ணு தாசரை
நெருப்பினில் விழாதே நிறுத்தி யருள்க.
நானும், நண்பன் சந்தன தாசனைச்
சாவா வண்ணம் விலக்கிடப் போவேன்.

**மனிதன்** : சாவி னின்றும் சந்தன தாசனைக்
காக்க வழிதான் காணோம். வழியெது?

**இராக்கதன்** : (வாளினை உருவி)
நீலக் கருநிற நீர்சால் மேகம்
மறுஇல் வான்மிசை வயங்கிய தென்னப்,
போரூக் கத்தாற் புளகம் போர்த்துக்,
கனவினும் பிரியாக் கருதரு நட்பாய்க்,
கூரிய வாயுடைக் கரவா ளிதுதான்—
பொங்கிய போர்க்களக் கட்டளை மீமிசை,

நண்ணார் கண்ட மிகைபே ராற்றல்
சான்ற தெனினும், நட்பின் பற்றால்
நன்றெனத் தீதென வறிதும் கருதாத்
துணிசெயல் இதுசெய்த் தூண்டுமா லின்னே.

**மனிதன்** : ஆரிய, இங்ஙனம் ஆருயிர் நண்பர்
சந்தன தாசர்க் கின்னுயிர் தரலால்
விதியார் விளைவினுக் கிலக்கா கியநீர்
உலகினர் அறிந்தஉறுமதி அமைச்சர்
இராக்கத ரோவென எனமனம் ஐயுறும்.
நற்பே றுடையேன் நுந்தமைக் கண்டனன்!

(அவனது அடியில் வீழ்கின்றான்)

**இராக்கதன்** : எழுந்திரு எழுந்திரு; ஏன்வீண் காலம்?
சந்தன தாசரைச் சாவா வண்ணம்
இங்குள இராக்கதர் காப்பார் எனவே
விஷ்ணு தாசரைத் தெரிவி போகி.

('நீலக் கருநிற' எனத்தொடங்கும் அடிகளைச் சொல்லி
உறை நீத்த வாளுங் கையுமாய் உலவுகின்றான்)

**மனிதன்** : ஐய மகற்றி அருளுக ஆரிய.

**இராக்கதன்** : மன்னர் குலத்தினை மாயக் கண்டவன்,
ஆருயிர் நண்பர்க் கழிவினை விளைத்தோன்,
இறப்ப இழிந்தோன், இன்னாப் பெயரினன்,
இராக்கதப் பெயர்க்கே இயைந்தவன்-நான் தான்.

**மனிதன்** : (மீண்டும் மகிழ்ச்சியுடன் அமைச்சர் அடிவீழ்ந்து)
ஐயரைக் கண்டது அதிசயம்; பேறு.
அமைச்சர் அடிகாள், அருளல் வேண்டும்.
உண்மை நிகழ்ச்சி ஒன்றனை உரைப்பேன்.
முன்னம் ஒருநாள், மோரிய வேந்தர்,
சகட தாசனைச் சார்ந்தே பற்றிக்,
கொலைக்களங் கொடுபோய்க் கொலைசெய் திடுமின்
எனவோர் ஆணையை இட்டனர்; அதன்படி
அவனும் சென்றான். அப்போ தங்கே,
ஆரோ அவனைத் தூக்கி ஓடி,
அயல்நாட் டிற்கே கொண்டுபோய் விட்டான்.
மண்டிய சினத்தர் சந்திர குப்தர்,
'எதனால் இதுவே' என்றெலாம் ஆய்ந்தே.
கொலையா ளிகளைக் கொன்றே போட்டுத்,
தணித்துக் கொண்டார் தாங்கருஞ் சினத்தை.
அந்நாள் தொட்டே, அக்கொலை மாக்கள்

ஆரா யிருப்பினும், ஆயுதம் தாங்கி,
அவர்க்கு முன்னோ அவர்க்குப் பின்னோ
வருவதைக் கண்டால், விழிப்புடன் இருந்தே,
தம்மைத் தாமே காத்துக் கொள்ளக்,
கொலைப்படு மகனைக் கொலைக்களத் தேயே,
ஒன்றையும் பாரார் கொன்றே போடுவர்.
ஆதலால், அமைச்சர் பெரும, அங்கே
நீங்கள் கத்தி பிடித்தே நெருங்கினால்,
நண்பரைக் குறுகி நச்செனக் கொல்வரே.

இராக்கதன் : அந்தோ குடிலன் அரச நீதிகள்
அறிதற் கரிய; அனைத்தும் வியப்பின.

ஏனெனில்,

மோரியன் சூழ்ச்சியாற் சகட தாசன்
என்னிடம் வந்திடின், எழுந்த சினத்தொடு
கொலைவினை மாக்கள் கொல்லப் பட்டதேன்?
சகடன் வரவே சலமில தாயின்
அத்தனை துன்பம் அடைந்த தெப்படி?
இப்படி என்மனம் இருபாற் பட்டுத்
துணிவினைப் பெறாமல் துன்புறு மாலோ.
ஆய்ந்து,
வாளித னுக்கே வறி தும் வாய்ப்பிலை.
கொலைசெய் மாக்கள் கொடுவினை யாளர்.
சென்றா லங்கே பொன்றுவன் நண்பன்.
சூழ்ச்சியும் சட்டெனப் பயனளி யாதாம்.
இங்கத னுக்கே இடமும் இல்லை.
என்பொருட் டாலே இன்னுயிர் நண்பன்
இந்நிலை இருந்தே இடருறு காலை,
நொதுமலன் மான நடப்பின் நன்றி
மறந்தோன் ஆவேன்; நன்றே
விற்றனன் என்னுடல் வாங்குவன் நட்பே.

(அனைவரும் போகின்றனர்)

**போலியாப்பென்னும் ஆறாம் அங்கம் முற்றும்.**



# ஏழாவது அங்கம்

## முடிபு

(கொலையாளி ஒருவன் வருகின்றான்)

**கொலையாளி :** ஓடிப் போங்கயா ஓடிப் போங்க.
உசிர் ஒடம்புலே இருக்கணும் இன்னா
பணமே காசு புள்ளே குட்டி
கொலம் குடித்தனம் சொத்துச் சுதந்திரம்
பொம்ளே எல்லாம் பொளைக்க ஒணுனா
உட்டுத் தொலெங்க தட்டுக் கிட்ட
ராசத் துரோவம். வேண்டவே வேண்டா.

(பார்ங்க இண்ணும்)

ஆவா ஒணவெ ஆள்ங்க சாப்ட்டா
நோவ்ங்க; இல்லா போனா சாவ்ங்க.
அரசத் துரோவம் பண்ணின ஆளு
குடும்பத் தோடே குப்புனு ஒழிஞ்சான்.
நம்ப பேச்சை நம்பா விட்டா,
சந்தன தாசரை நல்லாப் பார்ங்க.
ராசத் துரோவம் பண்ணித் தொலெஞ்சார்.
அவரு புள்ளே மனெவி அல்லாம்
அவரு பின்னே வர்த்தமா வராங்க.
கொலைக்களம் போறார். கொலையா ளோடே.

(வானை நோக்கி)

என்னா சாமீ என்னான் நீங்க?
சந்தன தாசரு சாமி தய்வ்லே
தப்ப வயிகியி உண்டான் நீங்களா?
முன்னே இந்தார் மந்திரி அவ்ரு
பொம்ளெயெ ஒப்ச்சா பொயப்பா ருங்க

(மீண்டும் வானை நோக்கி)

என்னாங் கய்யா? ''எங்க சந்தனர்
கால்லெ உயுந்தா காப்பாத் தறவரு;

தன்னுசுர்க் காகத் துள்ளி கூட
தப்புக் காரியம் செய்வே மாட்டார்''
இன்னா அவுர்க்கு ஆவ்ற நல்ல
வயியெப் பார்ங்க. உடுதலெ ஆவ்மா?

(குற்றவுடை தரித்துத், தோளிற் கொம்பேந்தி, மகனாலும் மனைவியாலும் பின்தொடரப்பட்டு வருகின்ற சந்தனதாசனை இரண்டாங் கொலையாளி நடத்தி வருகின்றான்)

**சந்தன** : (கண்ணீருடன்)
அடடா, அந்தோ, கஷ்டம் சீச்சீ.
ஒழுக்க இழுக்கம் உறுதல் தீதென
நாளும் அஞ்சி நடக்கும் நமர்க்கும்
கள்ளர்க் கியைந்த கடிய மரணம்
நண்ணிடு மாயின் விதியே வலிதாம்.
இரக்கமென் றொருபொருள் இலாத நெஞ்சினர்
நல்லோர் தீயோர் எனவே நாடார்.
எப்படி யெனினே,
இறப்பினை அஞ்சி இறைச்சி துறந்து
புல்லினை மேயும் புரைதீர் மானை
ஏனோ எயினர் எங்கும் தேடி
மண்டிய சினத்தால் மாய்க்கின் றனரே.

(சுற்றிப் பார்த்து)

விஷ்ணு தாச, விடையினைக் கூட

விளம்ப கில்லாய்; துன்பக் காலைக்
கண்போல் நண்பரும் கண்முன் நில்லார்
என்கை எத்தனை உண்மை? அரியர்!

(கண்ணீர் விட்டு)

ஈதோ எனாது இன்னுயிர் நண்பர்
கண்ணீ ரொன்றே எண்ணீர்க் கடனா
வார்த்தும், வயங்கு முகந்தான் துயரால்
விளர்த்தும், வீடாக் கண்ணீர் வடித்தும்,
மீளற் கிலராய் மீண்டும் மீண்டும்
விம்மிப் பொருமி வருவர் சூழ.

**கொலை** : சந்தன தாஸச் சாமீ, கொலெக்களம்
இதுங்க; இவுங்களெ இங்கெ வுட்டுப்
போவச் சொலுங்க; போது போவுதே.

**சந்தன** : மாண்ட மனைவீ, மகனொடு மீள்க.
இனிநீ இதன்மேல் வருதலோ தகவிலை.

**மனைவி** : (கண்ணீர் சொரிந்து)
துறக்கஞ் செல்லச் சமைந்தனிர் ஆரிய,

அயல்நா டன்றே.

**சந்தன** : அன்பார் மனைவி,
நண்பன் பொருட்டென் நல்லுயிர் ஈவன்.
நான்செய் நவைக்கிலை; வருந்தலை போதி.

**மனைவி** : அங்ஙன மாயின் ஆரிய, இதுவோ
காலம் கணவரை மனைவிதான் பிரிய?

**சந்தன** : நன்றென் மனைவி, நினைத்ததென் மனத்தே?

**மனைவி** : ஆரியர் அடியை அடியேன் தொடர
அருளுக பெரிதும்; அதுவென் பேறு.

**சந்தன** : ஐயை அதுநன் றன்றே. ஆதலின்
உலகம் அறியா ஒருமகன்-சின்னஞ்
சிறுவன் உளனால்; சிறக்கப் போற்றுக.

**மனைவி** : மகனைத் தேவர் மகிழ்வுடன் காக்க;
அன்பார் மகனே, அப்பா அடியில்-
இதுதான் கடைசி; விழுந்து வணங்கு.

**மகன்** : (தந்தை அடியில் வீழ்ந்து)
எந்தாய், என்செயல் நும்மை இழந்தே?

**சந்தன** : சாணக் கியனிலா நாட்டில் வதிக.

**கொலையா** : சாமீ, சந்தன தாசரே, கழுங்க
ஊணி யாச்சே, ஊணினா-பின்னே
தயவு பண்ணித் தயாரா வுங்க.

**மனைவி** : தயைமிகு சான்றீர், தஞ்சம்! தஞ்சம்!

**சந்தன** : ஐயை கரைந்தே அழலென் ஈங்கே.
துறக்கம் புக்கவர் தோமில் குடியினைக்
கடவுளர் இரங்கிக் காப்பர் மன்ற.
இன்னுயிர் நண்பர்க் கென்னுயிர் ஈவேன்
அன்றி அல்வினை ஆற்றிய தால்இலை.
அகமகிழ் காலை அழுதல் ஆமோ?

**முதற்கொ** : வில்ல பத்தா, விசும்பிப் புடிடா
சந்தன தாசரை; புடிச்சி யானா
பொம்ளெ புள்ளே போவுது தானா.

**இரண்டாம்** : அடே வச்ர லோமா, அவனெ
இதோ புடிச்சேன். இல்லெ பின்னே.

**சந்தன** : நல்லோய், சிறிதிரு; நானென் மகனைத்
தேற்றுதல் வேண்டும்-(மகனை உச்சி மோந்து)
செழுகுல மகனே,
இறப்பர் எவரும். இன்னுயிர் நண்பர்
பொருட்டா இறக்கும் எனக்கிது இன்பம்!

**சிறுவன்** : இதனைக் கூடவா இயம்புதல் வேண்டும்?
நங்குல அறனிது மாணுறு எந்தாய்!

(தந்தையின் அடியில் வீழ்கின்றான்)

**கொலையா** : ஏலே இவனெ புடிடா கப்புனு.

**மனைவி** : (மார்பிற் புடைத்துக் கொள்கின்றாள்)
தயவுடைச் சான்றீர் தஞ்சம்! தஞ்சம்!

(சரேரெனத் திரையினை நீக்கிப் பொள்ளென இராக்கதன் வருகின்றான்)

**இராக்கதன்** : அஞ்சலை மாதே அஞ்சலை; கொலையீர்
சந்தன தாசனைக் கொல்லலிர்; நின்மின்.
நமனார் பொழிற்கே நடத்திச் செல்லும்
கொடுமை கெழுமிய கொலைமா லைதான்
அந்நாள் அடல்மிகு நந்தர் அழிவினை
அடங்கலர் குலமே அடியோ டழிந்தெனக்
கண்ணிற் கண்ட கறைகெழு கயவனும்,
நண்பர் நனிபலர் நாசமு றுங்கால்
பெருவிழ வென்னப் பார்த்திருந் தானும்,
ஆற்றுதற் கரிய அவமா னத்தினை
அடைதற் கெனவே ஆக்கினும், ஆருயிர்
உன்கொலைக் காக உலவா இன்பொடு
பொறுக்கின் றானு மாயவப் பொல்லான்
கழுத்தினிற் கட்டுக கணந்தா ழாதே.

**சந்தன** : (கண்ணும் கண்ணீருமாய்ப் பார்த்து)
அமைச்ச, ஆருயிர் நண்ப, என்னிது?

**இராக்கதன்** : உன்னுதற் கரிய உன்னுடை உயர்செயல்
பலவுள் ஒன்றன் பகுதியை நடித்தது.

**சந்தன** : அமைச்ச, எனவ ஆள்வினை அனைத்தும்
வீணிற் கழியவே செய்தனை எதனால்?

**இராக்கதன்** : என்னைப் போற்றவே இப்பணி ஆற்றினேன்.

வைதனை போதும். (ஒரு கொலையாளனைப் பார்த்து)
வருக நல்லோய்,
சண்டன் சாணக் கியர்க்குத் தெரிவி.

**வச்சிர** : என்னா சொல்ல எசமாங் கிட்டே.

**இராக்கதன்** : கயவர் கெழுமிய கலியூ ழியிலே
சிபிவேந் தனையும் சிறியோ னாக்கிய
சீர்த்தி மல்கிய சீரியோன் எவனோ
நவையில் உளத்தொடு நற்பணி யாற்றிப்
பவுத்தரைப் பழிக்கும் பண்பினன் எவனோ
மதித்துப் போற்றும் மாண்பின னேனும்
எதனாற் பகையென எனநின் றானோ
அவன்திறத் தினிலே அண்மினன் யானென.

**முதற்கொ** : 'தோபார் ஏப்பா, வில்ல பத்தா,
ஒன்னு செய்யி; என்னா பத்ரம்,
அவுங்ளெ அப்டியே புடிச்சி, அதா
தெர்லெ-பார்யா. சுடுகாட் டுமரம்,
அதாண்டெ கொஞ்சம் அப்டியே வச்சுக,
அதுக்குள் ளார அங்கெ போயி
சாணகச் சாமியை நானு பாத்து
மந்திரி ராச்சசர் மாட்டிக் கிட்டாரு,
என்னு எசெவாச் சொல்லி வர்ரேன்.

**இரண்டாங்** : வச்ர லோமா வச்சுக் கிறேன்பா
போய்வா போய்வா போனேன் வந்தெனு.

(மனைவியோடும் மகனோடும் சூழப்பெற்ற
சந்தன தாசனோடு இரண்டாங் கொலையாளி போகின்றான்).

**முதற்கொ** : வாங்க அமச்சரெ-(இராக்கதனோடு நடக்கின்றான்)
ஆர்ங்க அங்கே?
நந்தர் கொலமலெ வச்ரா யுதங்க,
மோரிய கொலத்தெ நாட்டின வுங்க,
சாணக் கியரு கிட்டே கொஞ்சம்

**இராக்கதன்** : (தனக்குள்)
இதனையும் அந்தோ கேட்க இயைந்தது!

**முதற்கொ** : சொல்லனும் கொஞ்சம் சாமி சமூகம்.
எங்க எசமான் எடுத்த சூச்சிலெ,
என்னா பலம், என்னா மூளை,
எல்லாம் எகிரிப் போயி, அய்யோ
பாவம் அவரும் பறந்து வந்து

மாட்டிக் கிட்டாரு மந்திரி ராச்சரு
நம்ப கய்லெ நல்லாப் பார்ங்க.

(பின்னர்த் திரைக்குப் பின்னிருந்தே
சாணக்கியர் முகத்தை மாத்திரம் காட்டுகின்றார்)

**சாணக்** : நல்லோய் சொல்க சொல்க நாடி.
செக்கச் செவேரெனச் சேர்ந்தெழு எரியின்
கொழுந்தினைக் கொழுந்தா னைக்குள் பொதிந்தான்
எவனே? எங்கும் இடையீ டின்றி
எழுவளி தனையே முழுவலிக் கயிற்றால்
வீசா வண்ணம் விசித்துப் பிணித்தல்
செய்தான் எவனே? செழுங்கரிக் கரட
நீரினை மோந்த நீளார் உளைவயச்
சீய மொன்றனைச் சிவுக்கெனப் பிடித்துக்
கூட்டி லடைத்த பாட்டுடை யோனெவன்?
செப்பரும் இடங்கர் சேர்ந்த சுறவினம்
பிறவே மிடைந்து பெரும்பேஎ நாமுற
அலையெழு கடலினை அடல்மிகு புயங்கொடு
நீந்திக் கடந்த நீதியோன் எவனே?

**கொலை** : நீதி நிபுணரு நீங்கதான் எசமான்.

**சாணக்** : இல்லை யில்லை, இங்ஙனம் சொல்லலை.
நந்தரை வெறுத்த விதியா லெனச்சொல்.

**இராக்கதன்** : (தனக்குள்)
துட்ட அமைச்சன் துராத்து மாவா
மகாத்து மாவா மதிப்ப தெங்ஙனம்?
மச்சரத் தாலே நற்பண் பினனென,
மதித்தே மகிழ்தற் கில்லேம் : மன்ற.
மணிக்குக் கடலென மாகலைச் சுரங்கம்!

**சாணக்** : (கண்டு பெருமகிழ்ச்சியுடன் தனக்குள்)
ஆவா, இராக்கத அமைச்சன்! இவனே
மகாத்துமா! இவனால் மன்னன் சேனையும்,
எனாது மதியும், எத்தனை விழிப்புடன்
செய்வினை செய்வதிற் சேர்ந்திடர்ப் பட்டன?
பலநாள் சூழ்ந்தனம் பற்பல சூழ்ச்சிகள்!

(திரையை விலக்கி வெளிவந்து இராக்கதனை நெருங்கி)

விஷ்ணு குப்தன் வணங்கினன் நின்னடி.
அமைச்ச இராக்கத.

**இராக்கதன்** : (தனக்குள்) அமைச்சன் என்னும்
அடைமொழி இங்கு நாணைத் தருவதாம்.

(வெளிப்படையாய்)

விஷ்ணு குப்த,
கடுங்கொலை மாக்களின் கருங்கை படலால்,
முட்டினை அடைந்தவென் மெய்யினைத் தொடாதி.

**சாணக்** : அமைச்ச இராக்கத, அவர்தாம். கொலைவினை
மாக்கள் அல்லர்; சித்தார்த் தகனிவன்.
இவனை இனிதின் அறிகுவை நீயும்.
இவனே ஏந்தற் கேவல் புரிகுநன்
சமித்தார்த் தகனாம். சகட தாசன்
ஏழை பாவம் எழுதச் சொன்னேன்
அந்நாள் அத்தகு கள்ளக் கடிதம்
ஏதும் அறியான் ஏற்றனன் பழியே!

**இராக்கதன்** : (தனக்குள்)
சகட தாசன் மீதுள சஞ்சயம்
தீர்ந்த திதனால் தீமை இலனெனை.

**சாணக்** : பலபடப் பேசலென்? பன்னுவன் சுருக்கி.
பத்திர படனின் பார்வையில் வந்தோர்;
அத்தகு முடங்கல்; அச்சித் தார்த்தகன்;
அணிகலன் மூன்று; அமண ஆண்டி;
உன்னுயிர் நண்பன்; உலறிய சோலையுள்
உயங்கித் தொங்க முயன்ற மனிதன்;
செல்வச் செட்டியின் செப்பருந் துன்பம்
இச்செய லனைத்தும் (பாதிகூறும் போதே அடக்கத்தால்
நாணுகின்றான்).........இயம்பரு வீர,.........நீதான்
விருடலற் சார விழைந்தே செய்த
என்சூழ்ச் சிகளாம் : என்றறி அமைச்ச.
ஆதலின், இராக்கத, அரசர் விருடலர்
நின்னைக் காணிய நனிவிழை வாரே.

**இராக்கதன்** : (தனக்குள்) கதிவே றில்லை (வெளிப்படையாய்)
காண்பன் வேந்தரை.

(அரச உடைதரித்த சந்திரகுப்தர் உழையர் புடைசூழ வருகின்றனர்)

**அரசர்** : நந்தம் அமைச்சர், வெல்றகரு நள்ளார்
படையினைப், போர்தா னின்றிப் பொருக்கென
வென்றனர்; வென்றவிச் செய்தியால், மன்ற
நாணுவன் பெரிதும். நயமார் சூழ்ச்சியின்

அகலுறு வாளிகள் அரும்பயன் தராவாய்ப்
உறுசிறை உலந்தென உறங்கிக் கிடந்தே,
கழிதுயில் நோன்பினைக் காத்தோர் போலவும்,
கூர்முக மனைத்தையும் குப்புறக் கவிழ்த்துப்
பெருந்துயர் கொண்ட பேதையர் போலவும்,
தூணியை விட்டில தூங்கிக் கிடந்த.
இச்செயல் தன்னால் என்மனம் அமைதி
அடைந்த திலையால் அணுவள வேனும்.
அன்றி,
மன்னன் உறங்கினும் மாண்குர வர்கள்
உறங்கா ராகி, உறுபொருள் நாடி,
என்போ லரசர் பணிசெயல் விழைந்து,
நாணேற் றாதே நற்றனுக் கிடக்க,
வெல்வன வற்றை வெல்லும் ஆற்றலர்.

(சாணக்கியனை நெருங்கி)

சந்திர குப்தன் வணங்கினன் ஆரிய.

**சாணக்** : விழைந்தன அனைத்தும் விழுப்பயன் தந்தன
ஆதலின் முழுமுதல் அமைச்சரை வணங்குக.

**இராக்கதன்** : (தனக்குள்) பொருந்தப் பொருத்தினன் புணர்ப்பினை
அவனே.

**அரசர்** : (இராக்கதனை நெருங்கி)
சந்திர குப்தன் வணங்கினன் ஆரிய.

**இராக்கதன்** : (பார்த்துத் தனக்குள்)
சந்திர குப்த மன்னர்! ஆஆ,
நனந்தலை யுலகில், நாளும் நாளும்
நற்பே றுகளை நனியும் பெற்ற,
சின்னஞ் சிறிய சீர்மகன் ஒருவனே
குஞ்சரக் குருளை களிற்றுக் குழுவின்
தலைமை எய்திய தனிச்சீர் மான,
அரியா தனத்தை அடைந்தனன் மெலமெல.

(வெளிப்படையாய்)

மன்ன வெல்க.

**அரசன்** : மாண்புடை ஆரிய,
ஐயரும் ஐயரும், அரும்பெருங் குரவராய்,
அறுகுணக் கிழவராய், அல்லும் பகலும்
விழிப்புடன் இருந்தனர் விழுப்பணி புரிகுவிர்;

வெல்லா தனயா விரிநீ ருலகில்
என்னால் எனவே, எண்ணுமின் சிறிதே.

**இராக்கதன்** : (தனக்குள்)
ஏனையோர் ஏவலன் என்றெணிக் குடில
மாணவன் சொன்னவை சுருக்கெனத் தைக்கும்!
அதுதான் ஒருகால் அரசரின் அடக்கமோ?
மச்சரத் தாலே மாறாய்ப் பட்டதோ?
சாணக் கியனும் சீர்த்திக் குரியனே.

ஏனெனில்,

அறிவிற் சிறிய அமைச்ச னேனும்,
அடங்கலர் வெல்லும் அவாமிகு அரசனை
அடைந்தனன் எனினே, அடைந்தனன் சீர்த்தி.
அரும்பெறற் சூழ்ச்சி அமைச்ச னாயினும்,
தகுதியில் வேந்தனைச் சார்ந்தனன் என்னில்,
ஆற்றங் கரையெழு அடலார் தருவென
ஆதர வின்றியே அழிந்தே வீழ்வான்.

**சாணக்** : அமைச்ச இராக்கத, அமைந்த நண்பன்
சந்தன தாசன் சீவனை விழைதியோ?

**இராக்கதன்** : விஷ்ணு குப்த, ஐயமும் உண்டுகொல்?

**சாணக்** : அமைச்ச இராக்கத, அமைச்ச வாளினை
ஏலாக் கையால் ஏந்தலை வாழ்த்தினை.
அதிலெனக் கையம் ஆதலின், உண்மையில்
சந்தன தாசன் தன்னுயிர் வேண்டின்
அமைச்சவா ளிதனை அங்கையி னேற்கவே.

**இராக்கதன்** : விஷ்ணு குப்த, சொல்லேல் அங்ஙனம்
பொறுக்கும் தகுதி பெரிதும் இலாதேன்.
அன்றியும், நீதான் அந்நாள் ஏற்ற
வாளிது தாங்க, வறிதும் தகவிலேன்.

**சாணக்** : அமைச்ச இராக்கத, அதுதான் எங்ஙனம்?
என்னிடைத் தகுதி! உன்னிடத் தஃதிலை!
காண்டிகா,
இணையிலா மதியோய், எல்லா இவையும்
கலித்துத் திரியும் கருதலர் கொழுப்பினைச்
சிதைக்குநின் ஆண்மையின் சிறப்பால்; மன்ற.
கங்குலும் பகலும் கந்தினைத் தணந்தே
கலினங் கடித்த வாயின வான
பரிமா வெல்லாம் பான்மையி னின்றே

உறுநீர்ப் படிந்தில; உண்டி கொண்டில;
உண்ணீர்ப் பருகில; உலவில உளம்போல்;
இன்பமுங் கருதில; இகவாக் கல்லணை
புறத்தே பொறுத்துப் புற்கென் றனவால்.
வீங்கிய முதுகின தூங்கின களிறே.
பன்மொழி பன்னலிற் பயனிலை வறிதும்;
சத்திரம் பெறாதே சந்தனன் உய்யான்!

**இராக்கதன்** : (தனக்குள்)
நந்தரின் நட்பும், நவையில் குணனும்,
என்னுளம் ஈர்க்கும் எனினும், இனியே
ஏற்பதோ ஏலார் அடிக்கீழ் ஏவல்?
நீரினை வார்த்து நாரால் வளர்த்த
மரனெலாம் வளர்ந்தே முறிபட் டனவால்.
நண்பன் நல்லுயிர் நனிகாத் தற்கே
வாளினை யானும் வாங்குதல் வேண்டும்.
வினையின் செலவே விதிக்கும் விளங்கா.

(வெளிப்படையாய்)

விஷ்ணு குப்த, வேண்டிய வேண்டியாங்
கெய்த வல்ல இணையிலா நட்பினை
வணங்குவன். வழியிலை வேறே; இணங்கினன்.

**சாணக்** : (மகிழ்வுடன்)
விருடல விருடல, விளங்கிய மதிமிகு
அமைச்ச இராக்கதன் அருளினன் நினையே.
பேறிதன் மேலெது? பெருகினை பெரிதே.

**அரசன்** : சந்திர குப்தன் துய்ப்பன அனைத்தும்
ஆரியர் அருளால்,

(ஏவலன் ஒருவன் வருகின்றான்)

**ஏவலன்** : ஆரியர் வெல்க.
பத்திர படனும், பாகுரா யணனும்
பிறரும், பிள்ளை மலயனைப் பற்றிக்
கையினைக் காலினைக் கரும்பொற் சங்கிலி
யொன்றாற் பிணித்தே ஓங்கிய நங்கடை
வந்துளர் பெரும, விழைந்தது செய்கவே.

**சாணக்** : அன்ப, அமைச்சர் இராக்கதர்க் கறிவி.
அவர்தாம் அறிவார் செயலிப் போது.

**இராக்கதன்**

ஆற்றப் பணிப்பன் அடலார் அமைச்சன்
ஆற்றுவ னதனை; ஆறுவே றிலையே.

(வெளிப்படையாய்)

சகத்திறை சந்திர குப்த, கேட்டி.
அறிவைகொல் அந்நாள் யானே பிள்ளை
மலையனோ டிருந்தனன் சின்னா ளெனவே?
ஆதலின், அவன்றன் ஆருயிர் அளித்தி.

**அரசன்** : (சாணக்கியன் முகத்தினை நோக்குகின்றனன்)

**சாணக்** : அமைச்ச இராக்கதன் ஆதி வேண்டுகோள்
மதித்தற் குரித்தே; மாட்சியின் ஈக.

(ஏவலனை நோக்கி)

நல்லோய், நீபோய்ச் சொல்லுதி நன்றே
பத்திர படன்முதல் பல்வகை வீரரை
எனாது மொழியால்; இராக்கத அமைச்சர்
சந்திர குப்தரைச் சார்ந்தனர் வேண்டலால்
மன்னிளங் குமரர் மலயகே துவிற்கே
தந்தையின் அரசினைத் தந்தனர் மகிழ்ந்தே.
ஆதலின், அவரெலாம் அரசிளங் குமரன்
பின்னே போகிப் பொங்கணை மீமிசைப்
பொலிவுடன் ஏற்றிப் பின்னர் வருகென.

**ஏவலன்** : அமைச்சன் ஆணையின் ஆறே ஒழுகுவல்.

(போகின்றான்)

**சாணக்** : இருஇரு சின்மொழி; இன்னுங் கூறுவன்.
அரணினைக் காக்கும் அடல்கெழு விசய
பாலனைச் சார்ந்தே சாற்றுக இவைதமை.
அமைச்சர் இராக்கதர் அமைச்சினை ஏற்றதால்,
நனியும் மகிழ்ந்த சந்திர குப்தர்
சாற்றினர் ஆணை; சந்தன தாசனைச்
சாற்றுமித் தரையில் மன்னிய மாநகர்
வணிகர்க் கெல்லாம் தலைமை வணிகனாய்
நியமித் திடவே வேண்டும் எனவே.
கரிபரி நீங்க எஞ்சிய வெல்லாம்
விடுவித் திடுக; வீரர் இராக்கதர்
மந்திரி யானபின் என்தொழில் எதுவது?
கரிபரி தவிர்த்துக் கட்டெலாம் விடுமின்!
வஞ்சினம் முடித்த யானே
கட்டுவன் எனாது குடுமியை மகிழ்ந்தே.

**ஏவலன்** : ஆரியர் ஆணை ஆற்றுவன் போகியே.

(போகின்றான்)

**சாணக்** : ஓஓ இராக்கத. ஓஓ சந்திர,
இதனினும் என்னால் இனிய தென்னுறும்?

**அரசன்** : இதனின் இன்பம் இனிவே றுளதோ?
நந்தர் அழிந்தனர்; அரியணை இருந்தனன்.
இராக்கதன் இனிய நண்ப னாயினன்,
இதன்மே லின்பம் இயற்றவென் னுளதே?

**இராக்கதன்** : இருப்பினும் பரத இன்மொழி இதுவாம்.
மாநில மடந்தை, முனிந்தெழு வெள்ளப்
பெருக்காற் பெரும்பே துற்ற அந்நாள்,
அருளொடு அவனியை அளித்தல் கண்ணி,
அதனுக் கியைந்த ஆதி வராக
உருவினை எடுத்த ஒருதான் தோன்றியின்,
நுதியார் கோட்டிடை நன்றே இருந்தனள்;
அந்நில மாதுதான், இந்நாள், மிலேச்சரான்
விதிர்விதிர்ப் பெய்தி, மாலின் வடிவாம்
வேந்தரின் இணைப்புயம் தனையே இருக்கையாச்
சார்ந்தனள். ஆதலின், சந்திர குப்தர்
இளையர் கிளைஞர் இவரொடு
புவியினைப் பன்னாள் புரந்தருள் புரிகவே.

**முடிபென்னும் ஏழாம் அங்கம் முற்றும்**
**முத்ரா ராக்ஷஸம் முற்றிற்று.**



# அருஞ்சொற் பொருளகரமுதல

## அ

அஃகா - குறையாத
அகக் கோயில் - அரண்மனையின் உட்புறம்
அகச் சுவை - இன்பச் சுவை
அகிலம் - உலகம்
அங்கி - அக்கிநி, தீ
அங்கெனஇங்கென - அங்குமிங்கும்
அங்கை - உள்ளங்கை
அச்சோ - ஐயோ
அசல் - அயல்
அசதியில் - திடீரென்று
அசைவு - இளைப்பாறுதல்
அஞ்சலிக் கை - கூப்பிய கை
அடுக்கும் - பொருந்தும்
அடங்கலர் - பகைவர்
அடர்க்க - முற்றுகையிட, வருத்த
அடிகள் - துறவியர், பெரியோர்
அடிசில் - உணவு
அடியிடல் - அடிவைத்தல், புகுதல்
அடியுறை - அடிக்கீழிருப்பவன்
அடைவே - முறையே
அண்மிய - நெருங்கிய
அத்தலை - அவ்விடம்
அத்தாணி - கொலு மண்டபம்
அந்தகன் - யமன்
அந்தரம் - ஆகாயம்
அந்வயம் - நண்பர் படை
அநாரியன் - இழிந்தோன்
அநுமதி - விடை
அமைச்சவாள் - அமைச்சர்க்குரிய வாள்;
அமாத்திய சஸ்திரம்
அயிர்த்திலர் - ஐயங்கொண்டிலர்
அர்த்தம் - பொருள்
அரந்தை - துன்பம்
அரும்ப - தோன்ற
அருவிலைப்படுத்தி - உயர்ந்த விலைக்கு விற்று
அல்லல் - துன்பம்
அல்வினை - தீய செயல்
அலக்கண் - துன்பம்
அலகில் - அளவற்ற
அலமரல் - சுழற்சி
அலர் - பழிச்சொல்
அவனி - பூமி
அவலக் குரல் - அழுகைக் குரல்
அவர்க்கு - அவருக்கு
அவிர் - விளங்குகின்ற
அவை - சபை
அழலிர் - அழாதீர்கள்
அழுக்காறு - பொறாமை
அளித்தி - காப்பாற்று
அற்றம் - சமயம்
அற்றன்று - அத்தன்மைத்தன்று
அறங்கைவருக - தருமசித்தி உண்டாகுக
அறச்சோதரர் - தரும சோதரர்
அறிகுநர் - அறியவல்லவர்
அறிதுயில் - யோக நித்திரை
அறிவறை - அறிவிலி
அறுகுணக் கிழவர் - பொருத்தல், போர் துணிதல், போருக் கெழுதல், அற்றம் நோக்கி யிருத்தல் இரட்டுற இயங்குதல், வேற்றரசன் துணை வேண்டல் என்னும் இக் குணங் களையுடைய அமைச்சர்.
அறுதி - வெற்றி முடிபு
அறைதி - சொல்லுக
அளியன் - இரங்கத்தக்கவன்
அளித்தனை - காத்தனை

## ஆ

ஆக்கம் - பெருக்கம், செல்வம்
ஆகூழ் - நல்வினை
ஆடல் - விளையாட்டு

ஆடற் சத்தி - வலிமை மிக்க சக்தி யென்னும் படை
ஆணையிழப்பு - கட்டளை மீறல்
ஆய்ந்த - ஆராய்ந்த
ஆயிடை - அவ்விடம்
ஆரியன் - மேலோன்
ஆரும் - யாரும்
ஆவா - ஆஆ
ஆவ்மா - ஆகுமா
ஆவ்ற - ஆகின்ற
ஆழி - மோதிரம்
ஆள்வினை - முயற்சி
ஆற்றமாட்டா - செய்யச் சக்தி யில்லாத
ஆற்ற - செய்ய
ஆறே - வழியே
ஆன்றவடு - கல்வி நிறை சாணக்கியன்
ஆன்றோர் - சான்றோர்
ஆனேறு - காளை, உக்கை

## இ

இகந்த - நீங்கிய
இந்து - சந்திரன்
இந்துமோரியன் - சந்திரகுப்தன்
இடங்கர் - முதலை
இடப்பால் - இடப் பக்கம்
இடன் ஆர் உலகு - இடன்நிறைந்த உலகம்
இடனிழவு - பதவியை இழத்தல்
இடுகி - நெருங்கி
இடையர் - மத்திமர்
இடையீடு - துன்பம், காலக்கழிவு
இபம் - யானை
இம்மென - விரைவில்
இமையோர் நதி - கங்கை
இரிந்த - அஞ்சியோடிய
இருவிடம் - கருவிஷம்
இருஞ்செறும்பு - (பனையின்) கரிய செறும்பு
இருப்புத்தளை - இருப்பு விலங்கு
இலகுறும் - விளங்கும்
இலச்சினை - முத்திரை
இவர்ந்துளன் - ஏறியமர்ந்துளன்
இவுளி - குதிரை
இழுக்கம் - வருத்தம்
இழிதரும் - இறங்கும்
இழிந்து - இறங்கி
இளவல் - தம்பி
இளையர் - ஏவலர்
இற்பணி - வீட்டுவேலை
இற்கலை - இல்லறக்கலை
இறப்ப - மிக
இறுக - உறுதியாக
இறுதல் - ஒடிதல்
இறைப்பணி - இராசகாரியம்
இறைமை - தலைமை
இன்மை - வறுமை
இன்மையா - இல்லாமையாக
இன்னாற்கு - இன்னவனுக்கு
இன்னே - இப்பொழுதே

## ஈ

ஈட்டினை - சேர்த்துவைத்தாய்
ஈடு - ஒப்பு
ஈண்டிய - நெருங்கிய

## உ

உட்கிடை - உள்ளக்கருத்து
உட்கினேன் - அஞ்சினேன்
உடுதலெ - விடுதலை
உடுத்த - சூழ்ந்த
உண்மரம் - மரத்தினுள்
உந்தி - தள்ளி
உவற்கே - அவனுக்கே
உயங்கி - வருந்தி
உயிர்ப்பர் - பிழைப்பர்
உய்க்கும் - செலுத்தும்
உரமார் - வலிமைநிறைந்த
உரறி - முழங்கி
உரி - தோல்
உருகெழு - அச்சம்பொருந்திய
உருத்திரச்சுவை - கோபச்சுவை
உருத்து - சினந்து

உரும் - அச்சம்
உரு ஆர் இல் - அச்சம் தங்கிய வீடு
உலந்த - இறந்த
உலந்து - குறைவுற்று
உலம்பொரு தோள் - கல்லை யொத்த தோள்
உலவா - நீங்காத
உலோத்திரம் - ஒருவகை மரம்
உழப்பர் - வருந்துவர்
உழையர் - அமைச்சர், அருகில் இருப்போர்
உழைவதிபதவி - அருகில் தங்கிப் பணியாற்றும் நிலை
உள்ளி - நினைத்து
உளை - பிடரிமயிர்
உறு - மிக்க
உறுவோன் - அடைகின்றவன்
உன்னி - எண்ணி

**ஊ**

ஊணர் - ஹுணர் (Huns)
ஊணி - ஊன்றி

**எ**

எகிரிப்போயி - மீறிப்போய்
எசமான் - இயமானன், வேள்வித் தலைவன்
எஞ்சிய - குறைந்த, மிச்சமான
எண்ணீர் - எள்ளொடு கலந்த நீர்
எண்மைய - எளிமையை
உடையன
எமபடம் - எமனுலக நிகழ்ச்சிகளை எழுதிய படம்
எவன் - யாது? எதற்கு?
எயிறு - பல்
எயிற்று முறிவு - பல் முறிவு
எய்யேன் - அறியேன்
எயினர் - வேடர்
எரி - தீ
எரிமே - எரியும்
எழின்மை - அழகுத்தன்மை
எழுச்சி - ஊக்கம்
எழுவளி - எழுங்காற்று
எழுவுறழ் - கற்றூணைப்போன்ற
எறுழ்விலி - மிக்கவலி
என்கை - என்றுகூறுதல்
என்போன்றவனே - என்னைப் போல் துன்புறுபவனே
என்னுழை - என்னிடம்
என்னுறும் - யாதுவந்தடையும்?

**ஏ**

ஏதில் - ஒன்றுமில்லாத
ஏதிலர் - பகைவர்
ஏந்தல் - அரசன்
ஏமம் - க்ஷேமம்
ஏர்மதி - நல்லறிவு
ஏலாக்கை - ஏற்காத கை
ஏல்வையில் - பொழுதில்
ஏவலிளையீர் - பணியாளர்களே
ஏழை - அறிவிலி

**ஐ**

ஐயரும் ஐயரும் - சாணக்கியனும் இராக்கதனும்
ஐயை - வியத்தற் குரியவள், நடீ

**ஒ**

ஒப்பனை - அலங்காரம்
ஒல்லாது - பொருந்தாது
ஒல்லையில் - விரைவில்
ஒழுக்க இழுக்கம் - ஒழுக்கக் குறைவு
ஒழுக்கு - வரிசை
ஒறுத்தே - தண்டித்தே
ஒன்றிய - பொருந்திய
ஒன்னலர் - ஒன்றலர், பகைவர்

**ஓ**

ஓம்புக - பாதுகாக்க
ஓவியன் - சித்திரம் எழுதுவோன்
ஓரின் - ஆராயின்

### க

கக்கம் - அக்குள், கைம்மூலம்
கஞ்சமுகை - தாமரை மொட்டு
கஞ்சமலர் - தாமரை மலர்
கஞலிய - நெருங்கிய
கட்செவி - பாம்பு
கட்டளைக்கல் - உரைகல்
கட்டி - வெல்லம்
கட்டிய குடுமி - கட்டப்பெற்றது போன்ற குடுமி; வஞ்சினம் முடித்தமையின்.
கடு - விடம்
கடுகடுதண்டம் - பொறுக்கறு தண்டம்
கடுப்புடன் - விரைவுடன்
கடும்பினர் - சுற்றத்தார்
கடைபோகளவு - முடியுமட்டும்
கடுவஞ்சினம் - கடுமையான சபதம்
கடுகுவோர் - நெருங்குவோர்
கடையர் - அதமர்
கண்ணிய - பொருந்திய
கணிகள் - சோதிடர்
கத்திரகணம் - க்ஷத்ரகணம்
கந்து - கட்டுத்தறி
கப்பின - மண்டின
கபாலமாலை - மண்டையோடு களரலான மாலை
கமஞ்சூல் - நிறைந்த கரு
கம்பலை - ஆரவாரம்
கம்மென - கம்மென்று
கயவன் - மூடன்
கய்லெ - கையில்
கரடநீர் - மதநீர்
கரிக்குலம் - யானைக்கூட்டம்
கரந்துறை - மறைந்திருக்கின்ற
கரவாள் - கைவாள்
கரி - சாட்சி
கரிபரி - யானை குதிரைகள்
கரியுரி - யானைத்தோல்
கருங்கை - பொல்லாக்கை
கருதரு - எண்ணரிய
கருதலன் - பகைவன்
கரும் பொற் சங்கிலி - இரும்புச் சங்கிலி
கரும்பொன் முளை - இரும்பு முளை, உலோக கீலகம்
கருவி - தொகுதி
கருஞ்செயல் - பொல்லாச் செயல்
கருத்தினும் - எண்ணத்தைக் காட்டிலும்
கரைந்து - கதறி
கலச்செப்பு - அணிப்பேழை
கலியூழி - கலியுகம்
கலவி மொழி - தலைவன் தலைவியர் கலத்தற்கான மொழி
கலினம் - கடிவாளம்
கலித்து - கருவங்கொண்டு
கல்லணை - சேணம்
கவயம் - கவசம்
கவிழ்ந்தே - குனிந்தே
கவுமுதி விழவு - சந்திர விழா
கழிதுயில் நோன்பு - மிகுதுயில் விரதம்
கழுகுப் புகை - கழுகாம் புகை
கற்பு - பாடம்; படிப்பினை; புத்தி
கற்பில் - கற்பில்லாத
கற்றை - தொகுதி
கறைகெழு - மாசுமிக்க
கனத்தது - கனமானது
கனபுலம் - நிறைந்த அறிவு

### கா

கா் - சோலை
காசமலர் - நாணல் மலர்
காட்டுமா - காட்டு விலங்குகள்
காடுறை களிறு - காட்டில் வதியும் ஆண் யானை
காண்டி - பார்
காயம் - உடம்பு
கால் - வெளிவிடுகின்ற
கால் கொண்டது - தொடங்கியது
கான்முளை - புதல்வன்
கான்ற - வெளிவந்த
காற்கும் - காலுக்கும்

## கி

கிளப்பன் - சொல்லுவன்

## கு

குஞ்சரம் - யானை
குஞ்சரக்குருளை - யானைக்கன்று
குடந்தம்பட்ட - கைகூப்பி மெய் வளைத்து வழிபட்ட
குணதிசை - கீழ்த்திசை
குதட்டும் - மெல்லும்
குயிற்றிய - பதித்த
குரிசில் - ஆண்மக்களிற் சிறந்தவன்
குறி - இலட்சியம்
குறியினிற் பிழைத்து - குறி தவறி
குறுகுறு புறவு - குறுகக் குறுக நடந்து செல்லும் புறா
குனித்தே - வளைத்தே

## கூ

கூதிர்காலம் - ஐப்பசி கார்த்திகை மாதங்கள்
கூர்ந்து - நிறைந்து
கூற்று - யமன்

## கெ

கெட்டது - கெட்டுப்போனது
கெழுமிய - நிறைந்த

## கே

கேண்மோ - கேள்
கேதுவை - மலயகேதுவை
கேள்வி மறையோர் - சுரோத்திரியர்
கேளார் - பகைவர்

## கை

கையுறும் - வந்தடையும்

## கொ

கொடிக்கரம் - கொடிபோன்ற கை
கொடு வாய் - கொடிய வாய்
கொண்டல் - மேகம்
கொல மலெ - குலமலை
கொழுந்தானை - கொழுவிய ஆடை
கொளுவி - மூட்டி

## கோ

கோட்டியும் - வளைத்தும்
கோடு - கொம்பு
கோடு கூடாத - இருதலையும் முற்றாத
கோயிலை - அரண்மனையை
கோளரி - சிங்கம்
கோறல் - கொல்லல்

## ச

சகத்திறை - உலகின் அரசன்
சத்திரம் - அமைச்சவாள்
சந்திரக்கோள் - சந்திர கிரகணம்
சந்திரலேகை - சந்திரகுப்த மன்னனின் பிடி
சந்து - சமாதானம்
சபக்கம் - தன் பக்கம்
சலம் - வஞ்சம்

## சா

சாத்தியம் - குறிக்கோள்
சாதனம் - ஏது
சாந்தம்பாவம் - பாவம் ஒழிக
சாப்பறை - சாவின் பின்னர் அடிக்கப்படும் பறை
சாரன் - ஒற்றன்
சால்பில்லான் - நிறைவில்லான்
சாலார் - பகைவர்
சாவக நோன்பினர் - இல்லறத்தில் இருந்தே விரதங் காப்போர்

## சி

சிக்கென - கெட்டியாக
சிதைக்க - அழிக்க

## சீ

சீர்த்தி - மிகுபுகழ்
சீயம் - சிங்கம்
சீரைபுக்க - தராசில் ஏறிய

## சு

சுகாங்கம் - சந்திரகுப்தன்மாளிகை
சுகிர்பெற - வகைபட
சுருங்கை - நிலத்துள் அமைத்த கரந்துறை வீடு
சுளித்து - முறித்து
சுறவினம் - சுறாமீனின் கூட்டம்

## சூ

சூச்சிலே - சூழ்ச்சியிலே
சூலம் - கழு
சூழ்ச்சி - அரசியல் தந்திரம்
சூழ்ச்சிச்சிறுவிதை - சூழ்ச்சியாகிய சிறிய விதை

## செ

செக்கர் - செவ்வானம்
செஞ்சுணம் - சிந்துரப்பொடி
செயற்பயன் - செயலுக்குத்தக்க பயன்
செயிர் - குற்றம்
செல்வி - கங்கை
செவ்வி - சமயம்
சென்றீ - போ

## சே

சேய்த்து - தூரத்தில் உள்ளது
சேரலர் - பகைவர்

## ஞெ

ஞெமுங்க - அழுந்த
ஞெரேரென - விரைவாக (விரைவுக் குறிப்பு)

## த

தகவிலை - தகுதியில்லை
தத்துறு - துன்பம் பொருந்திய
தட்பம் - குளிர்ச்சி
தண்டிகை - சிறுகோல்
தணந்தேன் - நீங்கினேன்
தணிப்பில் - குறைவில்லாத
தந்திர நீதி - அரசியலொடு பொருந்திய நயஆட்சி
தந்திரமனைத்தும் - அதிகாரவருக்கமெல்லாம்; படையனைத்தும்
தந்திரவுத்தி - அரசியல் முறைகள்
தப்பிய - தப்புதற்கு
தப்பிய மதி - தவறிய புத்தி
தபுக்கும் - கொல்லும்
தமாலம் - பச்சிலை மரம்
தரிக்குநன் - பூணுகின்றவன்
தருப்பைமுட்டி - தருப்பைக் கற்றை
தலைக்கீடு - போலிக் காரணம்; சாக்குப்போக்கு
தலைநிலச்சான்றோர் - உத்தமர்
தலையிரவல் - தலைதப்பாது
தவசித்தரு - உலவை,
வற்றியுலர்ந்த மரம்
தறுகண் - அஞ்சாமை
தனிச்சீர் - தனிச் சிறப்பு

## தா

தாழாது - காலம்போக்காது
தாழ்ச்சி - தாமதம்
தானம் - மதநீர்
தான்தோன்றி - சுயம்பு

## தி

திப்பியம் - திவ்வியம்
திமிலகுமிலம் - பேராரவாரம்
திரிகை - சக்கரம்
திருமி - திரும்பி
திருமுன் - சமுகம்

## தீ

தீக்குரல் - அவலக்குரல்
தீம்புகை - நறுமணப்புகை
தீரிய - தீர்த்தற்கு

## து

துஞ்சி - இறந்து
துணுக்கம் - அச்சம்
துய்த்தல் - அநுபவித்தல்
துலைமிசை - தராசின்மீது
துளங்கல் - அசைதல்
துறக்கம் - சுவர்க்கம்

## தூ

தூங்கின - அசைந்தன
தூணி - அம்புப்புட்டில்
தூமகேது - வால்நட்சத்திரம், கரந்துறைகோள் நான்கனுள் ஒன்று.
தூர்த்தர் - கொடியோர்

## தெ

தெளிக்கும் - தெளிவிக்கும்
தொடையல் - மாலை

## தொ

தொகுதி - கூட்டம்

## தோ

தோமில் - குற்றமில்லாத

## ந

நச்சுக்கன்னி - விஷக்குமரி
நச்சுதல் - விரும்புதல்
நசை - விருப்பம்
நட்டு - நட்புக்கொண்டு
நடலை - துன்பம்
நடி - சூத்திரதாரன் மனைவி
நந்தி - பெருகி
நமர் - நம்மைச் சேர்ந்தவர்
நமனார் பொழில் - எமனுலகம்
நம்கடை - நமது கடைவாயில்
நம்பகம் - நம்பத்தகுந்த வுளம்
நம்பலை - நம்பாய்
நயவிதை - அரசியல் வித்து
நயன் - நன்மை
நரை - வெண்மயிர்
நல்கும் - காக்கும்
நலதே - நல்லதே
நவியம் - கோடரி
நவை - குற்றம்
நள்ளரு - கிட்டுதற்கரிய
நள்ளெரி - செறிந்த தீ
நளிர்மதி - குளிர்ந்த சந்திரன்
நற்றனு - நல்லவில்
நன்மண யானை - கந்த கஜம்
நன்னர் - நன்றாய்
நன்னா - நல்ல நாக்கு

## நா

நாகநதி - தேவகங்கை
நாம் - அச்சம்
நார் - அன்பு
நாரால் - அன்பால்
நாள் - திதி
நாற - வீச
நாறும் - தோன்றும்; முளைக்கும்

## நி

நிரை - வரிசை
நிலக்கமர் - நிலவெடிப்பு
நினவும் - உன்னுடையனவும்
நின்மின் - நில்லுங்கள்

## நீ

நீளார் - நீட்சிபொருந்திய
நீறு - சாம்பல்

## நு

நுங்கிய - விழுங்கிய
நுண்புல வலி - நுண்ணிய மதி வன்மை
நுதி - நுனி; கூர்மை
நுவலரு - சொல்லுதற்கரிய

## நெ

நெட்டி - தள்ளி
நெடுமொழிக் கடல் - வஞ்சினக் கடல்

நெறிக்கொள் - வழியைக் காண்பி

## நே

நேடுதல் - தேடுதல்

## நொ

நொதுமல் - அயன்மை (Strangeness)

## நோ

நோன்றாள் - வலிய முயற்சி

## ப

பகல் - ஒளி
பகவர் - அறுகுணமுடையோர் (ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்பன)
பகற்செய்மண்டிலம் - சூரியன்
பட்டது - செவிப்பட்டது
படுக்கென - கொல்க என
பண்ணுறுத்தல் - அலங்கரித்தல்
பணாடவி - படத்தின் தொகுதி
பணி - ஆபரணம்
ப்க்தர் - தொண்டர்
பந்தி - வரிசை
பம்பிய - நிறைந்தன
பயிற்றியது - கற்பித்தது
பரத இன்மொழி - பரத வாக்கியம் மங்கல மொழி
பருவரல் - துன்பம்
பலமரம் - பல விருட்சம்
பழங்கண் - துன்பம்
பழங் கா - பழஞ்சோலை
பனவர் - பார்ப்பார்

## பா

பாகதமொளி - பிராகிருத மொழி
பாசிலை - பசிய இலை
பாதிரிரசம் - பாதிரிமலர்த் தேன், பாடலிபுரத்துச் செய்தி
பாம்பரசோடே - பாம்போடும் அரசனோடும்
பான்முகில் - வெண்மேகம்

## பி

பிடி - பெண்யானை, சந்திரலேகை
பிலிற்றும் - துளிக்கும்

## பீ

பீடு - பெருமை

## பு

புடவி - பூமி
புடைபடும் - அடிபடும்
புதன் - ஒரு கோள்; புலவன்
புதைத்தும் - மறைத்தும்
புந்தி - புத்தி
புரந்தும் - காத்தும்
புரைதீர் - குற்றந்தீர்ந்த
புலவாளி - அறிவாகின்ற அம்பு
புளகம் - மயிர்க்கூச்சு
புளினம் - மணற்குன்று
புற்கெனும் - ஒளிகுன்றிக் காணும்; பயனிழந்து நிற்கும்.

## பெ

பெட்பு - விருப்பம்
பெரும்பொறி - பெரும் வரிசை
பெருவிழவு - பெரிய விழா

## பே

பேஎ - அச்சம்

## பை

பைஞ்ஞிலம் - மக்கட்டொகுதி

## பொ

பொன்னின் தொடர் - பொற்சங்கிலி
பொறுத்தி - தாங்குவாய்

## போ

போக்கி - பின்னர்

போலிக்கலாம் - போலிச்சண்டை
போன்ம் - போலும்

### ம

மடவோய் - அறிவிலி
மண்டிலம் - அரச யந்திரம், மந்திர வட்டம்
மண்ணின - கழுவின
மணிக்கலனாக்குநர் - மணியணி செய்கின்றவர்
மணிச்சாலி - மணியையுடைய சாலி, (மணியென்றது நென் மணியை)
மந்தணம் - மறை, இரகசியம்
மந்திரம் போத்தும் - மறைகாக்கும், மந்திரத்தை உருவிடும்.
மயில் மதம் - மயிலின் மதம்
மரபு - குலம், வங்கிசம்
மருப்பு - கொம்பு
மரை - தாமரை
மலர்த்தொடை - மலர்மாலை
மலைத்தலை - மலைமீது
மழ - இளமை
மறுகு - தெரு
மறுக்கம் - கலக்கம்
மறைபொருளெழுத்து - மறை பொருட்கடிதம்
மன்பகை - அரசர் மீதுள்ள பகை
மன்ற - தேற்றம், திண்ணம்
மன்னியோள் - பொருந்தியவள்
மனையை - மனைவியை

### மா

மாசுணம் - பாம்பு
மாடெலாம் - பக்கமெலாம்
மாணக் கொடிது - மிகக் கொடிது
மாணுளைப் பரிமா - நல்ல பிடரி மயிரினையுடைய குதிரை
மாதொரு பாகன் - சிவபெருமான்
மாநவை - பெருங்குற்றம்
மாவெளம் - மிகுவெள்ளம்

மாற்றான் - பகைவன்

### மி

மிகை - மிகுதி
மிடற்றுக் கழலை - கழுத்துக் கழலை
மிதுனத் தொடர்பில் - மிதுன லக்கினத்தில்
மிலைந்த - சூடிய
மிழற்றும் - ஒலிக்கின்ற, பாடுகின்ற

### மீ

மீனினம் - நட்சத்திரக்கூட்டம்

### மு

முக்காடு - தலைமூடி
முட்டு - தீட்டு
முத்திரைப்பேழை - முத்திரைப் பெட்டி
முதலிகள் - முதல்வர், தலைவர்
முதிர்கதிர் - முற்றியகதிர்
முதுக்குறைவு - பேரறிவு
முதுகாடு - சுடுகாடு
முருக்கி - கொன்று
முளிபுல் - உலர்ந்தபுல்
முறுவல் - புன்சிரிப்பு
முன்னடி - முன்பட்ட அடி
முன்னரை - முற்பகுதி
முனிவன் - கோபிப்பன்

### மூ

மூர்த்தம் - சிறிதுபோழ்து
மொழிமிடை - மொழிகள்சேர்ந்த

### மை

மைக்கலன் - மைக்கூடு

### வ

வஞ்சனைவடு - வஞ்சனைமிக்க சாணக்கியன்
வஞ்சினம் - சபதம், சூளுரை
வடு - சாணக்கியன் (Brag)

வண்ணம் - நிறம்
வந்தனர் வந்தனர் - வந்து வந்து
வம் - வாருங்கள்
வயம் - வலி
வயநிறம் - வலிமிக்கமார்பு
வயி - வழி
வருவ - வருபவை
வரை - மலை
வரையாவளம் - எல்லையில்லாத செல்வம்
வலப்பால் - வலப்பக்கம்
வலாற்காரம் - வலிந்தாற்றல்
வலித்தி - கூறு
வலிப்பன் - கூறுவன்
வல்லே - விரைவில்
வழீஇ - வழுக்கி
வறிதிரு - சிறிதிரு
வறிதும் - சிறிதும்

## வா

வாக்கின் செல்வி - நாமகள்
வாணிகச்சாத்து - வாணிகர் கூட்டம்
வாதி - இராக்கதமலயகேது
வார்த்தும் - விட்டும்
வார்த்த - விட்ட
வாய்தலில் - வாயிலில்
வார்ந்தன - விட்டன
வாளி - அம்பு

## வி

விசும்புநூல் - வானநூல்
விட்டில் - விளக்குப்பூச்சி, பதங்கம்
விடச்சுண்ணம் - விஷப்பொடி
விண்டது - கூறியது
விண்ணப்பம் - வேண்டுகோள்
வித்தியோன் - விதைத்தவன்
விதிர்விதிர்ப்பு - நடுநடுக்கம்
விதியார் - விதி
விதிர்ப்பன் - நடுங்குவன்
விநயவிழுக்கலன் - அடக்கமாம் நல்லணி
விபக்கம் - பகைவர் பக்கம்
வியாழன் - பிருகஸ்பதி
விரகினன் - தந்திரசாலி
விரகு - தந்திரம்
விரிச்சி - வாய்ச்சொல்
வில்லிடு - ஒளிவிடுகின்ற
விழுக்கலை - நற்கலை
விழுக்கொடை - உயர்ந்த கொடை
விழுப்பணி - மேலான பணி
விழுப்பயன் - நற்பயன்
விழுப்பேறு - நற்பேறு
விழுமதி - கூர்மதி
விழுமியோர் - மேலோர்
விழைந்த - விரும்பிய
விளர்த்தும் - வெளுத்தும்
விள்ளுவன் - கூறுவன்

## வீ

வீடுவன் - இறப்பன்
வீயா - குறையாத
வீயார் - இறவார்
வீறும் - சிறக்கும்

## வெ

வெரூஉக்கொளா - அச்சமும் அருவருப்புமில்லாத
வெள்ளிநீதி - சுக்கிரநீதி
வேத்தியல் - அரசியல்
வேள்விச்சமிதை - வேள்விக்குரிய அரசு, பலாசு, இவற்றின் உலர்ந்துதிர்ந்த சுள்ளிகள்

## யோ

யோசனை - நாலு குரோசம்
யவனர் - யவன நாட்டினர்
யார் பிறர் - வேறு யார்?



## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை – 600 113

### அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் | 125.00 |
| சங்க இலக்கிய ஆய்வுகள் | 30.00 |
| தொல்காப்பிய ஆய்வுகள் | 20.00 |
| Indian Epistemology | 125.00 |
| பெ.நா. அப்புசுவாமியின் அறிவியல் கட்டுரைகள் தொகுதி-2 | 80.00 |
| தாய்நாட்டிலும் மேலை நாடுகளிலும் தமிழியல் ஆய்வு | 75.00 |
| ஜப்பானியக் காதல் பாடல்கள் | 75.00 |
| குறுந்தொகை - ஒரு நுண்ணாய்வு | 80.00 |
| இ.ப.த. மன்ற ஆய்வுக் கோவை 1970 தொகுதி-3 | 50.00 |
| இ.ப.த. மன்ற ஆய்வுக்கோவை 1970 தொகுதி-2 | 70.00 |
| இ.ப.த. மன்ற ஆய்வுக்கோவை 1970 தொகுதி-1 | 75.00 |
| இ.ப.த. மன்ற ஆய்வுக்கோவை 1969 தொகுதி-2 | 65.00 |
| இ.ப.த. மன்ற ஆய்வுக்கோவை 1969 தொகுதி-1 | 70.00 |
| சங்க கால மன்னர்களின் காலநிலை தொகுதி-2 | 64.00 |
| சங்க கால மன்னர்களின் காலநிலை தொகுதி-1 | 56.00 |
| இராமாயணம் - தோற்பாவை நிழற்கூத்து | 125.00 |
| லவகுச நாடகம் | 30.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-4 | 110.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-3 | 110.00 |
| எட்டையபுரப் பள்ளு | 60.00 |
| திருக்குறள் பூரணலிங்கம்பிள்ளை ஆங்கில மொழிபெயர்ப்பு | 100.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் தொகுதி-2 | 65.00 |
| நானும் என் கவிதையும் | 40.00 |
| On Translation | 95.00 |
| ஐங்குறுநூறு மூலமும் உரையும் | 85.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| Literary Criticism in Tamil and Sanskrit | 45.00 |
| செந்தமிழ் அகராதி | 150.00 |
| சொற்பிறப்பு - ஒப்பியல் தமிழ் அகராதி | 200.00 |
| தமிழ்ச்சொற் பிறப்பாராய்ச்சி | 30.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-2 | 110.00 |
| பிரதிமா ஸ்வப்ன வாசவதத்தம் | 55.00 |
| அறநூல் | 38.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் நாடகங்கள் | 75.00 |
| பொருள் புதிது | 35.00 |
| ஆளும் தமிழ் | 28.00 |

**Pub.No. 385** முத்ரா ராக்ஷஸம் **Rs. 40.00**